திருத்தக்கதேவரியற்றிய

# சீவகசிந்தாமணி மூலமும்

மதுரையாசிரியர் - பாரத்துவாசி

## நச்சினார்க்கினியருரையும்.


சென்னை, ப்ரெஸிடென்ஸிகாலேஜ் தமிழ்ப் பண்டிதராகிய

உத்தமதானபுரம்,

**வே. சாமிநாதையரால்**

தாம் நூதனமாக எழுதிய

பலவகைக் குறிப்புக்களுடன்



சென்னை:

ப்ரெஸிடென்ஸி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றன.

இரண்டாம் பதிப்பு.

பிலவங்க௵ மார்கழி௴.

1907.

விலை ரூபா ௯.

# இப்புத்தகத்தில் அடங்கியவை.

# இரண்டாம்பதிப்பின் முகவுரை.

"ஆதியிற் றமிழ்நூ லகத்தியற் குணர்த்திய
மாதொரு பாகனை வழுத்துதும்
போதமெய்ஞ் ஞான நலம்பெறற் பொருட்டே."

1887-ம் வருஷத்தில் இந்நூலும் உரையும் பதிப்பிக்கப்பெற்று நிறைவேறியபின்பு காலக்கிரமத்தில் எனக்குக்கிடைத்த ஏட்டுப்பிரதிகள்-௧௭; அவற்றாலும், செய்துவந்த பழைய நூல்களின் ஆராய்ச்சி முதலியவற்றாலும் இதன்மூலமுதலியன அடைந்த திருத்தங்கள் பல; முன்பு விளங்காமலிருந்த மேற்கோள்களிற் பெரும்பாலன பின்புவிளங்கின; இவையும், ஸ்ரீபுராணத்திலுள்ள சீவகசரித்திரமும், பிறநூல்களிலும் இந்நூலிலுமுள்ள ஒற்றுமைப் பகுதிகளைப் புலப்படுத்துவதாகிய சீவகசிந்தாமணி ஆராய்ச்சிவிளக்கமென்பதும் மூலத்திலும் உரையிலும் உள்ள கடினமான பாகங்களின் பொருள்களைப் பெரும்பாலும் புலப்படுத்தும் விசேடக்குறிப்பும், அவ்விரண்டிலுமுள்ள அரும்பதங்கள், சிறந்தவாக்கியங்கள், விஷயங்கள், பழமொழிகள், அபிதானங்கள் முதலியவற்றைத் தெரிவிப்பதாகிய அரும்பத அகராதிமுதலியன என்னும்பகுதியும், பிறவும் இப்பதிப்பில் நூதனமாகச்சேர்க்கப்பெற்றவை.

தமிழில் நல்லபயிற்சியுள்ளவர்களுக்கு மிக்க இன்பத்தையும் படிப்பவர்களுக்கு நல்ல ஊக்கத்தையும் பயிற்சியையுமுண்டுபண்ணுவதன்றிப் பண்டைக்காலத்திலிருந்த பெரியோர்களுடைய இயல்பையும் ஆராய்ச்சிவன்மையையும் மேற்கூறியபகுதிகள் நன்குபுலப்படுத்தும்; தமிழ்ச்சுவையை நுகர்ந்து ஆனந்திப்பவர்களுக்கு இவை நல்விருந்தாக இருக்குமென்பது வெளிப்படை.

நூலும் உரையும் ஒருவருடத்திற்குமுன்பே பதிப்பிக்கப்பெற்று நிறைவேறியும், ஆராய்ச்சிவிளக்கம் முதலியவற்றைப் பதிப்பித்துச் சேர்த்தே புத்தகத்தை வெளிப்படுத்தவேண்டுமென்று வித்தியாவிநோதர்களாகிய பாலைக்காட்டு, ம-ள-ள-ஸ்ரீ ராவ்பகதூர் பா. ஞ சின்னஸாமிபிள்ளையவர்களும், சென்னை Senior Veterinary Assistant ஆகிய ம-ள-ள-ஸ்ரீ வெ. ப. சுப்பிரமணியமுதலியாரவர்களும் இன்னும் சில அன்பர்களும் பலமுறை வற்புறுத்தினார்கள்

## இப்பதிப்பிற்குக் கிடைத்த ஏட்டுப்பிரதிகள்.

| எண். | செய்யுளளவு. முதல். | இறுதி. | பிரதிக்கு உரியவர்கள். | பிரதி கிடைக்கும்படி செய்தவர்கள். |
|---|---|---|---|---|
| க. | 1 | 3145 | திருவாவடுதுறை ஆதீனத்து மஹாவித்வான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள். | கும்பகோணம் காலேஜ் தமிழ்ப்பண்டிதராயிருந்த ஸ்ரீ சி. தியாகராஜசெட்டியாரவர்கள். |
| உ. | 2907 | ,, | கொழும்புத்துறை, மு. குமாரஸாமிசெட்டியாரவர்கள். | உரியவர்களே. |
| ங. | 2 | 1220 | தருமபுர ஆதீனத்துத் தலைவர்கள். | ம-ள-ள-ஸ்ரீ ம. வீ. இராமாநுஜாசாரியரவர்கள். |
| ச. | 1428 | 2928 | ,, ,, | ,, ,, |
| ரு. | 13 | 723 | அழகிய சிற்றம்பலக்கவிராயரவர்கள், மிதிலைப்பட்டி. | ,, அப்பாப்பிள்ளையவர்கள், குன்றக்குடி. |
| சா. | 1412 | 2598 | ,, ,, | ,, ,, |
| எ. | 1963 | 3125 | செங்கோட்டைக்கவிராஜ பண்டாரமவர்கள். | ,, திரிகூடராஜப்பக் கவிராயரவர்கள், மேலகரம். |
| அ. | 1342 | 1986 | கடையநல்லூர், முத்துகிருஷ்ண வாத்தியாரவர்கள். | ,, ,, |
| கூ. | 1 | 1556 | சென்னை, பச்சையப்பவாத்தியாரவர்கள். | ,, முத்துக்குமாரஸாமி முதலியாரவர்கள், சென்னை. |
| கo. | 1 | 1554 | வானமாமலைத்தாதர், கணக்கு நாங்குனேரி. | உரியவரே. |
| கக. | 1412 | 2227 | சேலம் அப்பாசாமிபிள்ளையவர்கள். | ,, குருஸாமிபிள்ளையவர்கள், சேலம். |
| கஉ. | 1 | 1412 | திருநெல்வேலி, திருவம்பலத்தின்னமுதம்பிள்ளையவர்கள். | ,, வி. விசுவநாதசாஸ்திரிகள், திருவல்லிக்கேணி. |
| கங. | 1 | 1335 | திருநெல்வேலி வண்ணாரப்பேட்டை, திருப்பாற்கடனாதன்கவிராயரவர்கள். | ,, கவிராஜ நெல்லையப்பபிள்ளையவர்கள், திருநெல்வேலி. |
| கச. | 2102 | 3145 | ம-ள-ள-ஸ்ரீ. அப்பாஸாமி நயினாரவர்கள், வீரேர். | உரியவர்களே. |
| கரு. | 1 | ,, | சேலம், இராமசாமிமுதலியாரவர்கள். | உரியவர்களே. |
| கசா. | 1 | 2421 | சென்னை, பச்சையப்பவாத்தியாரவர்கள். | ம-ள-ள-ஸ்ரீ, முத்துக்குமாரஸாமி முதலியாரவர்கள். |
| கஎ. | 1 | 2380 | திருநெல்வேலி அம்பலவாணகவிராயரவர்கள். | ,, கவிராஜ நெல்லையப்பபிள்ளையவர்கள். |

இவற்றுள், முதலாவதுபிரதியும் பதின்மூன்றாவதுபிரதியும் உரியவர்களாலேயே எழுதப்பெற்றுள்ளவை; முதல் இரண்டுபிரதிகளும் மூலமும் பொழிப்புரையும் உள்ளவை. ங - வதுமுதலிய பன்னிரண்டுபிரதிகளும், மூல

# முதற்பதிப்பின் முகவுரை.

செந்தமிழ் மொழியிற் சிறந்துவிளங்கும் பழைய *காப்பியமைந்தனுள் முந்தியதாகிய இந்தச் சீவகசிந்தாமணி என்பது திருத்தக்கதேவர் என்னுஞ் சைனமுனிவரால் இயற்றப்பட்டது. இது பழைய இலக்கியவுரைகளிலும் இலக்கணவுரைகளிலும் உரையாசிரியர்களால் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டுள்ள பிரமாணநூல்களுள் ஒன்று; முற்காலத்து முதல் இடை கடை என்னும் முச்சங்கத்தும் எழுந்தருளியிருந்து தமிழாராய்ந்த தெய்வப்புலவர்கள் அருளிச்செய்த இலக்கியங்கள்போன்று செந்தமிழ்நடையிற் சிறந்துள்ளது; வடமொழியில் வான்மீகம்போல, எல்லாவருணனைகளும் தன்பால் அமையப் பெற்றிருத்தலின், மகாகாவியமென்று கூறப்பட்டிருத்தலன்றி, பிற்காலத்து அதிமதுரமான காப்பியங்களியற்றிய மகாகவிகள் பலர்க்கும் இன்ன இன்னவற்றை இன்ன இன்னவாறு வருணித்துப் பாடுகவென அவ்வான்மீகம்போல வழிகாட்டியதும் இந்நூலே யென்பர்.

இந்நூல் சீவகனென்னும் ஓரரசன் பிறந்ததுமுதல் வீடுபெற்றது இறுதியாகவுள்ள கதையைக் கூறும்.

இந்நூலில், அரசன் அமைச்சரைப் பலமுறை ஆராய்ந்து தெளியல்வேண்டுமென்பதும், பெண்வழிச்சேறல் பெருந்துயர்விளைக்குமென்பதும், தன்னாசிரியன் கட்டளைப்படியே எப்பொழுதும் ஒழுகல்வேண்டுமென்பதும், பகையை வெல்லக்கருதினோன் உரிய காலமும் இடமும் வாய்க்குமளவுந் தன்னெண்ணத்தை வெளிப்படுத்தாதிருத்தல் வேண்டுமென்பதும், பிறவுயிர்களுக்குத் துன்பம் வரின் உடனே தீர்த்தற்கு முயலல்வேண்டுமென்பதும், வருத்தும்படி நேரினுந் தனக்கு ஒருவாற்றாலும் பகைவரல்லாதவரைச் சிறிதும் வருத்தலாகாதென்பதும், தந்தைதாயர்சொல்லைத் தலையாகக் கொள்ளல்வேண்டுமென்பதும், அறிவும் அன்புமுள்ள துணைவனிருந்தால் தானெண்ணியவற்றையெல்லாம் எளிதில் முடித்துக்

* காப்பியமைந்தாவன: சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி என்பன.

கொள்ளலாமென்பதும், தனக்கு இன்பத்தைப் பயக்கவல்லதனிடத்து முறைமீறிய பற்றுதலும் வருத்தமுமின்றி எல்லாம் சமநிலையிற் பயனொன்று கருதாமற் செய்யவேண்டுமென்பதும், எவ்வுயிர்களிடத்தும் எப்பொழுதும் அருளுடைமை பூணுதல் வேண்டுமென்பதும், சுற்றத் தினரைத் தாங்குதலைச் செய்தல் வேண்டுமென்பதும், தீவினைச்செய்வோ னைக் காணின் ஒறுக்க எண்ணாது அவனை நல்வழிப்படுத்த முயலல் வேண்டுமென்பதும், கள்ளுண்ணாதிருத்தல் வேண்டுமென்பதும், இவைபோல்வன பிறவும் நன்கு விளக்குகின்றன.

இந்நூலாசிரியர், இச்சரிதத்தை இன்ன நூலிலிருந்தெடுத்து யாம் பாடினேமென்று கூறாமையின், இதற்கு முதனூல் இன்னதென்று நிச்சயிக்கக் கூடவில்லை. ஆயினும் வடமொழியிலே க்ஷத்திரசூடாமணி, கத்தியசிந்தாமணி, ஜீவந்தர நாடகம், ஜீவந்தரசம்பு என நான்குநூல்கள் உள்ளன. அவை களெல்லாம் இச்சீவகன்சரிதமே கூறுகின்றன. *மகாபுராணத் தின் ஒருபாகத்தும், மணிப்பிரவாளமாகிய ஸ்ரீபுராணத்தின் ஒருபாக த்தும் இச்சரிதம் கூறப்பட்டுள்ளது. அவற்றிற்கும் இதற்கும் கதை யில் வேறுபாடுகளுண்டு. அந்நூல்களுள் க்ஷத்திரசூடாமணி என் பதை இதற்கு முதனூலென்று சிலர் கூறுகின்றனர். தமிழிற் சிந்தாமணிமாலையென்று ஒருநூல் வழங்குகின்றது. அது சுத்தத் தமிழ்நடையுள்ளதன்று.

இந்நூல் முதலிற் கடவுள்வாழ்த்து முதலியனவும் கதையைத் தொகுத்துக்கூறுவதாகிய பதிகமும் முறையே அமையப்பெற்று, பின்னர் நாமகளிலம்பகமுதலிய பதின்மூன்று இலம்பகங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. இதன் செய்யுட்டொகை, ௩௧௪௫; திருத்தக்க தேவர் இயற்றிய செய்யுள் இரண்டாயிரத்தெழுநூறேயென்று "முந்நீர்வலம்புரி" என்னுஞ் செய்யுளுரையில் நச்சினார்க்கினியர் எழுதியிருத்தலால், மற்றவைகள் பிறரால் செய்யப்பட்டவையெ ன்று தோற்றுகின்றன.

இச்சீவகசிந்தாமணியை உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க் கினியருரையுடன் பலபிரதிகளைக்கொண்டு கண்டு பரிசோ தித்து, எழுதுவோரால் சேர்ந்த வழுக்களை மாற்றி, பலர்க்கும் பயன்

* இம்மகாபுராணமும் ஸ்ரீபுராணமும் ஜைனசமயத்தாரியற்றிய பழைய நூல்கள்.

படும் வண்ணம் அச்சிடுவிக்க முயலும்படி சிலவருடத்திற்குமுன், சேலம் ம-ா-ா-ஸ்ரீ இராமசுவாமிமுதலியாரவர்கள் பலமுறை வற்புறுத்திக்கூறி, எனக்குத் தம்பாலிருந்த கையெழுத்துப் பிரதியையுங் கொடுத்தார்கள்.

யான் அவ்வாறு செய்தற்கு அநருகனாயினும், உலோகோபகாரிகளாகிய அவர்கள்சொல்லை மறுத்தற்கஞ்சியும், கல்விமான்களுக்குக் கருவூலம்போலும் இந்நூல் உரையுடனே நின்றுநிலவுதல்குறித்தும் ஒருவாறு அவ்வண்ணஞ் செய்யலாமென்று துணிந்து முயன்றுவருகையில், இத் தமிழ்நாட்டுள்ள கல்வியறிவொழுக்கங்களான் ஆன்ற விவேகிகள்பலர் இம்முயற்சி இனிதுபயன்படும்வண்ணம் தம்பாலுள்ள பழைய கையெழுத்துப் பிரதிகளை அன்போடு கொடுத்தார்கள். அவையனைத்தையுங்கைக்கொண்டு ஒப்புநோக்கி வந்தேன்.

அப்பொழுது என்வேண்டுகோளுக்கிரங்கித் திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து ஸ்ரீலஸ்ரீ - சுப்பிரமணிய தேசிகமூர்த்திகள், தங்கள் புத்தகசாலையிலிருந்த புத்தகங்களுள் எனக்கு வேண்டுவனவற்றையும், திருநெல்வேலிமுதலிய பிறவிடங்களிலிருந்து வருவித்த சிலபிரதிகளையும் கட்டளையிட்டார்கள். இம்முயற்சியில் யான் மனந்தளராவண்ணம் இடையிடையே அவர்கள் செய்துவந்த பேருதவிகள் பல.

எழுத்துஞ் சொல்லும் மிகுந்தும் குறைந்தும் பிறழ்ந்தும் திரிந்தும் பலவாறு வேறுபட்டுக் கிலமுற்றிருந்த இந்நூலுரைப் பழையபிரதிகள் பலவற்றையும் பலகால் ஒப்புநோக்கி இடையறாது பரிசோதனை செய்துவந்த பொழுது, கவிகளின் சுத்தவடிவத்தையும் உரையின் சுத்தவடிவத்தையுங் கண்டுபிடித்தற்கும், உரையினுள் விசேடவுரையின்னது பொழிப்புரையின்னதென்று பிரித்தறிதற்கும், மேற்கோள்களின் முதலிறுதிகளைத் தெரிந்துகோடற்கும், பொழிப்புரையை மூலத்தோடும் இயைத்துப்பார்த்தற்கும், பிழையைப் பிழையென்று நிச்சயித்துப் பரிகரித்தற்கும், பொருள்கோடற்கும் எடுத்துக்கொண்ட முயற்சியும் அடைந்தவருத்தமும் பல. அப்படியடைந்தும் சிலவிடத்துள்ள இசைத்தமிழ் நாடகத்தமிழின் பாகுபாடுகளும், மற்றுஞ் சிலபாகமும் நன்றாக விளங்கவில்லை. அதற்குக்காரணம் அவ்விசைத்தமிழ் நாடகத்தமிழ் நூல் முதலியவைகள் இக்காலத்துக் கிடையாமையே.

பொருளோடு கல்விப்பொருளும் ஒருங்குடைய கனவான்கள் பலர் கையொப்பஞ்செய்து முற்பணமளித்தார்கள். இக்காலத்தில் அவர்கள்செய்த அவ்வுதவியை யான் எக்காலத்தும் மறவாதிருப்பதன்றி அவர்களுக்கு என்னாற் செய்தற்குரிய பிரதியுபகாரம் யாது?

யான் எழுதியனுப்பும் மேற்பிரதிக்கு அச்சுப்பிரதி வேறுபடா வண்ணம், சென்னைத் திராவிடரத்நாகர அச்சுக்கூடத்திலிருந்து அவற்றைப் பலமுறை ஒப்புநோக்கிப் பேருதவிசெய்துவந்த தேரழுந்தூர் ப்ரஹ்மஸ்ரீ சக்கரவர்த்தி இராஜகோபாலாசாரியரையும், திருமாணூர் ப்ரஹ்மஸ்ரீ கிருஷ்ணையரையும் ஒருபொழுதும்மறவேன்.

ஒன்றுக்கும் பற்றாத சிறியேனை இம்முயற்சியிற் புகுத்தி நடாத்தி நிறைவேற்றியருளிய எம்பெருமானது திருவருளையும் குருவருளையும் எக்காலத்துஞ் சிந்தித்து வந்திக்கின்றேன்.

எனக்குக் கிடைத்த பிரதிகளுள் நச்சினார்க்கினியருரையோடு கூடிய சீவகசிந்தாமணிப் பிரதிகளாவன:—

| | | | | |
|---|---|---|---|---|
| | திருவாவடுதுறையாதீனத்து | | | |
| ஸ்ரீலஸ்ரீ - | சுப்பிரமணிய தேசிகமூர்த்திகள் ... | ... | பிரதி | க. |
| | ஷை ஆதீனத்து மஹாவித்துவான் | | | |
| ம-௱-௱-ஸ்ரீ, | மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் | ... | ,, | க. |
| | திரிசிரபுரம் | | | |
| ,, | சி. தியாகராசசெட்டியாரவர்கள் | ... | ,, | க. |
| | யாழ்ப்பாணம் | | | |
| ,, | சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கள் ... | | ,, | உ. |
| ,, | மழவை - மகாலிங்கையரவர்கள் | ... | ,, | க. |
| ,, | அஷ்டாவதானம், சபாபதிமுதலியாரவர்கள் | | ,, | க. |
| ,, | தி. சு. சுப்பராய செட்டியாரவர்கள் | ... | ,, | க. |
| ,, | திரு. சின்னசாமிபிள்ளையவர்கள் | ... | ,, | க. |
| | சேலம் | | | |
| ,, | இராமசுவாமிமுதலியாரவர்கள் | ... | ,, | க. |
| | உடையூர் | | | |
| ,, | சுப்பிரமணியபிள்ளையவர்கள் ... | ... | ,, | க. |
| | திருநெல்வேலி | | | |
| ,, | சாலிவாடீசுவரவோதுவாரவர்கள் | ... | ,, | க. |
| ,, | ஈசுவரமூர்த்திக்கவிராயரவர்கள் | ... | ,, | க. |

(2)*

ம-ள-ள-ஸ்ரீ, குமாரசாமிபிள்ளையவர்கள் ... ... ,, க.

சிதம்பரம்

,, அருமலிங்கசெட்டியாரவர்கள் ... ... ,, க.

தஞ்சை

,, மருதமுத்து உபாத்தியாயரவர்கள் ... ,, ரு.

,, விருஷபதாசமுதலியாரவர்கள் ... ,, உ.

கூடலூர்

,, விசயபாலநயினாரவர்கள் ... ... ,, க.

வீரூர்

,, சந்திரநாதசெட்டியாரவர்கள் ... ... ,, க.

ஆ. உரைப்பிரதி கக.

இவற்றுள் முழுதுமில்லாதனவும் விசேடவுரையில்லாதனவுஞ் சில.

## மூலப்பிரதிகள்:—

இராமநாதபுரம்

ம-ள-ள-ஸ்ரீ, பொன்னுசாமித்தேவரவர்கள் ... ,, க.

சேலம்

,, இராமசுவாமிமுதலியாரவர்கள் ... ,, க.

வீரூர்

,, சந்திரநாதசெட்டியாரவர்கள் ... ... ,, உ.

ஆ. மூலப்பிரதி ச.

வே. சாமிநாதையன்.

# இப்புத்தகத்தில் எடுத்துக்காட்டிய நூற்பெயர்கள் முதலியவற்றின் *முதற்குறிப்புக்கள்.

அகத் - அகத்திணையியல்.
அகநா - அகநானூறு. [தை.
அந்தி - அந்திமாலைச்சிறப்புச்செய்கா
அரங்கேற் - அரங்கேற்றுக்காதை.
அரிச்சந்திர - அரிச்சந்திரபுராணம்.
அருங்கல - அருங்கலச்செப்பு.
அழகர்கலம் - அழகர்கலம்பகம்.
அறநெறி - அறநெறிச்சாரம்.

ஆதி - ஆதியுலா. [க்காப்புராணம்.
ஆனைக்கா, திருவானைக்கா - திருவானை
இசை - இசைநூல்வழக்கு; இசைமரபு.
இடை - இடைச்சொல்லியல்.
ந்திர
இலக் - இலக்கணையாரிலம்பகம்.
இலக். வி - இலக்கணவிளக்கம்.
இலிங்க - இலிங்கபுராணம். [உரை.
இறை - இறையனாரகப்பொருள்; ஷெ
உத்தர - உத்தரகாண்டம்.
உதா - உதாரணம்.
உயிர்ம - உயிர்மயங்கியல்.
உரி - உரியியல்.
உரைபெறு - உரைபெறுகட்டுரை.
உவம - உவமவியல்.
எச், எச்ச - எச்சவியல்.
எழுத் - எழுத்ததிகாரம்.
ஏலா - ஏலாதி.
ஐங்குறு - ஐங்குறுநூறு.
கட - கடவுள்வாழ்த்து.
கதை - பெருங்கதை.
கந்த - கந்தபுராணம்.
கம்ப - கம்பராமாயணம்.
கரந் - கரந்தைப்படலம்.
கல் - கல்லாடம்.
கலி, கலித் - கலித்தொகை.
கலிங்க - கலிங்கத்துப்பரணி. [ணம்.
கழுக்குன்ற - திருக்கழுக்குன்றப்புரா

களவ - களவழிநாற்பது.
களவி - களவியல்.
கற் - கற்பியல்;
கனக - கனகமாலையாரிலம்பகம்.
காஞ்சி - காஞ்சிப்புராணம். [கம்.
காந்த - காந்தருவதத்தையாரிலம்ப
கால்கோட் - கால்கோட்காதை.
கானல் - கானல்வரி.
கிள - கிளவியாக்கம்.
குண்டல - குண்டலகேசி. [பகம்.
குண, குணமா - குணமாலையாரிலம்
குற் - குற்றியலுகரப்புணரியல்.
குறு, குறுந் - குறுந்தொகை.
கூர்ம - கூர்மபுராணம்.
கூவ - கூவப்புராணம்.
கேம - கேமசரியாரிலம்பகம்.
கோவி - கோவிந்தையாரிலம்பகம்.
சில, சிலப் - சிலப்பதிகாரம்.
சிவஞான - சிவஞானசித்தியார்.
சிறப் - சிறப்புப்பாயிரம்.
சிறுபஞ், சிறுபஞ்ச - சிறுபஞ்சமூலம்.
சிறுபா - சிறுபாணாற்றுப்படை.
சினேந்திர - சினேந்திரமாலை.
சீகா, சீகாளத்தி - சீகாளத்திபுராணம்.
சீவக - சீவகசிந்தாமணி.
சீவசம் - சீவசம்போதனை. [ரம்.
சுந்தர - சுந்தரமூர்த்திநாயனார்தேவா
சுரமஞ் - சுரமஞ்சரியாரிலம்பகம்.
சூ - சூத்திரம்.
சூளா - சூளாமணி.
செய், செய்யுள் - செய்யுளியல்.
சேந - சேனாவரையம்.
சேது - சேதுபுராணம்.
சொல் - சொல்லதிகாரம்.
சோ - சோதிடநூல்வழக்கு.
தகடூர் - தகடூர்யாத்திரை. [ணம்.
தணி, தணிகை - திருத்தணிகைப்புரா

* பிரிவுகளின் நூலுறுப்புக்களின் முதற்குறிப்புக்கள் பெரும்பாலும் இங்கே காட்டப்படவில்லை.

திணைமா - திணைமாலைநூற்றைம்பது.
தியாக - தியாகராசலீலை.
திரி - திரிகடுகம்.
திருக் - திருக்குறள்.
திருச், திருச்சிற் - திருச்சிற்றம்பலக்கோவையார்.
திருச்சத - திருச்சதகம்.
திருஞான - திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரம்; அவர்புராணம்.
திருநா - திருநாவுக்கரசுநாயனார் தேவாரம்; அவர்புராணம்.
திருநூற் - திருநூற்றந்தாதி.
திருமு - திருமுருகாற்றுப்படை.
திருவா, திருவாச - திருவாசகம்.
திருவால - திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம்.
திருவிளை - திருவிளையாடல்.
திருவுந்தி - திருவுந்தியார்.
திவ்ய - திவ்யப்பிரபந்தம்.
தே - தேவாரம்.
தொகை - தொகைமரபு.
தொல் - தொல்காப்பியம்.
நள - நளவெண்பா.
நற் - நற்.
நாடு - நாடுகாண்காதை.
நாம - நாமகளிலம்பகம்.
நால, நாலடி - நாலடியார்.
நீதிநெறி - நீதிநெறிவிளக்கம்.
நெடுநல் - நெடுநல்வாடை.
நைட, நைடத - நைடதம்.
பட் - பட்டினப்பாலை.
பதி - பதிகம்.
பதிற் - பதிற்றுப்பத்து.
பது - பதுமையாரிலம்பகம்.
பர - பரதநூல்வழக்கு.
பரி - பரிபாடல்.
பரிமேல் - பரிமேலழகருரை.
பழ - பழமொழி.
பன் - பன்னிருபடலம்.
பா - பாகதச்சொல், பாகதம்.
பாக - பாகவதம்.
பார - பாரதம்.
பிரபு - பிரபுலிங்கலீலை.
பிரமோ - பிரமோத்தரகாண்டம்.
புண - புணரியல்.
புள்ளி - புள்ளிமயங்கியல்.
புறத் - புறத்திணையியல்.
புறநா - புறநானூறு.
புறப். வெ - புறப்பொருள்வெண்பாமாலை.
பூம - பூமகளிலம்பகம்.
பெய - பெயரியல்.
பெரிய - பெரியபுராணம்.
பெரு, பெரும்பா - பெரும்பாணாற்றுப்படை.
பெரும்பொருள் - பெரும்பொருள்விளக்கம்.
பேரூர் - பேரூர்ப்புராணம்.
பொரு - பொருளதிகாரம்.
பொருந - பொருநராற்றுப்படை.
பொருளி - பொருளியல்.
மங் - மங்கலவாழ்த்து.
மண், மண்ம - மண்மகளிலம்பகம்.
மணி - மணிமேகலை.
மத - மதனநூல்வழக்கு.
மது - மதுரைக்காஞ்சி.
மர - மரபியல்.
மலை - மலைபடுகடாம்.
மனை - மனையறம்படுத்தகாதை.
முத், முத்தொள் - முத்தொள்ளாயிரம்.
முத்தி - முத்தியிலம்பகம்.
மூ - மூதுரை.
மெய் - மெய்ப்பாட்டியல்.
மேரு - மேருமந்தரபுராணம்.
மொழி - மொழிமரபு.
வளை - வளையாபதி.
வா, வாதை - வாதைப்படலம்.
வி - விகாரச்சொற்கள்.
விநாயக - விநாயகபுராணம்.
விம, விமலை - விமலையாரிலம்பகம்.
விளி - விளிமரபு.
வினை - வினையியல்.
வெங். கோ, வெங்கைக்கோ - வெங்கைக்கோவை.
வேற் - வேற்றுமையியல்.
வேற் - ம. வேற்றுமைமயங்கியல்.
வேனிற் - வேனிற்காதை.
வைரவன் - வைரவன்பல்பிரபந்தம்.
வைத்ய - வைத்யநூல்வழக்கு.

# நூலாசிரியர் வரலாறு.

இந்நூலாசிரியராகிய திருத்தக்கதேவருடைய காலம், இடம், அவரை ஆதரித்த பிரபுவின் பெயர் முதலியவற்றுள் யாதொன்றும் தமிழ்நூல்களால் வெளிப்படையாக விளங்கவில்லை. ஆனாலும் இந்நூலுரைத்தொடக்கத்தில் நச்சினார்க்கினியர், 'இத்தொடர்நிலைச்செய்யுளைத் தேவர்செய்கின்றகாலத்திற்குநூல் அகத்தியமும் தொல்காப்பியமும்' என்று எழுதியிருத்தலால், இவருடைய*காலம், பழமையானதென்றுமட்டும் ஒருவகையாகத்தெரிகிறது. [கடைச்சங்கத்தாருக்கு அகத்தியமும் தொல்காப்பியமும் இலக்கணமாயிருந்தனவென்பதை இறையனாரகப்பொருளுரை முதலியவற்றாலுணர்க.]

“முந்நீர்வலம்புரி” (3143) என்னும் ஓம்படைச்செய்யுளின் உரையில், இந்நூலாசிரியரைச் சோழகுலமாகிய கடலிலேபிறந்த வலம்புரியென்று நச்சினார்க்கினியர் எழுதியிருத்தலால், இவர் சோழகுலத்திற்பிறந்தவரென்பதும் நச்சினார்க்கினியருரைச்சிறப்புப்பாயிரத்துள்ள, “வண்பெரு வஞ்சிப், பொய்யா மொழிபுகழ் மையறு சீர்த்தித் திருத்தகு முனிவன்” என்னும்வாக்கியத்தால், இவர் வஞ்சியென்னும் ஊரிலிருந்த பொய்யாமொழியென்பவராற் புகழப்பெற்றவரென்பதும் வெளியாகின்றன.

மேற்காட்டிய 3143-ம் கவியாலும், “மூவாமுதலா” என்னும் கவியுரையினிறுதியில் எழுதப்பெற்றுள்ள, 'செம்பொன்' என்பதை முதலிலேயுடைய வாக்கியத்தாலும் இவராசிரியர் இவரை மதித்திருந்தமை புலப்படுகின்றது.

இவர், திருத்தகுமுனிவர், திருத்தகுமகாமுனிவர், திருத்தக்கமகாமுனிகளென்றும் வழங்கப்பெறுவர்.

ஒருவர், தம்மைக் குறிப்பால் இகழ்ந்துரைத்துக்கொண்ட பழையசெய்யுளாகிய,

“திருத்தக்க மாமுனிசிந் தாமணி கம்பர்
விருத்தக் கவித்திறமும் வேண்டேம் - முருத்தக்க
கொங்குவேள் மாக்கதையைக் கூறோங் குறளொன்றே
மெய்க்கெழிலென் ஞாயி றெமக்கு”

என்பதனால், இவருடையவாக்கின்பெருமை முதலியன விளங்குகின்றன.

* இவருடையகாலம் கி. பி. 900; அல்லது கி. பி. 900 - த்துக்குப்பிந்தியதாக இருக்கலாமென்று மதுரைச் செந்தமிழ்ப் ம-ா-ா-ஸ்ரீ து. அ. கோபிநாதராயர் M. A. அவர்களும் தஞ்சைத்தமிழகத்தில் பிரஹ்மஸ்ரீ T. S. குப்புசாமிசாஸ்திரிகளும் ஆராய்ந்து வெளிப்படுத்தியிருக்கிறார்கள். அவை விரிவஞ்சி, இங்கே எடுத்துக் காட்டப்படவில்லை. (செந்தமிழ், தொகுதி - ௭, பக்கம் - ௩௯; தமிழகம், வால்யூம், I, பக்கம் 130)

இத்தகைச்சிறப்புடையுள்ள நூலாசிரியர்களுள், கர்ணபரம்பரையாக வழங்கும் இவருடையசரித்திரம் வருமாறு:—

இந்நூலாசிரியராகிய திருத்தக்கதேவர் சோழர்குலத்திலே யுதித்து உரியபிராயத்தே வித்தியாரம்பஞ் செய்விக்கப்பெற்றுச் சிறிதுகல்விகற்ற பின்பு, நல்லாசிரியர்பால் அகத்தியம் தொல்காப்பியமுதலிய இலக்கணநூல்களையும், பழைய சங்கச்செய்யுட்களையும், அக்காலத்துவழங்கிய மற்றை நூல்களையும் ஐயந்திரிபற ஓதியுணர்ந்து, இப்படியே வடமொழியிலும் வல்லராய்ப் பின்பு, தாம்மேற்கொண்ட ஆருகதசமயத்திற்குரிய நூல்களெல்லாவற்றையுங் கற்று, அவற்றிலே அறிவாண்டிருத்திய மனமுடையராய், அன்பு அருள் வாய்மை அடக்கமுதலிய நற்குணங்களனைத்தும் ஒருங்கே அமையப்பெற்று, ஆண்டிளையராயினும் அறிவின் முதியராய் இளமைப்பருவத்தே துறவறம் பூண்டு, தம்மாசிரியரை விட்டுநீங்காது அவர்கருத்தின்வழி ஒழுகுதலே தமக்குப் பெரும்பயனாகக்கொண்டு, அவ்வாறு அன்போடொழுகுவாராயினர். சிலநாட்சென்றபின், ஆசிரியருடன் பாண்டிவளநாட்டிலேயுள்ள மதுராபுரியையடைந்து அவ்விடத்தே சிலகாலம் அமர்ந்தனர்.

அங்ஙனம் அமரும்போது, திருத்தக்கதேவர், அம் மதுரைப்பதியிலேயிருந்த * சங்கப்புலவர்களின் புலமைகளை உணர்ந்து, அவர்களோடு கூடிப் பழகவிரும்பி, ஆசிரியர்பால் அநுமதிபெற்றுச் சென்று அவர்களோடு நாடோறும் பயிலுவாராய்த் தமிழ்மொழியிலுள்ள பழைய செய்யுட்களின் சொற்சுவை பொருட்சுவைகளை அவர்கள் எடுத்துக்கூறிப் பாராட்டுந் தோறும், தாமும் அவ்வாறே எடுத்துமொழிந்து அவர்களை யின்புறுவித்தும் "தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார், இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ, நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத், தும்ப ருறைவார் பதி" என்றவாறே அவர்களோடும் அளவளாவி அளவில்லாத மகிழ்ச்சியடைந்து, அவர்களால் நன்குமதிக்கப் பெற்றிருந்தனர்.

அப்படியிருக்கு நாட்களிலே ஒருநாள், சங்கப்புலவர்கள் திருத்தக்க தேவரைநோக்கி, "ஆருகதசமயத்தாரிற் பாடும்புலவர் பலரும் துறவினை வலியுறுத்திப்பாடத் தெரிந்துகொண்டாரேயன்றிக் காமச்சுவையைப் பாராட்டிப் பாடத் தெரிந்துகொண்டாரல்லர். இக்காலத்து வழங்குங் காமச்சுவையையுடைய நூல்கள் பலவற்றுள்ளும் ஒன்றேனும் அவர் இயற்றியதாகக் காணப்படாமையே அதற்குத் தக்க சான்றாம்" என்றுசொல்ல, அதற்குத் திருத்தக்கதேவர், "இன்பச்சுவையைப் பாராட்டுதலில் அவர் வெறுப்புற்றிருந்தாரல்லது பாடத் தெரியாதிருந்தாரல்லர்" என்றுகூற, சங்கப்புலவர்கள்,

* இச்சங்கம், கடைச்சங்கமென்றென்பர்; இதனை, 'இனி, பலவுமெக்கப் பொருட்டொடராய் அறம்பொருளின்பம் வீடென்பனவாய்ப் பொருள்வேறுபடவந்த தரவுகொச்சகம், பின்னுள்ளோர்செய்த சிந்தாமணிமுதலியனவாம்' (தொல். செய்: கடுடு. சூ. ந.) என்பதும் வலியுறுத்துகின்றது.

"அப்படியானும் காமச்சுவை முழுதும்விளங்க அமைத்து, தேவரே! ஒரு நூலியற்றுதிர்" என்றார்.

திருத்தக்கதேவர் அங்ஙனம் பாடத்துணிந்து, தம்மாசிரியர்பாற் சென்று வணங்கி, நிகழ்ந்ததை விண்ணப்பஞ்செய்ய, ஆசிரியர் அவ்வாறு பாடுதற்கண்ணே தம்மாணாக்கர் வல்லுநராயிருத்தலை நன்குணர்ந்திருந்தாராயினும், மாணாக்கர்கருத்தை அளந்தறிய ஆலோசித்திருக்கும்பொழுது, அவ்விருவருக்கும் எதிரிலே ஒருநரியானது ஓட, அதனைக் கண்ட ஆசிரியர், மாணாக்கரை நோக்கி, "இந் நரிச்சாதித்தன்மையை ஆதாரமாகக்கொண்டு உமக்குத் தோற்றியவாறே ஒரு சிறிய நூல் இயற்றுதிர்" என்றுசொல்ல, திருத்தக்கவேவர் அதனை ஆதாரமாகக்கொண்டு, யாக்கை நிலையாமை செல்வநிலையாமை முதலியவைகளெல்லாம் வெள்ளிடைமலைபோல் தெள்ளிதிற் புலப்படும்வண்ணம் விரைவில் நரிவிருத்தம் * என்னும் ஒரு நூலியற்றி ஆசிரியருக்குக் காட்ட, ஆசிரியர் பெரிதும் வியப்புற்றுத் தம்மாணாக்கர்கருத்துத் துறவின்கண்ணே உறுதிகொண்டிருத்தலைநோக்கிக் கழிபேருவகையுற்று மாணாக்கரைப்பார்த்து, "சங்கப்புலவர்கள் கூறியவண்ணம் காமச்சுவை பெரிதும் விளங்கும்விதம் சீவகன் கதையை ஒரு பெருங்காப்பியமாக இயற்றுதிர்" என்றுகூறி, "அஃது இடையூறின்றி இனிதுமுடிக" என்று அருகக்கடவுளைப் பிரார்த்தித்து, "செம்பொன்வரைமேல்" (2) என்னுஞ் செய்யுளொன்றியற்றி அதனால் அக்கடவுளைத்துதித்து, "இச்செய்யுளைக் கடவுள்வாழ்த்தாகக் கொண்டு நீர் நூலியற்றுதிர்" என்று அக்கவியைத் திருத்தக்கதேவருக்கு அளித்தனர்.

திருத்தக்கதேவர் அச்செய்யுளையேற்றுச் சிரமேற்கொண்டு, தாம் "மூவா முதலா" (1) என்னுங்கவியாற் சித்தனைத் துதியாநிற்க, அக்கவியை ஆசிரியர் கேட்டு, "யான்கூறியகவியினும் நீர்கூறியகவி செவ்விதாயிருத்தலால், அதனை முதலிலே நிறுத்துக" எனறுசொல்ல, திருத்தக்கதேவர் தம்மாசிரியர் கட்டளையை மறுத்தற்கஞ்சித் தாங்கூறிய சித்தசரணமாகிய "மூவாமுதலா" என்னுங் கவியை முன்னும், ஆசிரியர்கூறிய அருகசரணமாகிய "செம்பொன்வரைமேல்" என்னுங்கவியைப் பின்னுமாக † வைத்துப் பாடத்தொடங்கி, இந் நூலை எட்டுநாளில் நிறைவேற்றி ஆசிரியருக்குக்காட்ட, ஆசிரியர்நோக்கிப் பெரிதும் வியந்து புகழ்ந்து, "இந்நூல் நின்றுநிலவுக" என்று ஆசிகூறி "முந்நீர் வலம்புரி" (3143) என்னுங் கவியால் நூற்பயனையுரைத்துத் தேவரைநோக்கி, "இனிச் சங்கப்புலவரிடஞ்சென்று அரங்கேற்றிவருதிர்" என்றனர்.

உடனே திருத்தக்கதேவர் சென்று பாண்டியராசனவைக்களத்திற் சங்கப்புலவர்களுடைய முன்பு இந்நூலை வாசித்துக்காட்ட, அவர்கள்கேட்டு,

* இந்நூல், செந்தமிழ்ப்பத்திராசிரியர் ம-ள-ள-ஸ்ரீ மு. இராகவையங்காரவர்களால், செந்தமிழ்ப் பிரசுரம் ௨௦ - ஆவதாக அரும்பதவுரையுடன் இப்பொழுது பதிப்பிக்கப்பெற்றிருக்கின்றது.

† இவ்வரலாறு, முதற்கவியுரையின் இறுதியில் உள்ளது.

இந்நூல் சொல்வளம் சந்தவின்பம் செய்யுணடைமுதிர்ச்சி காமச்சுவைமுதலியனவும் அலங்காரங்களுமுடைத்தாய், எவ்வகைச் சாதியார்க்குங் காலம் இடமுதலியவற்றிற்கும் ஏற்ற வருணனைமுதலியன பெற்றிருத்தலைத்தெரிந்து வியப்புற்றுச் சிரந்துளக்கி, "இங்ஙனம் பாடுதல் யாவர்க்கும் அரிதரிது" என்றுபுகழ்ந்து நன்குமதித்து மிகப்பாராட்டிப் பெருமகிழ்ச்சியடைந்தனர்; அரசனும் அவ்வாறே புகழ்ந்து பெரிதும்பாராட்டினன்; மற்றையோரும் மகிழ்ச்சியடைந்தனர்.

அப்படி நிகழ்ந்தபொழுது, அங்குள்ளாரிற் சிலர் ஐயமுற்று, "இத்திருத் தேவர் இளமைப்பருவந்தொடங்கித் துறவுபூண்டிருத்தல் மெய்ம்மையாயின், மற்றச்சுவைகளைப்போலக் காமச்சுவையை இவ்வாறு பாராட்டிப்பாடுதல் இவர்க்கு இயலுவதன்று; இந்நூலின்கண்ணோ அச்சுவை அதிகரித்துள்ளது; ஆதலின், இவர் சிற்றின்ப அநுபவமுடையராதல் வேண்டும்" என்று தம்முட் பேசிக்கொண்டனர்.

அதனைத் தேவர்தெரிந்து அவ்வனைவருங் காணும்படி, இரண்ட இரும்பின்கட்டியைத் தழலிற் பழுக்கக்காய்ச்சி வருவித்து, "யான் *பாலசந்நியாசியாகவிருத்தல் மெய்ம்மையாயின், இஃது என்னைச் சுடாதொழிக" என்று சூளுரைத்து, அக்கட்டியைத் தம்கையிலேற்றுத் தழுவியும் நாவாற் பரிசித்தும் தாம் யாதொரு துன்பமும் அடையாது இன்புற்றிருந்தனர்.

தேவர் அங்ஙனமிருத்தலை முன்பு ஐயமுற்றுப் பேசினோர்கண்டு அஞ்சி, "யாம் என்னகாரியஞ்செய்தேம்; யாம் என்னகாரியஞ்செய்தேம்" என்று நடுநடுங்கி, அவரைவணங்கி, "யாங்கள் கருதிப்பேசிய பெருங்குற்றத்தைப் பொறுத்தருள்க" என்று பன்முறை யிரந்து வேண்டிக்கொண்டனர். தேவர் அவர்களை நோக்கி, "நீவிர் எனது துறவொழுக்கத்தைப் பலரும் அறியச் செய்தீராதலின், எனக்குக் குற்றஞ்செய்தீரல்லீர்; இதுபற்றி நீவிர் அஞ்சன்மின்" என்று பல இனியமொழிகள் கூறி, அவர்களச்சத்தையகற்றினர்.

இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த சங்கப்புலவரும், பாண்டியராசனும் திருத்தக்கதேவரது துறவொழுக்கத்தையும், மற்ற மேம்பாடுகளையும் மிகவியந்து பாராட்டினார்கள்.

பின்பு தேவர் அவர்களிடத்து விடைபெற்றுச் சென்று, தம்மாசிரியரிடத்தே ஆங்கு நிகழ்ந்தவற்றையெல்லாங் கூறி உடனுறைவாராயினர்.

* இவர் பாலப்பிரமசாரியென்றும் வழங்கப்பெறுவர்.

# நூலைப்பற்றிய சில குறிப்புக்கள்.

சிந்தாமணியென்பது, இந்நூற்குத் தன்மையால்வந்தபெயரென்பர்: நன்னூலில், "முதனூல்" என்னுஞ் சூத்திரவுரையில், 'தன்மையாற்பெயர் பெற்றன சிந்தாமணி, நன்னூல்முதலாயின' என்று சங்கரநமச்சிவாயரெழுதி யிருத்தல்காண்க. பிறந்தவுடன் சீவகனை விசயை சிந்தாமணி (*311)யென்று பாராட்டினமையால், சிந்தாமணியென்பது முதலில் அவனுக்குப்பெயராய், அப்பால் அவன்சரித்திரமாகிய இந்நூலுக்காயிற்றென்று கூறுவாருமுண்டு; "முந்நீர் வலம்புரி" (3143) என்னும் செய்யுளில், இந்நூல், சிந்தாமணியென் னும்பெயரால் வழங்கப்பெற்றிருத்தல் காண்க. இப்பெயருள்ளநூல்கள் சில தமிழிலிருத்தலின், அவற்றினின்றும் வேறுபடுத்தித் தெரிவித்தற்பொருட்டே, 'சீவக' என்னும் அடைமொழியுடன் இந்நூற்பெயர் வழங்குவதாயிற்றென்று தெரிகின்றது. ஆயினும் உரையாசிரியர்களாற் பெரும்பாலும் சிந்தாமணி யென்றே வழங்கப்படும். புலவர் சிந்தித்தவற்றையெல்லாந் தருதலின், இது சிந்தாமணியென்று பெயர்பெற்றதென்று சிலர் சொல்லுவதுமுண்டு.

இதற்கு மணநூல் என்றும் ஒருபெயர்வழங்குகின்றது; அதற்குக்காரணம், இதன் உறுப்பாகிய இலம்பகம் பதின்மூன்றனுள் ௩, ௪, ௫, ௬, ௭, ௮, ௯, ௧௨ - இவற்றிற் சீவகன், காந்தருவதத்தைமுதலிய மகளிரெண்மரைத் தனித்தனி மணஞ்செய்துகொண்டதும், ௨-ம் இலம்பகத்தில் அவன் கோவிந்தையைத் தன்தோழனாகிய பதுமுகனுக்கு மணஞ்செய்வித்ததும், ௧, ௧௦, ௧௧, ௧௩ - இவ்விலம்பகங்களில் அவன் நாமகள், மண்மகள், பூமகள், முத்திமகளென்னுமிவரை மருவியதுமாக நான்முழுவதும் மணங்களே கூறப்படுதல். இதனை,

368. "குழைமுக ஞான மென்னுங் குமரியைப் புணர்க்க லுற்றார்"
369. "திருந்துபொற் கன்னி யாற்குச் செல்வியைச் சேர்த்தி னாரே"
370. "நாமக ளிலத்தை யெல்லா நயந்துடன் பருகி"
2326. "பூமிதேவி,.........ஏக மாக நுகரிய வெய்தி னானே"
2368. "பொருவில் பூமகட் புணர்ந்தனன்"
3117. "கேவலமடந்தையென்னும்.........பொன்னொருபாகமாக"

என்பனவற்றாலும் இவற்றின் உரைகளாலும் அறிந்துகொள்க.

இந்நூல், சைனர்களாற்பூசித்துப் பாராயணஞ்செய்யப்பெற்று வருகின்றது. புறத்திரட்டு முதலிய சில தொகைநூல்களில் இதன் செய்யுட்கள் இடத்திற்குத் தக்கபடி தெரிந்தெடுத்துச் சேர்க்கப்பெற்றுள்ளன.

* இங்கிலீஷ் எண்களெல்லாம் சிந்தாமணிக்கவிகளைத் தெரிவிப்பவை.

இதனையும் இதற்காக மற்றச்சைனநூல்கள் சிலவற்றையும் ஆராய்ந்த பொழுது, பல வடமொழிகளும் பிராகிருதமொழிகளும் தமிழில் விரவிவருவதற்குக்காரணம் அந்நூல்களென்றே தோற்றியது.

ஒரேமாதிரியின்றி எதுகை வேறுபட்டுவந்த செய்யுட்களும் இதிற் சில சில உள்ளன: 172, 191, 533, 840, 1121, 1320, 1359, 1946, 2253, 2307, 2309—ம் கவிகளைப்பார்க்க.

நச்சினார்க்கினியருக்குமுன்பு இந்நூலுக்குப் பழைய வுரை யொன்று இருந்ததாகச் சொல்லுவதுண்டு, இதனை, (260) 'வினைகபொலிக வொருவழுக் கென்பாருமுளர்' எனவும், (366) 'இனி, நீர்த்தங்கரையில் நிருபசேகரன்மகன் பரதராச சக்கரவர்த்தியென்று முரைப்பர்' எனவும், (1434) 'கண்டத்திற வியாரென்பதற்குக் கட்டிமுதலிய உறுப்பார்ப்புகைத்த அதிற்புகையையுடையாரென்று முரைப்பர்' எனவும், (1793) 'இனி, அருகுரலென்னுங் கவியில், 'உழிதருபெருநிதி யென்றதனைத் தோழராக்கி, இவரைக் கட்டியங்காரன் கந்துக்கடற்குக்கொடுத்தானென்பார்க்கு இக்கவியில் எம்கடமர் தோழரென வீந்தாரென்றல் பொருந்தாமையுணர்க' எனவும், (1870) 'இனி முழுமுற்றும், ஒரு சொல்லாக்கியுரைப்ப' எனவும், (1933) 'இனி, கடந்தானென்று பாடமோதி.........தான் றூற்றைவரோடும் போருமென்பாருமுளர்' எனவும், (2705) 'சாகரதத்தன் பெயரென்பாருமுளர்' எனவும் வருவனவற்றாலறிக.

இந்நூற்கதைகள் பழைய உரைகளிலும் நூல்களிலும் எடுத்தாளப்பட்டுவந்துள்ளன; அவற்றுட் சில வருமாறு:—

உரை.

'காய் தேவனுயிற்று' (தொல். சொல். ௧௦௨ - ம் சூ. சே.)

'தொழிலின்சிறப்புக்கு ஆசைப்பட்டுக் கட்டியங்காரனைப்போல் வேறுபடுமாந்தர்பலர்' (திருக். ௫௧௪. பழையவுரை.)

'கட்டியங்காரன்போல அரசவின்பத்தினை வெஃகி விகாரப்படுவதல்லது அதனைக்குற்றமென்றொழிந்து தம்மியல்பினிற்பார் அரியராகலின், 'வேறாகுமாந்தர்பலர்' என்றார்.'

' "கம்பன்சிலைவாய்.........அரசும்பிலை" (809.) எனப் பதுமுகன் கூறினாற்போல, ஒருவீரன் தன்மறம் அரசன்மேல்வைத்துக்கூறியவாறு'

(திருக். [illegible], ௭௭௧. பரிமேல்.)

நூல்.

"சீவகன் மஞ்சரியைத் தாழ்த்துரைப்பச் சீறினளே
தூவாய்க் குணமாலை சோமேசா—ஆவகையே
தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீர்
இன்பீர ராகுதி ரென்று."

(சோமேசர்முதுமொழிவெண்பா, கநஉ)

"சச்சந் தனையழித்துக் கொண்டான் றனியமைச்சன்
வைச்ச வரசை வடமலையே—நிச்சம்
எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையால்
வேறாகு மாந்தர் பலர்."

"தோழமை கொண்ட சுதஞ்சணனாற் சீவகனும்
வாழுமுயிர் பெற்றான் வடமலையே—தாழா
துடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதா நட்பு."

(வடமலைவெண்பா, ருஉ, எக)

"சுரமஞ் சரியிடுத்த சுண்ணம் பழித்த
அருமந்த சீவக னும்."

(வருணைகுலாதித்தனுலாமடல், கண்ணி, கரு௩)

"சீவகனுக் கன்றொருபெண் சிங்கமொரு கன்றினும்
பாவனைபோ லேயெழுதிப் பக்கத்தில்—ஓவியமாக்
காரானை யொன்றெழுதிக் காட்டவரிக் கன்றுதுள்ளிப்
போராடிப் பாய்ந்தகதை பொய்யலவே."

(கூளப்பநாயகன்விறலிவிடுதூது, கண்ணி, உ0௧ - ௩)

"பாராளுஞ் சீவகர்கோன் பல்லவதே யத்தநுவுகச்
சீரால் விருந்தமைத்த சேவகனும்"

(சிவந்தெழுந்தபல்லவராயனுலா)

"சீவகன் றந்தை முயற்சியை நீத்த செயலினன்றே
பூவல யத்தைப் புரப்பது விண்டனன் பொற்கொடியே
மேதவன் மயில்வெற்பிற் றம்பிரான் காக்குந் திறமிலரூர்
காவல னென்பதை யென்றேத னல்ல கருத்தல்லவே."*

(மயூரகிரிக்கோவை, [illegible])

*, பாங்கி பிரிவுடம்படுத்தல்.

இந்நூற்பெயரைச் சிலேடைவகையில் அமைத்துப் பாராட்டிய நூல்கள் சில; அந்தப்பகுதிகள் வருமாறு:—

"மந்தா கினியணி வேணிப் பிரான்வெங்கை மன்னவநீ
கொந்தார் குழன்மணி மேகலை நூபுரங் கொள்வதெங்ஙன்
சிந்தா மணியுந் திருக்கோவை யுமெழு திக்கொளினு
நந்தா வுரையை யெழுதலெவ் வாறு நவின்றருளே"*

(வெங்கைக்கோவை, ௯௰)

"வந்தென்றுஞ் சிந்தா மணியென் றிருந்தவுனைச்
சிந்தென்று சொல்லியநாச் சிந்துமே" (தமிழ்விடுதூது)

"சிந்தா மணியாஞ் சிலப்பதிகா ரம்படைத்தான்
கந்தா மணிமே கலைபுனைந்தான்—நந்தா
வளையா பதிதருவான் வாசவனுக் கீந்தான்
இளையாத குண்டலகே சிக்கும்—வளையாழி"

(திருத்தணிகையுலா, [illegible])

இந்நூற் செய்யுணடையைப் பரிமேலழகர், திருக்குறளுரையில் அங்கங்கே வசனநடையாக அமைத்திருக்கின்றனர்; அவற்றுட் சில வருமாறு:—

†(௨௭௫) 'அதன்வினையின்கண் அந்தோ வினையேயென்றழுவாதலின்' 2625.

(௩௨௦) 'உயிர்நிலத்து வினைவித்திட்டார்க்கு விளைவும் அதுவேயாகலின்' 2702.

(௩௦௭) 'உருவின்மிக்கதோருடம்பதுபெறுதலும்அரிதாகலான்' 2752.

(௩௫௦) 'மோதிமுன்னொடு முட்பகைகண்டிடல், பேதுசெய்து பிளக்கிடலென்பவை' 1920.

(௬௨௭) 'பகலே, மருங்கொற்றியும் மூக்கூன்றியும் தாடவழ்ந்தும் அரிதினுய்க்கு மாறுபோல' 2784.

(௬௬௨) 'இனி உறங்காநிற்கவும் தாம் உலகங்காக்கின்ற அவர் கடவுட்டன்மை'. 248.

மிக்கதுறவியென்று புகழப்படும் திருத்தக்கதேவர் இந்நூலிற் பலவகைச் சுவைகளை அமைத்திருத்தலையும் முன்பு ஸ்ரீ அபாயச்சோழமகாராஜா இந்நூலைக் கற்றும் கேட்டும் தம்முடைய சமயக்கொள்கையை முதலில் மறந்திருந்தாரென்பதையும் நோக்கும்பொழுது, கிரந்தகர்த்தர் தம்மையன்றி ஏனையோரும் அறிந்து நடத்தற்பொருட்டுத் தங்கள் சமயக்கொள்கைகளை இடையிடையே விரவவித்துப் பலவகையங்களுடன் நூலியற்றுவாரென்றும் அவற்றைப் படிப்போர்களிற் சிலர் தங்கள் சமயக்கொள்கைகளை மறந்தொழிந்து அவ்வழியேசெல்லத்துணிவாரென்றும் பெரியோர்கள் கூறுதல் வலியுறுகின்றது; ஸ்ரீ உமாபதிசிவாசாரியர் அருளிச்செய்த திருத்தொண்டர் புராணவரலாற்றில், ௧௦ - வது செய்யுள்முதலியவற்றைப் பார்க்க.

* இது, பாங்கி, தலைமகளவயவத்தருமைசாற்றல்.

† தமிழெண்கள் திருக்குறளைத்தெரிவிப்பவை.

# இந்நூல் உரையாசிரியராகிய
# நச்சினார்க்கினியர் வரலாறு.

---

எவனூல வாயிடைவந் தமுதவா யுடையனென வியம்பப் பெற்றோன்
எவன்பண்டைப் பனுவல்பல விறவாது நிலவவுரை யெழுதி யீந்தோன்
எவன்பரம வுபகாரி யெவனச்சி னார்க்கினிய னெனும்பே ராளன்
அவன்பாத விருபோது மெப்போது மலர்கவென தகத்து மன்றே.

"தொல்காப் பியத்திற் றெருத்த பொருளனைத்து
மெல்லார்க்கு மொப்ப வினிதுரைத்தான்—சொல்லார்
மதுரைநச்சி னார்க்கினியன் மாமறையோன் கல்விக்
கதிரின் சுடரெறிப்பக் கண்டு."*

**பாண்டிமண்டலசதகம்.**

"கரைபெற்ற தோர்பஞ்ச லட்சண மாணதொல் காப்பியமுந்
தரைமுற்றும் போற்றிய சிந்தா மணியுந் தமிழ்ச்சங்கத்தி
னிரைபெற் றுயர்பத்துப் பாட்டும் விளங்க நிசவுரையை
வரைநச்சி னார்க்கினி யன்னையன் பாண்டிய மண்டலமே."†

இந்நூலின் உரையாசிரியராகிய ஆசிரியர் நச்சினார்க்கினியர் பாண்டிவளநாட்டுள்ள மதுராபுரியிற் பிராமணவருணத்திற் பாரத்துவாசகோத்திரத்திற்பிறந்தவர். தமிழ்ப்பாஷையிலுள்ள பலவகையான எல்லாநூல்களிலும் அதிபாண்டித்தியமுடையவர்; சைவசமயத்தினர்; இவர் இன்னராதல், "வண்டிமிர் சோலை மதுரா புரிதனி, லெண்டிசை விளங்க வந்தவாசான், பயின்ற கேள்விப் பாரத் துவாச, னான்மறை துணிந்த நற்பொரு ளாகிய, தூய ஞான நிறைந்த சிவச்சுடர், தானே யாகிய தன்மை யாளன்" என்னும் உரைச்சிறப்புப்பாயிரத்தால் விளங்கும். சிவஸ்தலங்களுட்சிறந்த சிதம்பரத்தினது திருநாமங்களாகிய, 'திருச்சிற்றம்பலம்,' 'பெரும்பற்றப்புலியூர்' என்பவற்றை முறையே ஆறெழுத்தொருமொழிக்கும் எழெழுத்தொருமொழிக்கும் உதாரணமாக இவர், தொல்காப்பியம் எழுத்ததிகாரத்து மொழிமரபில், "ஓரெழுத்தொருமொழி" என்னுஞ் சூத்திரத்து விசேடவுரையிற் காட்டியிருத்தலாலும், சைவசமயத்துச் சிறந்தநூல்களாகிய திருவாசகம் திருச்சிற்றம்பலக் கோவையார் ‡திருவுலாப்புறமுதலியவற்றினின்றும் தமது உரைகளிற் பல

---

* இந்நூலும் இவ்வுரைப்பற்றிய உரைச்சிறப்புப்பாயிரங்களாகவுள்ள செய்யுட்களை, இப்புத்தகத்தின் ௧௧௭ - ம் பக்கமுதலியவற்றிற் பார்க்க.

† இச்செய்யுளைத்தெரிவித்தவர், கும்பகோணம் டவுன் ஹைஸ்கூல் முதல் தமிழ்ப்பண்டிதர் ம-ள-ள-ஸ்ரீ அ. நாராயணசாமி ஐயரவர்கள்.

‡ திருவுலா.

விடங்களில் இலக்கியஇலக்கணப் பொருள்களுக்கன்றித் தத்துவப்பொருளுக்கும் மேற்கோள்கள் எடுத்துக்காட்டியிருத்தலானும், அங்ஙனம் மேற்கோள்கொண்ட சிலவிடங்களில் எழுதியுள்ள விசேடவுரைகளானும், இந்நூல் 362-ம் செய்யுளில், 'போகம்வீன்ற புண்ணியன்' என்பதற்கு எழுதிய விசேடவுரையானும், திருமுருகாற்றுப்படை யுரையிற்காட்டிய சில நியாயங்களானும், மற்றுஞ் சிலவற்றானும் இவர் சைவசமயியாதல் நன்குவெளியாகும்;

"கச்சைசே ரரவர் போலுங் கறையணி மிடற்றர் போலும்
பிச்சைகொள் ளன்பர் போலும் பேரரு ளாளர் போலு
மிச்சையான் மலர்க ளேவி யிரவொடு பகலுந் தம்மை
நச்சுவார்க் கினியர் போலு நாகவீச் சரவ னாரே."

(திருநா. திருநாகேச்சரம்.)

"பச்சிலை பழம்போ தேனும் பறித்திட்டுப் பத்தி செய்வோர்க்
கெச்சமி லிருமைப் பேறு மளித்தரு ளிறைவா போற்றி
முச்சக முதலே போற்றி மூலக்கட் டணியாய் போற்றி
நச்சினார்க் கினியாய் போற்றி யெனத்துதி நவிலுங் காலை."

(காஞ்சி. சத்ததான. கக.)

என்பனவற்றில், முறையே 'நச்சுவார்க்கினியர்' என்றும், 'நச்சினார்க்கினியாய்' என்றும் வருவனவற்றைநோக்கும்போது, இவருடைய பெயர் சிவபெருமானுடைய திருநாமமாகவே கருதப்படுகின்றது.

இவ்வுரையாசிரியர், இந்நூலுக்கன்றிப் பத்துப்பாட்டிற்கும் தொல்காப்பியத்திற்கும் கலித்தொகைக்கும் குறுந்தொகையில் பேராசிரியர் பொருளெழுதாதொழிந்த இருபது செய்யுட்களுக்கும் உரைசெய்தருளினர். இன்னும் சிலநூல்களுக்கு இவர் உரையியற்றினரென்பர்; அவை இவையென்று புலப்படவில்லை. இக்காலத்து வழங்கும் திருக்கோவையாருரை பேராசிரியராற் செய்யப்பட்டதென்று தெரிகின்றமையாலும், இவர் அந்நூற்குச்செய்த வேறுரை கிடையாமையாலும் அதற்கும் திருக்குறள் முதலிய மற்றுஞ்சிலவற்றிற்கும் இவர் உரைசெய்திருப்பதாக இவருடைய உரைச்சிறப்புப்பாயிரத்திலேனும் வேறொன்றிலேனும் கூறப்படாமையாலும் அவைகள் இங்கே எழுதப்பட்டில.

இன்றியமையாத இடங்களில்மட்டும் பதப்பொருள், இலக்கணக்குறிப்பு முதலியன இவரால் எழுதப்படும்.

இவர் பதஸாரம் *எழுதுதல் மிகப் பாராட்டற்பாலது.

மேற்கோளாக எடுத்துக்காட்டும் நூலின்பெயரையாவது நூலாசிரியரின் பெயரையாவது எடுத்துக்கூறுதல் பெரும்பாலும் இவருக்குவழக்கமன்று.

* 24-ம்பக்கமுதலியவற்றைப்பார்க்க.

வெளிப்படையாகக் கூறப்படாமலிருந்தும் சிலசில குறிப்பைக்கொண்டு மிக ஊகித்தறிந்து இன்னகாலத்தில் இன்னசெய்தி நிகழ்ந்தது, இன்னகாலத்தில் இன்னசெய்தி நிகழ்ந்ததென்று இந்நூலுள் அவ்வவ்விடத்து, கதை நிகழ்ந்தகாலத்தைவிளக்கிக் கொண்டேபோவார்; 21, 413, 493, 590, 851, 1564, 2029, 2033, 2106, 2706-ம் கவிகளின் உரைகளைப் பார்க்க.)

விரிவிற்கஞ்சி ஒருவாக்கியத்தின் இறுதிச்சொல்லையேனும் அதன்முதற் சொல்லையேனும் எழுதி வாக்கியத்தைக்குறிப்பித்துவிட்டுப் பொருளெழுதுதலும் மேற்கூறிய யாதொன்றையும் எழுதாமலே பொருளெழுதுதலும்,

"அறுவர்தந் நூலு மறிந்துணர்வு பற்றி
மறுவரவு மாறுன நீக்கி—மறுவரவின்
மாசா ரியனாய் மறுதலைச்சொன் மாற்றுதலே
ஆசா ரியன தமைவு"

(ஏலாதி. ௭௬.)

என்றபடி நூலின்சமயத்தையும் நூலாசிரியருடைய கொள்கையையும் அவர் கருத்தையும் அறியவேண்டிய அளவு உழைத்தறிந்து அவற்றிற்கேற்பவே உரையெழுதுதலும் இவருக்கு இயல்பு; இவருரை விகற்பங்கள் இன்னும்பல வகை.

இவர் இந்நூலுக்கு முதன்முறை உரையெழுதி, அக்காலத்திற் புகழ் பெற்றிருந்த சைனவித்துவான்கள் சிலருக்குக்காட்ட, மற்றைப்பகுதிகள் போலத் தங்கள் சமயக்கொள்கைகள் முறையே அறிந்து எழுதப்படவில்லையென்றுகூறி அவர்கள் அவ்வுரையை அங்கீகரிக்கவில்லையென்றும், அப்பால் இவர் ஆருகதநூல்கள் பலவற்றையும் அறிந்தோரிடம் முறையே கற்றறிந்து நலமுற ஆராய்ந்து இரண்டாமுறை இவ்வுரையையெழுதி அவர்களுக்குக்காட்ட அவர்கள் உற்றுநோக்கி மகிழ்ந்து பாராட்டி இதனை அங்கீகரித்தார்களென்றும் சைனர்களுள்ளும் ஏனையோருள்ளும் கர்ணபரம்பரையில் ஒருவரலாறு வழங்குகின்றது; "அகன்று பொருள்கிடப்பினும்" (தொல், செய், சூ. ௩) என்பதனுரையில், 'இனிப்பல செய்யுட்கள் வருமாறு சிந்தாமணியுள் யாங்கூறிய உரைகள் பலவற்றானுமுணர்க' எனவும், "மாட்டு மெச்சமும்" (தொல். செய். சூ. ௩.) என்பதனுரையில், மாட்டும் எச்சமுமின்றி உடனிலையாய் அமைந்தனபலவும் சிந்தாமணியுள் யாங்கூறிய உரையான் உணர்க' எனவும் "இழுமென் மொழியான்" (தொல். செய். சூ. ௩.) என்பதனுரையில், 'இவை பொருட்டொடர்; அவை சிந்தாமணி முதலியன; அவை பாவிற்கு இனமாகிய துறையும் விருத்தமும் பற்றிச்செய்தனவென்பார்க்கு அப்புலவர் செய்யுள் செய்கின்ற காலத்திற்கு நூல் தொல்காப்பியமானவாறும் அவர் இனங்கொள்ளாதவாறும் அவ்வினங்கட்காம் இலக்கணங் கூறாபாடையவாறும் கொச்சகம்போற்சிறப்பின்மையும் முன்

னர் விளங்கக்கூறியவற்றைக்கொண்டு பின்பு செய்த நூல்கள் முன்புசெய்த செய்யுட்கு விதியாகாதவாறுங் கொண்டு மறுக்க' எனவும் வருவன, இவர் தொல்காப்பியத்திற்கு உரை செய்யுமுன்னரே இந்நூலுக்கு உரைசெய்ததையும், இந்நூல் 72-ம் கவியுரையில், 'ஈங்குத் தன்மையையுணர்த்துதல், “செலவினும் வரவினும்” என்னும் சூத்திரத்திற் கூறினும்' எனவும், 892-ம் கவியுரையில், 'ஆசிரியர், “நண்டுந் தும்பியும்” என்று தும்பியைப் பின்வைத்தது மேல்வருஞ் சூத்திரத்தில், “மாவு மாக்களு மையறி வினவே” என்ற ஐயறிவு இதற்கும் ஏறுதற்கென்றுணர்க; இதனை வாராத தால் வந்தது முடித்தலென்னுந் தந்திர வுத்தியாற் கொள்க வென்று ஆண்டு உரைகூறிப்போந்தாம்' எனவும், 1913-ம் கவியுரையில், 'சீவகசாமி யென்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகை, “பண்புகொள் பெயருமதனோ ரற்றே” என்னும் சூத்திரத்தில் தன்னினமுடித்தலென்பதனாற் சீவகசாமியா ரென ஆகியாய்ச் சீவகசாமியேயென ஈரோடு ஏகாரம்பெற்றதெனக் கூறினும்' எனவும், 2090-ம் கவியுரையில், 'வயாமரமென்பதூஉம் மாற்றருஞ் சிறப்பின் மரபன்றி வழக்கின்கண் அடிப்பட்டுச்செய்யுளின்பம்பட வந்த மரபென்று மரபியலிற் பாதுகாத்தாம்' எனவும் வருவன அதற்கு உரை செய்தபின்னரே இவர் இதற்கு உரைசெய்ததையும் தெரிவிக்கும், இந்த இரண்டு பகுதியுள் முதற்பகுதி இவர் தொல்காப்பியத்திற்குரையியற்றுமுன் சிந்தாமணிக்கு முதன்முறை உரையியற்றியதையும் இரண்டாவதுபகுதி இவர் அந்நூலுக்கு உரையியற்றியபின் இதற்கு இரண்டாமுறை உரையியற்றியதையும் ஒருவகையாகப் புலப்படுத்தி மேற்கூறிய வரலாற்றை வலியுறுத்தி நிற்றல் காண்க.

பாஷாபிமானத்தையும் தமிழ்ப்பாஷையிலுள்ள நூலாராய்ச்சியையும் நூலாசிரியரிடத்தேயுள்ள அன்புடைமையையும் ஒவ்வொன்றையும் நுணுகி நுணுகி ஆராய்ந்து ஆராய்ந்து விளங்க எழுதுதலையும் மற்றக் குணவிசேடங்களையுமுடைய இவர், வடமொழியுரையாசிரியர்களுள் ஒருவராய்ச் சிறந்து விளங்கிய ஸ்ரீ மல்லிநாதஸூரியைப்போன்றவரென்று இருமொழியிலும் பாண்டித்தியமுடையவர்கள் சொல்வார்கள்.

இவர், நூலாசிரியருடைய ஆழ்ந்தகருத்தைவிளக்கி அவ்வவ் விடத்து எடுத்துக்காட்டுநயங்கள் மிக்க இன்பத்தை அளிக்கும். அவற்றுட் சில வருமாறு :—

[குறிப்பிட்ட இடங்களில் இவற்றின் விசேடவுரைகளைப் பார்க்க.]

2. வெம்புஞ்சுடர்.
3. பகைகண்பொடிலான்.
6. மீனேறுயர்த்த.
,, சீவகசாமியென்பான்.
11. ஆங்கே.
,, வள்ளல்.
,, விஞ்சைக்கிறைவன்மகள் வீணையிற்றோற்றவாறு.

11. நாகரிற்றுய்த்தவாறு.
14. வென்றிக்களிற்றை.
128. வம்புண்கோதையர்.
141. மாகநீண்மணிமுடி.
163. பெண்ணணங்கரியதேவரும்.
164. கருங்குழல்கள்.
165. வட்டமதிமுகம். [மழலை.
181. மெய்பெறுவெழுத்துயிர்க்கு
183. திருமகளிவளென வைகும்.
188. பொனங்கொடி யமிர்தனாள், பொன்னெடுங்குன்றனான்.
192. பளிக்கறைப் பவழப் பாவை பரிசெனத் திகழுஞ் சாயல்.
200. களிறனான்.
,, வெளிறிலாக்கேள்வியானை வேறுகொண்டு.
204. வலம்புரிபொறித்தவண்கை மதவலிவிடுப்ப.
221. அத் தம்பெருமான்.
222. தேனெனப்பாலெனத் தெள்ளமிர்தாற்றென.
251. வானனுமற்கு ஓலைவைத்தன்னவொண்டிறலாற்றலான்.
252. பிழைப்பிலாட்புறந்தந்தானும்.
268. அமிர்தமன்னாளையெய்தி.
271. வண்டுமொய்த்தாற்றும்.
,, அனையநீயும்.
279. வேன்மிடைந்தவேலியும் பிளந்து வாள்வலையரிந்து.
,, தேன்மிடைந்ததாரினான் செங்களம்.
280. உப்புடையமுந்நீருடன்றுகளை கொல்வ தொப்புடையதானையுள்.
289. ஆண்டகையவிந்தான்.
305. குரிசிறந்தபுதல்வனை.
326. தண்ணுடைமதி.
332. உற்றது.
336. நமராதுமற்றது நண்ணலமாகி.
340. இருவிற்கைபோய் மெய்காப்ப,
344. அணங்குநுண்டுகில்.
345. ஐயவோவென்றெழுந்தனள்.
348. யாருந்தெறவொடுங்களுறனை.
,, தோருந்தப்புல்லுயார்போற் றெருக்கு.

351. தொழுதேனும்மையெனத் துறந்து.
352. நோக்கிநும்மைநோக்கான்,
353. உரவோன்சிறுவன்.
354. வனத்துறைதெய்வமானாள்.
357. குறுகயம்மென.
361. மாற்றமஞ்சும் மன்னியகற்பு.
362. போகமீன்ற புண்ணியனெய்த கனையேபோல் மாகமீன்ற மாமதியன்னான்.
364. எல்லார். [தான்.
365. மாரியின்நல்கிக் கற்பகமொத்
368. குழைமுக ஞானமென்னுங்குமரி.
392. இன்னணம்விலக்கினானே.
393. ஆண்டகைக்குரவிர்.
396. மாடவீட்டகம்.
400. அந்தணர்தொழிலேனானேன்.
402. நலம்பொறுக்கலாதபிண்டி நான்முகன்.
406. நறவுறமலர்ந்தகண்ணி.
407. கைவளையன்றிஇல்லா.
427. உய்த்திட்டனர் பூசல்.
431. [illegible]
யாத்தெழித்தான்.
439. திருநகர்ச்செல்வ.
440. பொன்னிழைசுடருமேனி.
453. மடவார்மனம்போல மாய்ந்
455. நாறுநற்றுலந்தான். [தார்.
466. நாவைக்கனவினி லருளிவந்து.
478. நம்படைதம்முள்.
493. சாலவுடைநாய்கன்.
506. கனைகடலமுழவம். [பதி.
568. குலம்புரிந்தனைய குன்றிற்கதி
613. ஒருபிடிநுசுப்பினாளை.
615. மதுகரவீட்டமொத்தார்.
703. மணப்பொலிவெனுமணிக்கை மத்திகை.
712. எயின்றியிருந்தநீர்த்தேன்.
737. வீழ்த்தனள். [சொல்.
747. தண்ணியசிறியவெய்யதழற்
775. எழுயர்போதகம்.
793. வான்புலங்காவல்கொண்டார்.
796. அகில்கொண்ட கொள்ளிவட்டம.

840. மகளிருட்டொருவனுளை.
842. மாபிறந்தேனுக்குநின்றான்.
856. தொழுவிற்றோன்றியதோடறு
சேவலங்கிழவன்.
881. மல்லிகைமாலைசேர்ந்த.
882. இருந்தான், கோனமின்றைபீ
- - - - - - - -
றமொத்தே.
973. கடலென......ளெறிந்திடென.
1013. ஏவலாற்சேர்கலேன்.
1096. புரவலனிதனைச்சொன்றேன்.
1154. என்னையிக்கிருபிகொன்று.
1167. விழுச்சிறை.
1169. பவித்திரகுமரன்.
1200. மன்றுடைவேலிறெய்.
1210. இந்திரன்றன்னைநோக்கி.
1226. உழுவையன்றேற்கு.
1229. கடந்தான்காலிற்கழலானே.
1264. இறையுறுமெதிர்கொண்டு.
1266. உருபிற்றோன்றி.
1271. குறையரவு.
1509. நின்றுவந்து.
1570. கண்டவன்கண்ணிறேக்க.
1573. பாவைபோன்று.
1625. குன்றனன்சிந்திக்கின்றான்.
1659. கன்னிப்பிணையினிலைகலங்கி.
1661. திருந்துசோலைக்கருங்குயிலே.
1693. வரையுடைமார்பன்.
1841. குருந்தசாம்பீற்றலுயிருமணி
யிமணிவெணவிசைத்தன.
1889. பருகுவபங்கழல்.
1981. கட்டிலேறிய.
1997. நன்குராங்கு.
2382. தேனெய்யமர்பகம். [டென்ன.
2423. மலர்கிடெப்ற்றனயின்டெற
2453. கரும்பேபேசுபே... ...மானே.
2540. இடைகுறைநான்கின்றார்.
2542. துகிலிகைப்பாவையொத்தார்.
2552. பொய்ந்நங்கைமார்கள்.
2554. மூலைமுத........நம்பி.
2558. மூரல்........சேர்ப்ப.
2602. இல்லை.........வந்தான்.
2606. திருவன்றேன்.
2608. எங்கோபணியென்று.
2630. விளக்கிட்டன்னவள்.
2631. கயனெடுந்தடங்கண்ணி.
2651. பாவையன்றேன்.
2655. கட்டியங்காரனுக.
2707. வீசினைறகொடியனுறும்.
2719. கடிமலர்........ஒத்தான்.
2720. இணைந்திரியேறுபோல.
2730. தளிர்கலிசிவ.....ஒத்தான்.
2746. சொற்கடன்மன்னன்.
2781. ஆர்கண்ணேநோக்குமே.
2842. அடங்கலர்க்கீந்த.
2917. பூவலர்சொடியனூர்.

தொல்காப்பியவுரை முதலியவற்றில் இவரால் எடுத்துக்காட்டப்பட்டுள்ள மேற்கோள்களமைந்த நூற்பெயர்கள் முதலியவற்றுள் இதுகாறும் விளங்கியவை வருமாறு:—

௧. அகத்தியம்.
௨. அகநானூறு = நெடுந்தொகை.
௩. அணியியல்.
௪. அவிநயம்.
௫. ஆசாரக்கோவை.
௬. இராமாயண வெண்பா.
௭. இறையனாரகப்பொருள்.
௮. உதயணன் கதை = பெருங் [கதை.
௯. ஏலாதி.
௧௦. ஐங்குறுநூறு.
௧௧. ஐந்திணையெழுபது.
௧௨. ஐந்திணையைம்பது.
௧௩. ஔவையார் பாடல்.
௧௪. கடகண்டு.
௧௫. கலித்தொகை.
௧௬. களவழிநாற்பது.
௧௭. காக்கைபாடினியம்.
௧௮. கார்நாற்பது.
௧௯. காரைக்காற்பேயார்பாடல்.
௨௦. குணநாற்பது.
௨௧. குறிஞ்சிப்பாட்டு.
௨௨. குறுந்தொகை.

௨௩. கூத்தநூல்.
௨௪. கைந்நிலை.
௨௫. கொன்றைவேந்தன்.
௨௬. சிலப்பதிகாரம்.
௨௭. சிறுகாக்கைபாடினியம்.
௨௮. சிறுகுரீஇயுரை.
௨௯. சிறுபஞ்சமூலம்.
௩௦. சிறுபாணாற்றுப்படை.
௩௧. சினேந்திரமாலை.
௩௨. சீவகசிந்தாமணி.
௩௩. தகடூர்யாத்திரை.
௩௪. தந்திரவாக்கியம்
௩௫. திணைமாலைநூற்றைம்பது.
௩௬. திணைமொழியைம்பது.
௩௭. திரிகடுகம்.
௩௮. திருக்குறள்.
௩௯. திருக்கோவையார்.
௪௦. திருப்பாட்டு
௪௧. திருமுருகாற்றுப்படை.
௪௨. திருவாசகம்.
௪௩. திருவாய்மொழி.
௪௪. திருவுலாப்புறம்.
௪௫. தொல்காப்பியம்.
௪௬. நற்றிணைநானூறு.
௪௭. நாடகநூல்.
௪௮. நாலடியார்.
௪௯. நெடுநல்வாடை.
௫௦. பட்டினப்பாலை.
௫௧. பதிற்றுப்பத்து.
௫௨. பரிபாடல்.
௫௩. பல்காப்பியம்
௫௪. பல்காயம்.
௫௫. பழமொழி.
௫௬. பன்னிருபடலம்.
௫௭. பாரதவெண்பா.
௫௮. புறநானூறு.
௫௯. புறப்பொருள்வெண்பாமாலை.
௬௦. பூதத்தாரவையடக்கு.
௬௧. பூதபுராணம்.
௬௨. பெரும்பாணாற்றுப்படை.
௬௩. பெரும்பொருள்விளக்கம்.
௬௪. பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதி.
௬௫. பொருநராற்றுப்படை.
௬௬. மணிமேகலை.
௬௭. மதுரைக்காஞ்சி.
௬௮. மலைபடுகடாம்.
௬௯. மாபுராணம்.
௭௦. முத்தொள்ளாயிரம்.
௭௧. முதுமொழிக்காஞ்சி.
௭௨. முல்லைப்பாட்டு.
௭௩. மூவுரை.
௭௪. மோதிரப்பாட்டு.
௭௫. யாப்பருங்கலம்.
௭௬. யாழ்நூல்.
௭௭. வசைக்கடம்.
௭௮. வசைக்கூத்து.
௭௯. வளையாபதி.
௮௦. விளக்கத்தார்கூத்து.

தொல்காப்பியவுரைமுதலியவற்றில் வேதம், வேதாங்கம் முதலிய பல நூல்களிலிருந்தும் அவற்றின் உரைகளிலிருந்தும் பற்பல அரியவிஷயங்களை ஆங்காங்கு எடுத்துக்காட்டி நன்கு விளக்கிப்போகின்றமையாலும் பிறவாற்றாலும் இவரை வடமொழியிற் பலவகையான கலைகளிலும் மிக்க பயிற்சியுள்ளவரென்று சொல்லுதற் கிடமுண்டு.

உரையாசிரியர், சேனாவரையர், பேராசிரியர், ஆளவந்தபிள்ளையாசிரியர் முதலிய உரையாசிரியர்கள் இவருடைய உரையில் எடுத்துக்கூறப்பட்டிருத்தலின், அவர்களுக்கு இவர் காலத்தாற் பிற்பட்டவரென்று தெரிகின்றது. *

* இவர் கி. பி. 14 - வது நூற்றாண்டுக்கு முற்பட்டவரல்லரென்று பிரம்மஸ்ரீ T. S. குப்புஸாமி சாஸ்திரிகள் எழுதியிருக்கிறார்கள்; தமிழகம், வால்யூம். I, பக்கம் ௧௧ - வதைப் பார்க்க.

இவர், பழைய செய்யுட்களிலேயுள்ளவற்றின் கருத்துக்களையே யும் உதாரணமாக எடுத்தாளுவதுமுண்டு; அவற்றுட் சில வருமாறு:

3. அருந்து கடத்தின் மரம்போல வுடைந்தார்க்களித்தல் அவர்வியல்பு. (புறநா. ௧௯௫; நாலடி. க்ஷாக். ௨.)

192. அடுத்தது காட்டும் பளிங்கனை. (திருக். ௭௦௬.)
205. நன்மையுந் தீமையுங்கருதி. ( ,, ௫௧௧.)
214. இடித்துக் கூறல் அமைச்சர்க்கியல்பு. ( ,, ௬௩௮.)
252. அரசன் உவாத்தியாயன் தாய் தந்தை தம்முன். (ஆசார. ௧௬.)
272. இருதலைக் கொள்ளியிடைத்து எறும்புபோல். (திருவா. நீத்தல் ௩.)
547. சங்குசுட்டாலும் நிறங்கெடாதது. (மூதுரை, ௪.)
799. குடிப்பிறந்து பழிநாணுவார்க்கு. (1998.) (திருக். ௯௫௨.)
1592. சென்றவிடத்தாற் செல்லவிடாதே. ( ,, ௪௨௨.)
1631. இருதலைப் புள்ளின் ஓருயிரேம். (கலி. ௮௯.)
1731. ஆடவர் கூறுகாவருங் கடிவரைப்பு. (சிலப். ௧௫.)
1813. இடிக்குந் துணையார்சொற் கொள்ளாதே. (திருக். ௪௪௭.)
2384. மெய்புகுவன்ன மயக்கம். (அகநா. ௫௬.)
2358. தேவாசுரம் இராமாயணம் மாபாரதம். (கலித். அகம்பாடுளுது, ௧.)
2802. மார்பிற்கோதை. (புறநா. ௩௬.)

அமிர் இறுமிளிய தமிழ்மடவரல்செய் அருந்தவத்தின்பெரும்பயனாக அவதரித்தருளிய இம்மகோபகாரியின் அருமைபெருமைகள் விரிவஞ்சி எழுதாமல் இவ்வளவோடே நிறுத்தப்

## இக்காப்பியத்தலைவனாகிய

# சீவகன்சரித்திரச்சுருக்கம்.

### [க.—நாமகளிலம்பகம்.]

இப்பரதகண்டத்தில் ஏமாங்கதநாட்டில் இராசமாபுரத்திற் குருகுலத்திலே உதித்துச் செங்கோல்செலுத்திய சச்சந்தனென்னுமரசன், தன்மாமனும் விதையதேயத்தரசனுமாகிய ஸ்ரீதத்தன்மகள் விசயையை மணந்து அவளது பேரழகுபற்றியெழுந்த வேட்கைமிகுதியால் அவளோடும் அநவரதஞ் சுகித்திருப்பக் கருதி, நிமித்திகன்முதலிய மந்திரிமார்கூறிய உறுதிமொழியைக் கொள்ளானாய், கட்டியங்காரனென்னும் மந்திரியொருவனையழைத்து, அவனைநோக்கி "நீ இந்நாட்டைக் காத்துவருதி" எனவிதித்து, அந்தப்புரம் புகுந்து, தானெண்ணியவண்ணஞ் சுகித்திருந்தான்.

அரசன் அப்படியிருக்கையில், விசயை கருப்பமுற்று, ஒருநாளிரவில் மூன்றுகனாக்கண்டு, அவற்றின்பயன்களை அரசனாலுணர்ந்து அவற்றுள் ஒன்றால் வருத்தமுற்று, அவன் தேற்றத்தேறியிருந்தனள்.

அப்பொழுது கட்டியங்காரன் அரசனைக்கொன்று இராச்சியமுழுமையுந் தானேயாளக்கருதி, அறிவுடையோர் சொற்கேளானாய், தன் மைத்துனனாகிய மதனனோடியோசித்து, பின்பு அரசனிருக்கும் அந்தப்புரத்தைச் சேனைகளோடும் வளைந்துகொண்டான். அதனை அரசன் வாயில்காப்பாளனாலறிந்து, மனங்கலங்கிப் புலம்பிய விசயையைத் தேற்றி, அவளை முன்னமே தான் செய்வித்த மயிற்பொறிமேலேற்றி, மகப்பேற்றைக் கருதி ஆகாயவழியே வேறிடஞ்செல்ல விடுத்துத் தான்புறம்போந்து, கட்டியங்காரனோடும் அவன் படைவீரரோடும் போர்செய்து, பின்பு அவனால் மாய்ந்தனன். அப்பாற் கட்டியங்காரன் வெற்றிமுரசறைவித்து எல்லாவற்றையுங் கவர்ந்துகொண்டனன்.

ஆகாயவழியேசெல்லும் விசயை அம்முரசொலிகேட்டுக் கலங்கித் தான் ஊர்ந்துசெல்லும் மயிற்பொறியை முறுக்கிடத்தமாட்டாது மூர்ச்சித்தமையால், அப்பொறி அப்பாற் செல்லமாட்டாமல் அந்நகரத்தைச்சார்ந்த ஓர்மயானத்திடையே மெல்லவீழ்ந்தது. உடனே அவள் அவ்விடத்துச் சுபகாலத்தில் ஓராண்மகவைப்பெற்றுக் கவலையொருவாறொழிந்து, அக்குழந்தைக்குப் பாலூட்டி, அரசனிறந்ததற்கிரங்கி, அப்பிள்ளையைநோக்கி, "வேந்தே! அரசன் பலபல சிறப்புச்செய்யப் பிறக்குநீ பாவியேன்காண இங்ஙனம்பிறப்பது தகுதியா? உலகுடையாய்! நீ கிடக்கின்ற இடம் பகைவனிடமாயிராநின்றது; நினதுபாயல் சுடுகாடாயிராநின்றது; யானும் உசாவுதற்கு ஒருதுணையுமில்லாத் தமியேனாயிராநின்றேன்; நின்னைக் கொன்றுபோகக்கருதில், இக்கா

லம் போகவொண்ணாத இருளாயிராநின்றது; மேல் நிலையொருமாறும் அறியேனாயிராநின்றேன்; சிந்தாமணியே! நீ ஒன்றுமுணராயாமற் கிடவாநின்றாய்; என்னது வருத்தநீக்கப்பிறந்த நீ என்னிடத்துப் பிறந்த துன்பக்கடலை யானீந்துந் தெப்பமாகாதபொழுது என்னைக் காப்பவர்யாவர்? உரைக்கின்றிலை" என்று கூறித் தனியேயிருந்து வருந்திப் புலம்பும்பொழுது, அம் மயானத்துள்ள தெய்வமொன்று மனமிரங்கி, அவள்தோழியாகிய சண்பகமாலை வடிவங்கொண்டு அவள்முன்னேவந்து துயரந்தீரும்படி அவளுக்கு இனிய வார்த்தைகள்கூறி, அவளிடத்திருந்த (சச்சந்தன்பெயரெழுதப்பட்டுள்ள) மோதிரத்தைக் குழந்தைக்குச் சேர்த்தி அக்குழந்தையை ஒருபக்கங்கிடத்தி, அவளைநோக்கி "இனி இப்பிள்ளையை எடுத்துக்கொண்டுபோவதற்கு ஒருவன் வருவான்; ஆதலால், யாம் ஒளித்திருத்தல் நலம்" என்றுகூற, உடனே அவள் விலகிச்சென்று மறைந்து நோக்கிக்கொண்டு நின்றனள்.

அவள் அப்படிநிற்கையில், மரித்த தன்குழந்தையைப் புதைத்தற்கு அங்கேவந்த கந்துக்கடனென்னும் வணிகனொருவன் யாருமின்றித் தனியே கிடந்த அக்குழந்தையைக்கண்டு மிகுந்த மகிழ்ச்சியடைந்து அதின் கையிலிருந்த மோதிரத்தால் இராசபுத்திரனென்றறிந்து, பிறரறிந்துகொள்ளாதபடி அம்மோதிரத்தை மறைத்துக்கொண்டவனாய் அக்குழந்தையை அன்போடெடுப்ப, அது தும்மிற்று. அப்பொழுது தெய்வம் "சீவ" என்று வாழ்த்தியது. பின்பு கந்துக்கடன் அக்குழந்தையை எடுத்துக்கொண்டு விரைந்து சென்று இராசமாபுரத்துள்ள தன்வீட்டினுள்ளே புகுந்து தன்மனைவியாகிய சுநந்தையைநோக்கி, "நின்மகன் சாதலின்றித் தப்பினான்" என்றுகூறிக் கொடுப்ப, அவள் தொழுதுவாங்கிப் பெருமகிழ்ச்சியடைந்து வளர்த்துவருநாளில், முன்னந் தெய்வம் சீவவென்று வாழ்த்தினமைபற்றி, அறிவுடையோர் அப்பிள்ளைக்குச் சீவகனென்று நாமகரணஞ் செய்தனர். பின்பு சுநந்தை நந்தட்டனென்னும் ஒருபுத்திரனைப் பெற்றாள். இதுநிற்க.

மயானத்திருந்த விசயை தோழியாகவந்த தெய்வத்தோடே தண்டகாரணியம்புகுந்து, தவவேடம்பூண்டு, மகனுக்கு ஆக்கம் உண்டாகவென்று நோற்றுக்கொண்டிருந்தாள். தெய்வம், "இராசமாபுரத்திற்சென்று நின்புதல்வன்செய்தியை அறிந்துவருவேன்" என்றுகூறி விசயையிடத்து விடைபெற்றுப்போய்த் தானுறையும் புறங்காட்டைச்சேர்ந்திருந்தது. சீவகன் *தோழர்களோடும், தம்பிமாராகிய †நபுலவிபுலர்களோடும், நந்தட்டனோடும் இனிது வளர்ந்து உரியபருவத்தில் வித்தியாரம்பஞ் செய்விக்கப்பெற்று, கந்துக்கடன்

* சச்சந்தனிறந்தபின்பு, அவன் சுற்றத்தைக் கட்டியங்காரன் அழிப்பது தெரிந்து, சச்சந்தன்றோழர் தம்புதல்வர்களைக் கந்துக்கடனிடத்தே ஒப்புவித்து வளர்த்துவரும்வண்ணம் வேண்டிக்கொள்ள, கந்துக்கடன் அவர்களைச் சீவகனோடுசேர்த்து அன்போடு வளர்த்துவருவானாயினான். அதனால், அப்பிள்ளைகள் சீவகனுக்குத் தோழராயினர்.

† நபுலவிபுலர் - சச்சந்தனுடைய காமக்கிழத்தியர்புத்திரர்.

கட்டளைப்படி அச்சணந்தி யாசிரியரிடத்து வில்வித்தைமுதலியவற்றை எளிதிலே பயின்று சிலகாலத்துட் சகல வித்தியாபாரங்கதனாயினான்.

ஆசிரியர், சீவகனது புத்தியின்றிறமும் கல்விமுதிர்ச்சியுங்கண்டு அளவில்லாத ஆச்சரியமும் மகிழ்ச்சியுமுடையராய், முன்பு அவனுக்குத் தருமோபதேசஞ்செய்து, பின்பு அவனைத் தனியிடத்திற்கு அழைத்துச் சென்று, தாம் ஓராசனத்திருந்து அவனைநோக்கி "இந்நகரத்தரசனாயிருந்த சச்சந்தனென்பவன் பூர்ண கருப்பிணியாகிய தன்மனைவி விசயையை மயிற்பொறிமேற் போக்கிப் பின்பு கட்டியங்காரனென்னும் மந்திரியாற் கொல்லப்பட்டான். அவ் விசயை மயானமடைந்து ஒருபிள்ளையைப் பெற்றாள். அப் பிள்ளையைக் கந்துக்கடனெடுத்துவந்து தன்மனைவியாகிய சுநந்தைகையிற் கொடுப்ப, அவள் அன்போடு வளர்த்துவருவாளாயினாள்" என்று ஒருகதைமுகத்தாலே, கண்ணன் கன்னனுக்குப் பிறப்புணர்த்தியதுபோலக் கூற, அதுகேட்ட சீவகன் "அப்பிள்ளை யாவன்" என்று வினவ, ஆசிரியர் "நீதான்" என்றவுடன், சீவகன் பதைபதைத்து மூர்ச்சித்து, அவர்தேற்றத்தேறிக் கட்டியங்காரனைக் கொல்லுதற்குச் சந்நத்தனாயெழுந்தான். ஆசிரியர் அவனைநோக்கி, "மைந்த! இது காலமன்று; இன்னும் ஒருவருடஞ் சென்றபின்னர், நீ எண்ணியது செய்க; இப்பொழுது உன்னை வெளிப்படுத்தாதொழிக; இதுயான்வேண்டுவது" என்றுசொல்ல, சீவகன் ஆசிரியர்கட்டளையை மறுத்தற்கஞ்சி, "அப்படியே யாகுக" என்று உடன்பட்டான்.

பின்பு ஆசிரியர் தம்வரலாறு கூறுவாராய், அவனைநோக்கி "யான் முன்னம் வெள்ளிமலையிலுள்ள வாரணவாசி என்னும் நகரத்தரசன்; உலோகமாபாலனென்னும் பெயருடையேன்; தவஞ்செய்தற்கெண்ணி, மகனுக்கு அரசளித்துத் தவவேடம்புனைந்து நோன்புபுரிகையிற் பூர்வசன்மபாவத்தால் எனக்கு யானைத்தீயென்னும் நோய் உண்டாகியது; அதனால், மிகவும்வருந்தி ஒருவாற்றானுந் தீரப்பெற்றிலேனாய் இங்குவந்து நின்னைக்கண்டவுடன் அந்நோய் தீரப்பெற்றேனாதலின், நின்பாற் பெருவிருப்புற்று, நினக்குக் கல்வியறிவுறுத்தற்கே ஈண்டிருந்தேன். என்னெண்ணம்முற்றியது. இனித் தவஞ்செய்தற்குச்செல்ல எண்ணுகின்றேன்; விடைகொடு" என்ன, சீவகன் அவரைப் பிரிதற்குச் சிறிதுங் கருத்திலனாயினும் அவர் தவஞ்செய்யப்போதலை மறுத்தற்கஞ்சிச் சம்மதிப்ப, அவர் *இருபத்துநான்காந்தீர்த்தங்கரராகிய ஸ்ரீவர்த்தமானசுவாமிகளுடைய சமவசரணமடைந்து நோன்பியற்றி முத்தியடைந்தனர். சீவகன் இராசமாபுரத்தே யிருந்தனன்.

* தீர்த்தங்கரர் இருபத்துநால்வர். அவர்கள்பெயர்வருமாறு:—(௧) விருஷபர், (௨) அஜிதர், (௩) சம்பவர், (௪) அபிநந்தனர், (௫) சுமதி, (௬) பத்மப்ரபை, (௭) சுபார்ச்வர், (௮) சந்திரப்ரபை, (௯) புஷ்பதந்தர், (௧௦) சீதளர், (௧௧) சிரேயாம்ஸர், (௧௨) வாசுபூஜ்யர், (௧௩) விமலர், (௧௪) அநந்தர், (௧௫) தருமர், (௧௬) சாந்தி, (௧௭) குந்து, (௧௮) அரர், (௧௯) மல்லி, (௨௦) முனிசுவ்ருதர், (௨௧) நமி, (௨௨) நேமி, (௨௩) பார்சுவர், (௨௪) ஸ்ரீவர்த்தமானர்.

## [உ.—கோவிந்தையாரிலம்பகம்.]

சிலநாட்சென்றபின், ஒருநாள் அரசனதுபசுக்கள் சமீபத்துள்ள ஒரு மலையையடைந்து மேய்கையில், அம்மலையிலுள்ளவேடர் அவற்றைக் கவர்ந்து கொண்டுசெல்ல, அப்பசுக்களைப் புரக்குமிடையர் அவ்வேடர்களை யொன்றுஞ்செய்யமாட்டாது மறுகிச் சுழன்று விரைந்தோடிச் சென்று கட்டியங் காரனிடத்து முறையிட்டார். உடனே அவன் அவ்வேடரைவென்று நிரை மீட்டுவரும்படி தன்புதல்வர் நூற்றுவருக்கும் மதனனுக்குங் கட்டளையிட, அவர் படையுடனேசென்று, பொருது, அவ்வேடரால் தோல்வியுற்று மீண் டார். இடையர் மீட்டும்வந்து அச்செய்தியைக் கட்டியங்காரனுக்கறிவிப்ப, அவன் வாளாவிருந்தனன். அதனை, அவ்விடையர்தலைவனாகிய நந்தகோன் றெரிந்து வருத்தமடைந்து, "இந்நிரைமீட்டுவருவார்க்கு [illegible] என்கன்னியாகிய கோவிந்தையைத்தருவேன்" என்று வீதிதோறும் முரசறை வித்தான். அதுகேட்டும் வேடருக்கஞ்சிப் பலரும் சும்மாவிருந்தனர். அதனை யுணர்ந்த சீவகன், ஆளுருவாத்துப் போர்க்கோலங்கொண்டுசென்று யுத்தஞ் செய்து, அவ்வேடர் ஐம்பத்தாறுயிரவரும் தனக்கு ஒருவாற்றானும் பகைவ ரன்மையின் அவர்களைக் கொல்லாது அச்சுறுத்தி நிரைமீட்டுவந்து, நந்த கோன் வேண்டுகோளின்படி அவன்மகளைத் தான் அப்பொழுது மணஞ் செய்தல் தன்குலத்திற்குப் பொருந்தாதென்றெண்ணி, தன்தோழனாகிய பது முகனுக்கு மணஞ்செய்வித்தனன்.

## [ங.—காந்தருவதத்தையாரிலம்பகம்.]

அப்பால் வெள்ளிமலையிலுள்ள வித்தியாதரராசனாகிய கலுழவேகனென் பவன், தன்மகள் காந்தருவதத்தைக்கு இராசமாபுரத்தில் மணமகனுளனென்ப தைச் சோதிடராலறிந்து, அங்ஙனஞ் செய்விக்கத் துணிந்து, அவ் விராசமா புரத்து வணிகனாகிய ஸ்ரீதத்தனென்பான் ஒருதீவிற்சென்று பெரும்பொரு ளீட்டி நகரடையவெண்ணிப் பரிசனங்களோடும் மரக்கலமூர்ந்து கடலிற் செல்வதைத் தெரிந்து, அவனை யழைத்துவரும்படி தன்னிடத்துள்ள தரனெ னும் வித்தியாதரனொருவனை யனுப்பினன். அத்தரன் போந்து சனங்களுடன் கப்பல்முழுகியதுபோலே தன்வித்தைமகிமையால் ஸ்ரீதத்தனுக்குத் தோற்று விப்ப, ஸ்ரீதத்தன் அக்கப்பலினின்றும் குதித்துவிழுந்த ஒருமரத்துண்டத் தைத்தழுவி மெல்லமெல்லச்சென்று கரையையடைந்து வருந்தியிருந்தனன்.

அப்பொழுது, தரன் ஆறுசெல்வான்போன்று அவனைச்சந்தித்துத் தே ற்றி, அவனை யழைத்துக்கொண்டு கலுழவேகனிடஞ்செல்ல, கலுழவேகன் ஸ்ரீதத்தனுக்கு மிரம்ப உபசாரங்கள்செய்து அளவளாவியிருந்து, பின்னர்க் காந்தருவதத்தையின் வரலாறுகளைக்கூறி, அவளை வீணாபதியென்னுந் தோழி யுடன் அவனிடமொப்புவித்துப் பலபொருள்களுமுதவி, அவனைநோக்கி, "இசையில் இவளைவெல்வான் யாவனோ அவனுக்கு இவளை மணம்புரிவி" என்று சொல்லி விடுப்ப, ஸ்ரீதத்தன் அவளோடும் புறப்பட்டு விமானமூர்ந்து

போந்து, பரிசனங்களுடன் முழுகிப்போனதாகத் தான் முன்னங்கருதிய கப்பலைத் தரன்காட்டக்கண்டு உவப்புற்று, அதிலுள்ள தனக்கினியவரனைவருந் தன்னைச்சூழ இராசமாபுரஞ்சார்ந்து தன்மனையை யடைந்து தன்மனைவியாகிய பதுமைக்கு நிகழ்ந்தவற்றைக்கூறிக் காந்தருவதத்தையைக் கன்னிமாடத்தேயிருத்தி, கட்டியங்காரனைக்கண்டு அவனுடம்பாடுபெற்று ஒருமண்டபஞ்செய்வித்து, "இக் காந்தருவதத்தையை வீணையில்வெல்வோரே இவளை மணஞ்செய்தற்குரியர்" என்று பிரசித்தஞ்செய்தனன். அஃதுணர்ந்த பலதேயத்தாரும் அவ்விடத்தே வந்துகூடினார்கள். பின்பு ஸ்ரீதத்தன் காந்தருவதத்தையை யழைத்துவந்து, அம் மண்டபத்தேயிருத்தி, அவளை யாழ்வாசிக்கச்செய்தான். அதுகேட்ட பலரும் ஆச்சரியமுற்றனர். முதல் மூன்றுவருணத்தாருள்ளே இசையில்வல்ல ஒவ்வொருவருந் தனித்தனியேவந்து பாடியும், யாழ்வாசித்தும் அவளை வெல்லும்வல்லமை யில்லாராய்த் தோல்வியுற்றனர். இப்படி ஆறுதினஞ் சென்றன.

பின்பு இச் செய்தியுணர்ந்த சீவகன் தன்கல்வியைத் தோற்றுவிப்பான் ஆண்டுச் செல்லக்கருதித் தன்றோழனாகிய புத்திசேனனாற் கந்துக்கடனுக்குத் தெரிவித்தான். கந்துக்கடன் அநங்கமாலையென்னும் பரத்தைநிமித்தம் சீவகனிடத்துக் கட்டியங்காரனுக்கு மிக்க சினமுண்டாயிருத்தலை நாகமாலையென்பவளால் அப்பொழுது அறிந்துகொண்டமையால், "படையமைத்து அவ்விடஞ்செல்க" என்று சொல்லி விடுப்ப, சீவகன் அப்படியேபோந்து, அம்மண்டபமடைந்து, தான் இசையில்வல்லனாதலைப் பலர்க்கும் புலப்படுத்திக் காந்தருவதத்தையை வென்றனன். உடனே அவள் அவனுக்கு மாலையிட்டனள்.

அதுகண்டு அழுக்காறுற்ற கட்டியங்காரன் மனம்புழுங்கி, அங்குவந்திருக்கும் அரசர்களைநோக்கிப் பொறாமைவிளைத்தற்குரிய சிலவார்த்தைகள் கூறி, "அரசர்களே! இச் சீவகனைவென்றோனே இக் காந்தருவதத்தையை மணஞ்செய்தற்குரியன்" என்று கூற, அரசர் ஒருங்கு திரண்டுவந்து சீவகனோடு போர்செய்து தோல்வியுற்றனர். பின்பு சீவகன் காந்தருவதத்தையைத் தன்மனைக்கு அழைத்துச்சென்று சுபமுகூர்த்தத்திலே அவளை விதிப்படி மணம்புரிந்து அவளோடும் இன்புற்றிருந்தனன்.

## [௪.—குணமாலையாரிலம்பகம்.]

இப்படிச் சிலநாளாயபின், இளவேனிற்காலம்வந்தது. அப்பொழுது நகர்ப்புறச்சோலையில் விளையாடுதற்குச்சென்ற இராசமாபுரத்தினருட் சுரமஞ்சரியும் குணமாலையும் *சுண்ணங்காரணமாகத் தம்முண் மாறுபட்டுத் தஞ்சுண்ணங்களுள் நல்லதை அறிஞரால் அறிந்துவரும்படி தந் தோழியரிருவரையனுப்ப, அவர் அவ்வாறே அறிஞர்பலர்க்கும் அவற்றைக்காட்டினர். கண்ட அவர், "இவற்றைச் சீவகனுக்குக் காட்டுங்கள்" என்றனர். அம்மகளிர் அவன்மாட்டுச்சென்று அவற்றைக் காட்ட, அவன் குணமாலைசுண்

* சுண்ணம் - வாசனைப்பொடி.

னத்தைத் தக்கதென்றான். அவர் மீண்டுசென்று, அச்செய்தியைத் தம் தலைவியர்க்கறிவித்தனர். அதனைச் சுரமஞ்சரிகேட்டு அவலமுற்று, ''என் சுண்ணத்தை யிகழ்ந்தசீவகன் பின்னர் வலிந்துவந்து என்னைவிரும்பும்படி யான் நோற்பேன்'' என்றுகூறிப்பாலுணவொழித்துக் கன்னிமாடஞ்சென்று மற்றை யாடவரொருவரையுங் கருதாளாய்ச் சீவகனையே கருதி நோன்பியற்றியிருந்தனள்.

அவள் அப்படியிருக்க, அப் புறநகர்ச்சோலையிலே பிராமணருடைய சோற்றுக்குவியலை நாயொன்றுதீண்ட அதனை அப் பிராமணர் தடியால் மொத்தினர். அது பயந்து ஒருகுளத்தில்விழுந்து நீந்தி வருந்துந்தருணத்தில், அதனைச் சீவகன்கண்டு மிகவுமிரங்கிப் பஞ்சநமஸ்காரமென்னுமந்திரத்தை அதன் செவியில் உபதேசித்தான். உடனே அந்நாய் அவ்வுபதேசத்தால் தன்னுடம்பை ஒழித்துத் தேவனாகி விண்ணிற் சென்றது. யாவருங்கண்டு வியப்புற்றனர்.

பின்பு அத்தேவன் சுதஞ்சணனென்னும் பெயருடையவனாய் மீண்டு வந்து சீவகனை வணங்கிநிற்ப, சீவகன் ''நீயார்'' என்றனன். சுதஞ்சணன், ''ஈங்குநின்றும் நின்னருளாற்சென்று இயக்கர்தலைவனாய்ச் சங்கவெண்மலையிற் சந்திரோதயமென்னு நகரில் இருப்பேனாயினேன்; எனக்குப் பெயர் சுதஞ்சணனென்பது; நினக்குப் பணிபுரியுங் கருத்துடையேன்'' என்று சொல்ல, சீவகன், ''எனக்குப் பகைவரால் துன்பம்வரும்பொழுதுவந்து உதவிசெய்க; இப்பொழுது நின்னிடஞ்சென்றுறைக'' என்றுவிடுப்ப, சுதஞ்சணன் விசும்பாறாகச்சென்று தன்னகரமடைந்தனன்.

அவன் சென்றபின்பு, சோலையிலிருந்தோர்யாவரும் தத்தம் ஊர்திகளிலேறி, நகரிக்குச் செல்லுகையில், அசனிவேகமென்னும் பட்டத்துயானை செருக்குற்றுச் சங்கிலிபிணித்த கட்டுத்தறியை முறித்துப் பாகருக்கடங்காமற் குணமாலைக்கெதிரே சென்று சினந்துநின்று அவளைக் கொல்லத்தொடங்கியது. அதனைச் சீவகன்கண்டு, கட்டியங்காரன் பகைப்பானென்று கருதாமல், அந்தயானையின் செருக்கடக்கி, அதனை அப்பாற்செலுத்திக் குணமாலையைக் காத்தனன். முன்னரே சீவகன்மாட்டு விருப்புற்றிருந்த குணமாலை அவனை நேரிற்கண்டமையால் அவனிடத்தே அதிமோகமுடையவளாய்த் தன் மனையையடைந்து, தோழிமுதலாயினோர் நிரம்ப உபசரிக்கவும், உணவுமுதலியவற்றை வேண்டாளாய்ச் சோர்வுற்றுச் சீவகனிடத் தூதுசென்றுவந்த தன்கிள்ளையால், அவன் தன்னைவிரும்பியதுதெரிந்து ஒருவாறு துயரந்தீரப் பெற்றிருந்தனள். அதனை அவளுடையநற்றாயாகிய விநயமாமாலையறிந்து, தன் கணவனாகிய குபேரமித்திரனுக்குத் தெரிவித்தனள். அவன் சீவகனுக்குக் குணமாலையைக் கொடுத்தலில் மிக்க மகிழ்ச்சியுடையவனாய்த் தன் கருத்தை மொழிந்து சிலமுதியோரைக் கந்துக்கடனிடத்துத் தூதுவிடுத்தான். அம் முதியோர் அவனிடம்போய்ப்பேச, அவனுடம்பட்டபின் விவாகத்திற்குரியவை ஈட்டப்பட்டன. அதன்பின்பு, சீவகன் குணமாலையை மணம்புரிந்து அவளைப்பிரியாது மகிழ்ச்சியுற்றிருந்தான்.

சீவகன் இப்படியிருக்கையில், முன்னர் அவனுக்குத் தோல்வியுற்ற யானை நாணிக் கவளமுதலியன கொள்ளாமற் கோபத்தோடு நிற்றலைக் கட்டியங்காரனறிந்து, "இதற்குக் காரணம் என்ன" என்று வினவினான். பாகன் சீவகனால் நிகழ்ந்ததைக்கூற, உடனே அவன் சினந்து, தன் மைத்துனனாகிய மதனனையும் சில வீரரையுநோக்கி, "நீவிர்சென்று சீவகனாகிய செட்டிமகனை விரைவிற் கொணர்க" என்று ஆஞ்ஞாபிக்க, அவர்கள் சென்று சீவகனிருக்குமிடத்தை வளைந்துகொண்டார்கள். அதனை உள்ளேயிருந்த சீவகனறிந்து கோபங்கொண்டு யுத்தசந்நத்தனாய்ப் புறம்போந்தும் "இன்னும் ஒருவருடம் வரை கட்டியங்காரனிடத்துக் கோபங்கொள்ளாதிருப்பேன்" என்று முன்னம் ஆசிரியராணைக்கிசையத் தான் கூறியதைநினைந்து கோபந்தணிந்து நின்றவளவிலே, கந்துக்கடனும் சுநந்தையும்வந்து, "மைந்த! அரசனுக்கு அடங்கியொழுகுதல் ஆண்மை" என்றனர். அதனாலும் சீவகன் தன்வீரத்தை வெளிப்படுத்தானாய் மதனன்முதலியோர் சூழ்ந்துவரச் செல்லும்பொழுது, இக்கொடுமையைக்கண்ட ஊரவர்யாவரும் பதைப்புற்று வருந்திப்புலம்பியழுதனர். இச்செய்தியைத் தோழருந் தம்பிமாருங் கேட்டுச்சினந்து மதனன்முதலியோரை வெல்லுதற்குரிய உபாயத்தை நாடிக்கொண்டு நின்றனர். காந்தருவதத்தைகேட்டு, தன்கணவனைச் சிறைமீட்கக் கருதித் தன்தெய்வங்களைத் தியானிப்ப, உடனே அத்தெய்வங்கள் போந்து அவனைச் சூழ்ந்துகொண்டன. இவற்றைத் தெரிந்த சீவகன் "இனிச் செய்வதென்னை" என்று ஆலோசித்து, காந்தருவதத்தை தன் சிறைத்துயரநீக்க முயன்றதற்குநாணித் தன் உயிர்த்தோழனாகிய சுதஞ்சணனை நினைத்தான். நினைத்தவுடன் அச்சுதஞ்சணனுக்கு இடக்கண்ஆடியது; ஆடினவளவிலே, அவன் இதனால் எனக்குத் தீங்குவருமோவென்று நோக்காது முதலிலே சீவகனை நினைந்தான். நினைந்து அவனுற்ற துன்பத்தைத் தனது ஞானத்தாலறிந்து விரைந்துவந்து யுகமுடிவுவந்ததுபோலத் தோற்றும்படி அவ்விடத்துக் காற்றும் மழையும் மிக்குவரச்செய்து ஒருவருக்குந் தோற்றாமற் சீவகனையெடுத்து மார்போடணைத்து ஏந்திச்சென்று தன்னகரமடைந்து, அவன்பெருமையையும் அவன் தனக்குச்செய்த பேருதவியையுந் தன்றேவியர்க்கு விளங்கக்கூறி, அவனை மகிழ்வித்து, அவனோடும் அவ்விடத்தேயுறைந்தனன்.

இங்கே மதனன் சீவகனைக் காணாது திகைத்து, "கட்டியங்காரனிடத்து என்னசொல்லுவோம்" என்றெண்ணி, ஆங்குள்ளானொருவனை வாளாற்பிளந்து உருத்தெரியாமற் புரட்டிவிட்டுக் கட்டியங்காரனிடஞ்சென்று, "நின்கட்டளைப்படியே சீவகனைப் பிடித்துக் கொண்டுவருகையில், மழையுங் காற்றும் அதிகரித்தமையால் ஈண்டுக் கொணர்தற்குத் தடையுற்று, அவ்விடத்தேயே அவனைக் கொன்றுவிட்டேன்" என்றான். கட்டியங்காரன் பெரிதும் வியப்புற்று, "சீவகனைக்கொல்லுதல் மிகவுமரிது; அவனைக் கொன்றநீ இவற்றைப் பெறுவாயாக" என்று மதனனுக்குப் பல சிறப்புக்களுஞ் செய்து அவனை மகிழ்வித்தான்.

## [௫.—பதுமையாரிலம்பகம்.]

அங்கே சுதஞ்சணன் பலதேயங்களையும் ஆங்காங்குள்ள மலைகள் ஆறுகள் முதலியவற்றையுங் காணுதற்குச் சீவகன் விருப்புற்றிருப்பதைத் தெரிந்துகொண்டு, அவற்றின் வழிமுதலியவற்றைக் கூறி, பின்னர்க் காமனும் விரும்புங் கட்டழகமைந்த சரீரத்தைக்கொடுப்பதும் விடமுதலியவற்றைக் கெடுப்பதும் வேண்டியவுருவைத் தருவதுமாகிய மூன்றுமந்திரங்களை அவனுக்கு மொழிந்து, அவனையேந்திக் கொண்டு தன்மலையினின்றுமிறங்கிப் பூமியில்விடுப்ப, சீவகன் அவன் முன்னர்க் கூறிய வழியேபோய், மிருகங்களையும் பறவைகளையுங் கொன்று தின்று திரியுங்கொடிய வேடுவர்களைக் கண்டு, அவரை நல்வழிப்படுத்த நினைந்து, அவருக்கு உறுதிமொழியுரைத்தனன்.

உரைத்து அப்பாற்சென்று காட்டுத்தீயால் வளைக்கப்பட்டுநின்ற யானைத்திரளின் வருத்தத்தை நீக்கினான்; நீங்கி அரணபாதமென்னும் அசலமடைந்து, ஆங்குள்ள அருகக்கடவுளையும் சாரணரையும் வழிபட்டேத்தி, அப்பாற் பல்லவதேயத்துள்ள சந்திராபமென்னு நகரையணைந்து, அந்நகரத் தரசனாகிய தனபதிமகன் உலோகபாலனோடு நட்புற்று, அவன்சகோதரியாகிய பதுமையென்பவள் சோலையிற்சென்று பூக்கொய்து விளையாடுகையிற் பாம்புகடித்தமையால் அவளுக்குண்டான விடவேகத்தைப் போக்கி அவளை மணம்புரிந்து, அவளோடும் அவ்விடத்தே இரண்டு மாதந்தங்கி இன்புற்றிருந்து பின்பு வேறிடஞ்செல்ல விருப்புற்று ஒருநாளிரவினிடையில் ஒருவரோடுஞ் சொல்லாது வேற்றுருக்கொண்டு அந்நகரினின்று நீங்கி, அப்புறஞ் செல்வானாயினன்.

பின்பு பதுமை சீவகன் தன்னைநீங்கியது தெரிந்து துன்பக்கடலில் வீழ்ந்து, அவனோடு கூடியிருக்கையில் இன்பம்விளைவித்த ஒவ்வொருபொருளையுங்கண்டு பலவாறு புலம்பித் தன்றோழிமாருள் அறிவுடையாளொருத்தி தேற்ற ஒருவாறு தேறியிருந்தனள். இஃதுணர்ந்த தனபதி மிகவுங்கவலையுற்றுச் சீவகனைநாடிக் கொணருமவண்ணம் சிலரையனுப்ப, அவர் சீவகனைப் பலவிடத்துந்தேடி யலைந்து பின்பு கண்டு, "நின்னைப் போன்றவொருருவினைக் கண்டதுண்டாயிற் கூறுக" என்ன, சீவகன் அவரைநோக்கி, "அவனை ஒன்பதாந்திங்களிலே காண்பீர்; அதற்குமுன்னர்க் காணீர்; யான் கூறியது பொய்யுரையன்று; இச்செய்தியை நும்மரசனுக்குக் கூறுமின்" என்று விடுப்ப, அவர்போந்து அச்செய்தியைத் தனபதிக்குத் தெரிவித்தார். அவன் ஒருவாறு வருத்தமொழிந்திருந்தான். சீவகன் அப்பாற் சென்றனன்.

## [௬.—கேமசரியாரிலம்பகம்.]

அப்படிச்சென்ற சீவகன் பலவிடங்களையுங்கடந்து சித்திரகூடமென்னுந் தவப்பள்ளியைச் சார்ந்து, அதிலிருந்த தாபதர்களோடும் அளவளாவி அவர்களைத்திருத்திப் பின்னர்த் தக்கநாட்டிலுள்ள கேமமாபுரத்தை யடைந்தனன்.

முன்பு, அந்நகரத்துள்ள வேதவணிகனாகிய சுபத்திரனென்பவன், தனக்குக் கேமசரியென்ற ஒருபுத்திரி பிறந்தபொழுது அவளுக்குச் சாதகங்கணித்தற்குப் போந்த கணிதனைநோக்கி, "இவளுக்குக் கணவன்யாவன்" என்ன, அவர் "நின்மகளுக்குக் கணவனல்லாதார் ஆடவராகத் தோன்றாராதலின், அவள் எவனைக்கண்டு நாணுகின்றாளோ அவனே அவளுக்குக் கணவனாவான்" என்றனர். அதுகேட்டவணிகன் அது தொடங்கி நாடோறும் வருவோர் பலரையும் தன்மனைக்கழைத்துச் சென்று உபசரித்து விருந்தூட்டி ஒருவனையுங்கண்டு அவள் நாணாமைதெரிந்து, "இவளுக்குக் கணவனாவான் வருங்காலம் உளதோ" என்று கவலையுற்றிருந்தான்.

அப்படியிருந்த சுபத்திரன் சீவகனைச்சந்தித்து அவன்வடிவழகுகண்டு மகிழ்ச்சியுற்று, அவனைத் தன்வீட்டிற்கு அழைத்துச்சென்றான். சென்றபொழுது கேமசரி சீவகனைக்கண்டு நாணமடைந்து பின்னர் மோகமுற்று வருந்தினாள். அதையறிந்த சுபத்திரன் சீவகனுக்கு அவளை மணம்புரிவிக்க, அவன் அவளோடும் அவ்விடத்தே இரண்டுதிங்கள் தங்கியிருந்து பின்பு வேறிடஞ் செல்லக்கருதி, அவளிடத்துச் சொல்லாது பிரிந்து சென்று, எதிர்ப்பட்டானொருவனுக்குத் தருமோபதேசஞ்செய்து தன் அணிகலன்களை அவனுக்களித்து, அப்பாற்செல்வானாயினான்.

கேமசரி சீவகனைக்காணாது திகைத்துப் பிரிவாற்றாது பலவாறுபுலம்பித் தன் நற்றாயாகிய நிப்புதியென்பவள் தேற்ற, ஒருவாறு துயரந்தீர்ந்திருந்தனள்.

## [எ.—கனகமாலையாரிலம்பகம்.]

பின்பு சீவகன் சிலவிடங்களைக் கடந்துசென்று மத்திமதேயத்துள்ள ஏமமாபுரமென்னுநகரிக்குச் சமீபமாகிய ஒருபூஞ்சோலையையடைந்து, ஆங்குள்ள அழகான ஒருபொய்கையைக்கண்டு, அதின்வளங்களைநோக்கிக் காந்தருவதத்தையையும், குணமாலையையுநினைந்து பலவாறுபுலம்பி மிகுந்தவருத்தமடைந்து அப்பாற்செல்லாது அவ்விடத்தே யிருந்தான். அப்பொழுது அந்நகரத்தரசனாகிய தடமித்தன்புதல்வன் விசயனென்பவன் அச்சோலையையடைந்து சீவகனைக்கண்டு, "இவன் இவ்விடத்தானல்லன்" என்றெண்ணி, தேயமுதலியவற்றை வினவ, சீவகனும் தானின்னானென்று புலப்படாவண்ணம் அவற்றைக்கூறி, அவ்விடத்துப் பலமுறைமுயன்றும் அவ்விசயன் எய்து வீழ்த்தமாட்டாத மாங்கனியொன்றைத் தான் ஓரம்பாலெய்து அவ்வம்புடன் அம்மாங்கனி தன்கையில்வரப்பெற்றுத் தான் வில்வித்தையில் வல்லனாதலை வெளிப்படுத்த, அதனை அவ்விசயனறிந்து மகிழ்ந்து சீவகனை உடன்கொண்டு சென்று தன்றந்தையாகிய தடமித்தனுக்கறிவித்தான். அவன் சீவகனைக் கண்டு உவப்புற்று, விசயன்முதலிய தன்புத்திரரைவர்க்கும் வில்வித்தைமுதலியன கற்பிக்கும்படி அவனை நியோகிப்ப, அவன் அவற்றை அவர்களுக்குக் கற்பித்துவருகையில், அவர்கள் அவ்வித்தைகளில் மிகவும் வல்லுநராயினார். அதனை அரசனறிந்து அளவில்லாத மகிழ்ச்சியுற்று, அவனைத் தன்னிடத்தே

வைத்துக்கொள்ளக்கருதித் தன்புத்திரி கனகமாலையை அவனுக்கு மணம்புரிவிக்க, அவன் அவளோடுகூடி அவ்விடத்தே யிருந்தான்.

சீவகன் அங்ஙனமிருக்க, நந்தட்டன் அவன் இன்னவிடத்திலுள்ளானென்பதை யறியாதாய் நாடெங்குந்தேடியும் அவனைக்காணாது வருந்திக் காந்தருவதத்தையை வினவி, அவள் செய்த வித்தையின்மையாற் சீவகன் ஏமமாபுரத்திற் கனகமாலையோடிருத்தலை நேரிற்கண்டு மகிழ்ச்சியடைந்து அவளை வணங்கி, "அடியேன் சீவகனை யடையும்படி அருள்புரிவாய்" என்றுவேண்ட, காந்தருவதத்தை தன்வித்தைவிசேடத்தால் நந்தட்டனைச் சீவகனிருக்குமிடத்தை யடையச்செய்தாள். அப்படியடைந்த நந்தட்டனைச் சீவகன்கண்டு ஆநந்தமுற்றுத் தழுவி, எல்லாச்செய்திகளையும் வினவி, அவனை மகிழ்வித்து அவனோடும் அந்நகரத்திருந்தான்.

இச்செய்தியையறியாத தோழன்மார் கவலையிக்குக் காந்தருவதத்தையை யடைந்து சீவகன் ஏமமாபுரத்தே இருத்தலையும், நந்தட்டன் அவனிடத்தடைந்ததையும் அவளாற் றெரிந்துகொண்டு தாமும் சீவகனிடஞ்செல்லக் கருதி அவளுக்குத்தெரிவித்து விடைபெற்றுப் பலவீரர்களோடும் புறப்பட்டு ஏமமாபுரஞ் செல்வாராய், விசயை தவஞ்செய்துகொண்டிருக்குந் தவப்பள்ளியையடைந்தனர். அப்பொழுது விசயை அவர்களை நோக்கி, "நீங்கள் எங்குள்ளீர்? எங்குச் செல்கின்றீர்" என்று வினவ, தம்வரலாறு சொல்லுகையிற் சீவகன்வரலாறுஞ் சொல்லும்படி நேர, அதனைக் கூறுகின்ற தேவதத்தன், "கட்டியங்காரன் கட்டளையால் மதனன்முதலியோர் சீவகனைக் கொல்லக் கொலைக்களங் குறுகவும் ஒருதெய்வம் வந்துகாத்தது" என்றுசொல்லவெண்ணி, "சீவகனைக்கொல்ல" என்றளவில் விசயை பதைபதைத்து மூர்ச்சித்துப் பின்பு எழுந்து சீவகன்வரலாறுகளை வெளிப்படச்சொல்லிக் கண்ணீர் விட்டுப் பிரலாபித்தழுகையில், தோழர் தம்முள் ஒருவரையொருவர் நோக்கி மகிழ்ந்து அவளைச் சீவகன் நற்றாயென்றும், சீவகனை இராசகுமாரனென்றும் விளங்க அறிந்தவர்களாய்ச் சீவகன் இறவாதிருத்தலை அவளுக்குணர்த்த, விசயை, "என் மீதுவைத்த காதலாலே என்னுறை இறந்தபின்பு, யான் மிகுந்ததுன்பமடைந்தேன்; இச்செய்தியை என் ஐயனுக்கு உணர்த்தி அவனை என்னிடத்து அழைத்துவாருங்கள்" என்றுசொல்ல, தோழர்வணங்கி, "தாயே ஒரு மதிக்குள்ளே நும்பாற் சீவகனை அழைத்துவருவேம்; நீவிர் கவலைப்பட வேண்டாம்" என்றுசொல்லி விடைபெற்று ஏமமாபுரத்தைச் சார்ந்த ஒருசோலையையடைந்து அங்கிருந்துகொண்டு அந்நகரத்தில் நந்தட்டனுஞ் சீவகனிருத்தலை ஒற்றரால் அறிந்து அவனைக் காணுமாறு எங்ஙனமென்று ஆலோசித்து யுத்தஞ் செய்யவந்தவர்களைப் போலவே கோலங்கொண்டு அந்நகரைவளைத்து அரசன் பசுக்களைக் கவர்ந்தனர்.

அதனையறிந்து சினந்த அரசன்கட்டளையாற் பெரும்படையுடன் தேர்மீதேறிப் போர்செய்தற்கு நந்தட்டனுடனேவந்த சீவகனைக்கண்டு, பதுமுகன் "அடியேம் நின்றிருவடிநிழலிலே உறையவேண்டிச் சச்சந்தன் மகனுடைய

னின்னைக் காணவந்தேம்" என்று எழுதியெய்த அம்புசென்று சீவகன்றேர் மீது மாறிவீழ்ந்தவளவிலே சீவகன் இக்கணையை இவ்வாறு வீழும்படி எய்தவன் பதுமுகனே யென்றறிந்து போர்செய்யாதபடி தன்படையை விலக்கி நிற்ப, தோழர்சென்று அவனைவணங்கிப் பேரானந்தமுற்று அவனோடு நகரஞ்சென்று அரசனைப் பணிந்தனர். அரசன், "இவர்கள் யார்" என்று வினவ, சீவகன், "என் உயிர்த்தோழர்" என்றான். பின்பு சீவகன் தனியேயிருந்து தோழரைநோக்கி, "என்னிலைமையை எங்ஙனமறிந்தீர்" என்ன, அவர், "சச்சந்தன் தேவியாகிய விசயையைத் தண்டகாரணியத்துக்கண்டு தெரிந்துகொண்டோம்" என்றார். உடனே சீவகன் கண்ணீர்சொரிய, உரோமஞ்சிலிர்ப்ப, "மகாபாவியாகிய என்னைப்பெற்ற அடிகளும் உளரோ உளரோ" என்று பன்முறைவினவி, அவரிருக்கின்றதிசை எங்கேயெங்கேயென்று கேட்டு, அத்திசையைநோக்கி விரையவணங்கி அங்குச்செல்லுங் கருத்துடையவனாகி விடைபெறுதற்பொருட்டுத் தடமித்தன்பாற் சென்றான்.

உடனே அவனும் தோழராற் சீவகன் வரலாறனைத்துந் தெரிந்துகொண்டு மகிழ்ந்து விடைகொடுக்க, சீவகன் கனகமாலையை அவ்விடத்தே வைத்துவிட்டு எல்லாரோடும் புறப்பட்டு வழிக்கொண்டு சென்றான்.

## [௮.—விமலையாரிலம்பகம்.]

சென்ற சீவகன் தோழரோடும் தண்டகாரணியமடைந்து தன்வரவு நோக்கிக் கொண்டிருந்த விசயமாதேவியைத் தரிசித்து வணங்கிப் பேரானந்த முற்றான். விசயையும் சீவகனை எடுத்துத்தழுவிப் பெரிதும் பாராட்டி அன்புறுவாளாயினள். இங்ஙனம் ஆறுதினஞ்சென்றன. பின்பு விசயை தோழருட் சிலரை வேறேயழைத்துச் சில உபாயங்களைக்கூறிப் பின்பு சீவகனை நோக்கி, "நின்மாமனாகிய கோவிந்தனைக் கண்டு, அவனேவலாற் பகையை வெல்லக்கடவை" என்ன, சீவகன், "உமதுகட்டளைப்படியே செய்வேன்" என்றுகூறி, ஆங்கிருந்த சில தவமகளிரோடும் விசயையைமுன்னதாகத் தன் மாமனகரிற்கனுப்பிவிட்டுத் தான்குதிரையேறி எல்லாரோடும் ஏமாங்கதநாட்டைச்சார்ந்து இராசமாபுரத்தின் அருகேயுள்ள ஒருசோலையிற்றங்கி உண்டுறங்கியபின், மற்றைநாட்காலையிற் றோழரை அவ்விடத்தே வைத்துவிட்டுத் தான் மகளிர் விரும்புதற்குரிய ஒருவடிவங்கொண்டு, அந்நகரத்து வீதியிற்சென்றான்.

அப்பொழுது, தான் விளையாடிய பந்தினுளொன்று எழும்பிச்சென்று சீவகன்முன்னே வீழ அதனை எடுத்தற்கு வந்த விமலையென்பவள் அவனைக் கண்டு வேட்கையதிகரிக்கப்பெற்று நெஞ்சங்கலங்கி நாணமகன்று வருந்துவாளாயினள். சீவகனும், அவள் பேரழகை நோக்கி அதிகமோகங்கொண்டு அப்பாற்செல்லமாட்டாது அவள் தந்தையாகிய சாகரதத்தனுடைய கடையிலே வருந்தியிருந்தான்.

சாகரதத்தன் தன்னிடத்துப் பலநாளாக விலையாகாதிருந்த சரக்கையெல்லாம் அப்பொழுதுவிற்று மிகவுமகிழ்ச்சியடைந்து சீவகனைச்சந்தித்து,

கட்டிலின்மீதுள்ள பஞ்சணையிலே படுக்கச்செய்ய, அம்முதியோன் சிறிது நேரம் உறங்குவான்போற்கிடந்து பின்னர் ஒருகீதத்தைப் பாடினான். கேட்ட மகளிர் வியப்பிதமுற்றனர். சுரமஞ்சரி நாணிநகைத்துக் கேட்டுக்கொண்டு நின்றனள்.

அங்ஙனம்நின்ற சுரமஞ்சரி, "இப்பாட்டுச் சீவகன்பாட்டை ஒத்துளது" என்று தோழியர்வியந்து சொல்லக்கேட்டு, "நாளைச்சென்று காமனைவழி பட்டு, 'இப்பாட்டையுடைய சீவகனை விரைவிற்றருக' என்று வேண்டிக் கொள்வேன்" என்றுகூறி, மற்றைநாளில் தன்னுயிர்த்தோழியுடனே அவ் வேதியனையும் அழைத்துக்கொண்டு சகடமூர்ந்து, ஆடவர்காணாமற் காமன் கோட்டத்தை யடைந்து, தான்பரவுகின்றது கேளாதபடி கூடவந்த அந்த ணனை ஆங்குள்ள ஓரறையில் வைத்துவிட்டுச் சென்று காமனைவணங்கி, "பூமலிமார்பனே! எனக்குச் சீவகனை விரைவிற்றரின் மகரக்கொடியும், அம்பும், கருப்புச்சிலையும், தேரும், ஊரும் தருவேன்" என்றுவேண்ட, ஒளித் திருந்த புத்திசேனன், "சீவகனை நீபெற்றாய்; இனி விரைவிற்செல்" என்றுசொல்ல, அதனை அவள் காமத்தெய்வம் வாய்விட்டுக் கூறியதாகவே யெண்ணிப் பின்னும் பரவி மீண்டுவந்து அறையிடத்தே உரிய வடிவுகொண் டுநின்ற சீவகனை நெஞ்சுகுளிர்க்கண்டு நாணி நைந்துநிற்ப, சீவகன் மிக்க காதலுடையனாய்ச் சுரமஞ்சரியைத்தழுவி, "நின்னை நாளைமணஞ்செய் வேன்" என்றுவிடுப்ப, அவள் தன்மனையையடைந்தனள்.

தோழர் இச்செய்தியைப் புத்திசேனனாற் றெரிந்துகொண்டு சீவகனைக் "காமதிலகன்" என்று புகழ்ந்தனர். நிகழ்ந்த இச்செய்தியைச் சுரமஞ் சரியின்தாயாகிய சுமதியும் தந்தையாகிய குபேரதத்தனுங்கேட்டு மகிழ்ந்து சுற்றத்திற்கெல்லாமறிவித்துச் சீவகனுக்குச் சுரமஞ்சரியை மணஞ்செய்வித் தனர். சீவகன் அவளோடும் அன்று அவ்விடத்தே தங்கியிருந்து, மற்றைநா ளெழுந்து தோழர்சூழத் தன்மனையை யடைந்து, தன் குதிரைமுதலியவற் றைநோக்கித் தன்னையேநினைந்து அழுது புலம்பி யுருகிக்கொண்டிருக்கின்ற சுநந்தையையும் கந்துக்கடனையுங்கண்டு வணங்கி, அவர்கள் வருத்தத்தைப் போக்கி, மற்றையோரை மகிழ்வித்து, காந்தருவதத்தையைக்கண்டு, குண மாலையைத் தேற்றி, மேல்முடியுங் காரியங்களைக் கந்துக்கடனுக்குக்கூறி, விடைபெற்று, குதிரைகொள்ளும்வாணிகன்போல வேடம்பூண்டு, தோழர் சூழ ஏமாங்கதநாட்டைக்கடந்துசென்றான்.

## [௧௦.—மண்மகளிலம்பகம்.]

அங்ஙனஞ்சென்றசீவகன் விதையநாட்டையடைந்து நகரத்தார் எதிர் கொண்டுவிரும்பச் சென்று தன்மாமனாகிய கோவிந்தராசனை வணங்கினான். கோவிந்தராசன் மகிழ்ந்து விருந்துசெய்வித்துச் சீவகனுக்கு மேல் நடத்த வேண்டுவனவற்றை யெண்ணித் தன்மகளாகிய ஸ்ரீதத்தனுக்குச் சுபகாலத் தில் அரசளித்து எல்லாரோடுமிருக்கையில், தன்னை இராசமாபுரத்து

வரும்படியேனைத் தன் கருத்தறிதற்பொருட்டு வணக்கமுடையவன்போலே தனக்குக் கட்டியங்காரனனுப்பிய வஞ்சகவோலையை விரகனொருவன் படிப்பவறிந்து, "கட்டியங்காரனைக் கொல்லுதற்குரிய காலம் இதுவேபோல வேறொன்றுமில்லை" என்று சீவகனுடன் கூறிக்கொண்டு, காலாளைச் சேனையொடும் புறப்பட்டு இராசமாபுரத்தின் பக்கத்தே வந்து தங்கினான். அப்பொழுது கட்டியங்காரனுக்குத் தீநிமித்தங்கள் நிகழ்ந்தன.

அவைநிகழ்ந்தபின், கோவிந்தன் கட்டியங்காரனைக் கபடமாக வருவிக்கவெண்ணித் திரிபன்றியந்திரமொன்று செய்வித்து, "இவ்யந்திரப்பன்றியை எய்துவீழ்த்தியவனே என்மகள் இலக்கணைக்குக் கணவனாவான்" என்று பிரசித்தஞ்செய்தான். அதுதெரிந்த கட்டியங்காரனும், பலதேயத்தரசரும் அவ்விடத்தே வந்துகூடி அந்தயந்திரத்தைநோக்கி வியப்புற்றனர். பின்பு இலக்கணையை விரும்பிய அரசிளங்குமரர் தனித்தனியேயெழுந்து வில்லைவளைத்து அம்புதொடுத்து அப்பன்றியை எய்துவீழ்த்தமாட்டாதவராய் மெலிவடைந்தனர். அப்பொழுது சீவகன் யானைமேற்கொண்டு வெளிப்பட, அவனை இறந்தானென்று கருதியிருந்த கட்டியங்காரன் கண்டு துணுக்குற்றுப் புலியைக் கண்ட மான்போலே அஞ்சிக் கலக்கமுற்றான். சீவகன் யானையினின்று மிறங்கி அவ்யந்திரத்திலுள்ள சக்கரத்தின்மேல் ஏறிநின்று வில்லைவளைத்து அம்புதொடுத்து அப்பன்றியை வீழ்த்தினான்.

அப்பொழுது கோவிந்தன் கட்டியங்காரனுக்கும் மற்றையோருக்கும் சீவகனை இன்னானென்று விளங்கக் கூறினான். அதன்பின்பு ஆகாயத்திடத்தே ஓரியக்கன்தோன்றி, "சீவகனுடைய சிங்கம் கட்டியங்காரனுடைய களிற்றினை விழுங்கும்" என்று கூறக்கேட்டுக் கட்டியங்காரன் மிகச்சினந்து சீவகனைநோக்கி, "நினக்கு ஒருபொழுதும் அஞ்சவேனல்லேன்; எனது ஆற்றலை நின்தந்தையறிவன்; நீயறியாய்; நின்னையும் என்னைக் கபடமாக வருவித்துக்கொல்லத் துணிந்த நின்மாமனையும் வெல்லும் விருப்புடையேன்; போர்செய்தற்கு எழுக" என்றுசொல்லித் தன்மக்கள் நூற்றுவரோடும் மற்றை அரசர்களோடுங்கூடி யுத்தசன்னத்தனாக, சீவகனும் தோழரோடும் தம்பிமாரோடும் மற்றையரசரோடும் புறப்பட, அவ்விருதிறத்தார் சேனையும் எதிர்த்துநின்று போர்செய்தன. சீவகன்படைவீரரால் கட்டியங்காரன்படைவீரரிற் சிலர் மாய்வுற்றனர்; சிலர் தோற்றோடினர். பின்பு சீவகன், கட்டியங்காரன் புதல்வர் நூற்றுவரையும் பதுமவியூகம்வகுத்து அதனுள்ளேயிருந்த அவனையுங் கொன்றுவிளங்கினான். எல்லாரும் புகழ்ந்தனர். விசயைகேட்டு மகிழ்ந்தனள்.

## [கக.—பூமகளிலம்பகம்.]

பின்பு சீவகன் இராசமாபுரமடைந்து மாளிகைபுகுந்து, தன்னைக் கண்டு நடுங்கிய கட்டியங்காரன் பரிசனங்களுக்கு அபயமளித்து, வேண்டும்பொருள்களும் விருத்தியுமுதவி, அவர்விருப்பின்படி உரியவிடங்களுக்குப் போகச்செய்து, பின்பு எல்லாவிடங்களையுங் கண்ணுற்று முத்திரைவைத்துக் காவ

விட்டு, யுத்தவீரர்களை இளைப்பாறச்செய்து மகிழ்வித்து, வேத்தவைசார்ந்து சுபகாலத்திலே சிங்காசனத்தில் வீற்றிருந்து மணிமுடிசூடி, கட்டியங்காரனாற் றுன்பமுற்ற யாவரையும் இன்பமுறுவித்து, நீதிநெறியை நடாத்தி அரசியற்றுவானாயினான்.

## [கஉ.—இலக்கணையாரிலம்பகம்.]

பின்பு அவன் தன்னருகிலுள்ளாரை நோக்கி, "பதுமைமுதலிய தேவியரை அழைத்துவருவீர்" என்ன, அவர் உடனே ஆங்காங்குச் சென்று அவர்களை யழைத்துவந்தார். வந்தமங்கையர் சீவகனைத் தொழுதுவணங்கி, அவனால் அங்கீகரிக்கப்பட்டுப்பெருமகிழ்ச்சியோடிருந்தனர்.

அப்பால் கோவிந்தராசன் இலக்கணையைச் சீவகனுக்கு மணஞ்செய்விக்கக் கருதிக் கணிதர்களால் விவாகமுகூர்த்தம் வரையறைசெய்து முரசறைவித்து நகரையலங்கரிப்பித்து, குறித்த முகூர்த்தத்தில் விதிப்படி சீவகனுக்கு இலக்கணையை மணஞ்செய்வித்தான். பின்பு சீவகன் எல்லாருங்கண்டு மகிழும்படி நகர்வலமாகப் பவனிவந்து, ஆலயமடைந்து அருகக்கடவுளை வலஞ்செய்து வந்தித்துத் தொழுது, அக்கடவுளுக்கு நூறு ஊர்கள் முதலியவற்றைச் சேர்ப்பித்துத் தன்மாளிகையடைந்து சிங்காசனத்திருந்து செங்கோல்செலுத்தி அரசபுரியானாயினான்.

அங்ஙனம் அரசுபுரிகின்ற சீவகன் தன்னை வருந்திவளர்த்த கந்துக்கடனுக்கு இதற்குமுன்னில்லாத அரசுரிமையையும் சுநந்தைக்குத் தேவிபட்டத்தையுங் கொடுத்தான்; நந்தட்டனை இளவரசாக்கினான்; நபுலவிபுலர்க்குக் குறுநிலமன்னர்மகளிரை மணஞ்செய்வித்து நாடுகளையும் நல்கினான்; தன்றோழர்க்கு அரசையும் வஜ்ஜிமோதிர முதலியவற்றையும் ஈந்தான்; தன்னிமித்தம் வருந்திய பிறர்க்கு அமைச்சரைக்கொண்டு நிதியையும், நாட்டையுங் கொடுப்பித்தான்; தன்னை வருந்திவளர்த்த செவிலித்தாயர்க்கு நாடோறும் ஆயிரம்பொன் இறை தண்டுதற்குரிய ஐந்துகிராமங்களைக்கொடுத்தான்; மாமனாகிய கோவிந்தனுக்குக் கட்டியங்காரனுடைய பொருள்களையெல்லாம் உதவினான்: தனக்குப் பேருதவிபுரிந்த சுதஞ்சணனுக்குக் கோயில்சமைப்பித்து, அவன்வடிவைப் பொன்னாலியற்றி, ஓரூரையும் நிலைபெறுத்தி, அவன் சரிதத்தை ஒருநாடகமாகச்செய்து நடத்தினான். இனிப் பெறுதார் யாரென்று சிந்தித்து, இளமைப்பருவத்தே தான் விளையாடிக்கொண்டிருந்த ஓர் ஆலமரத்துக்கு மாலையணிந்து பீடஞ்சேர்த்தி, அதற்குப் புண்ணியஞ்சேரும்படி பசுக்கள்மேய்ந்து, அதனிழலில் உறங்கும்வண்ணம் ஐந்தூரை அதற்கு இறையிலியாகவிட்டான். இன்னும் இவ்வாறு செய்யவேண்டுவனவெல்லாஞ் செய்துமுடித்துத் தேவிமாரெண்மரோடுங் கூடி மகிழ்வுற்றுச் செங்கோல் செலுத்திக்கொண்டு வருநாளில், உலகஞ் செழிப்புற்றது; யாவரும் இன்புற்றனர்; எல்லாவுயிர்களும் மகிழ்வடைந்தன.

[க௩.—முத்திஇலம்பகம்.]

அப்படியிருக்கும்பொழுது, ஒருநாள் விசயை, தவப்பள்ளியினின்றுந் தனக்குத் துணையாகப்போந்த தவமகளிர்க்குக் கைம்மாறில்லையேயென்றெண்ணி அருகக்கடவுளுக்குக் கோயில்சமைப்பித்துப் பூசைசெய்து, அப்பூசையின் பயனையெல்லாம் அவர்களுக்குக் கொடுத்தனள்; முன்பு சண்பகமாலைபோல் வந்து தன்னிடரைத்தீர்த்துத் தன்னைத் தாபதப்பள்ளியிலே சேர்த்துப் பாது காத்த தெய்வத்திற்கு அதுதங்கும் புறங்காட்டிலே கோயில்சமைப்பித்தாள்; தன்னையெடுத்துப்போந்த மயிற்பொறியைத் தான் எப்பொழுதுங் காணும் படி தானுறையுமாடத்தே எழுதுவித்தாள்; சீவகன் பிறந்தவிடம் சுடுகா டாகக் கிடவாதபடி சாலையாக்கி, அவ்விடத்து ஐந்நூற்றைந்து பிள்ளைகளுக்கு நாடோறும் பாலும் அன்னமும் உண்பிக்கும்படி செய்வித்தாள்; சுநந்தைக்கு உபசாரமொழிகூறி மேம்பாடுறுவித்தாள்; தன்னைவணங்கிய காந்தருவதத் தைமுதலிய எண்மரையும் எடுத்துத்தழுவி, "உலகாளுந்திருவையாப் பெறக் கடவீர்" என்று பணித்தாள்.

இங்ஙனம் தான் செய்யவேண்டியவற்றைச் செய்துமுடித்துப் பின்னர்ச் சீவகனையழைத்து அருகேயிருத்தி அவனுக்குத் தருமோபதேசஞ்செய்து தான் துறக்கவெண்ணியதைத் தெரிவித்து உடம்பாடுபெற்றுச் சிவிகையேறிச் சுநந் தையோடும், துறக்கவிரும்பிய மற்றைமகளிரோடுஞ் சமீபத்துள்ள ஒருதவப் பள்ளியைச்சார்ந்து, ஆங்குத் தவஞ்செய்துகொண்டிருக்கும் பம்மையென்பவ ளைத்தொழுது, "அடிகளே! எம்மையெல்லாம் பிறவிக்கடலினின்றுங் கரை யேற்றுவீர்" என்று பிரார்த்தித்து, அவள்கூறிய அறமொழிகேட்டுத் தீக்ஷை பெற்று விதிப்படிதுறந்து அவ்விடத்தே தவஞ்செய்துகொண்டிருந்தாள்.

அவள் அவ்வாறிருக்க, ஒருநாள் சீவகன் அத் தவப்பள்ளியைச் சார்ந்து, விசயை, சுநந்தை இருவரையுந் தரிசித்துவந்து, தேவிமாரெண்ம ரோடும் நீர்விளையாட்டுநிகழ்த்தி, இளவேனில்முதலிய ஒவ்வொருபருவத்தி லும் அவர்களோடும் இன்பநுகர்ந்து செல்லாநிற்கையில், தேவியரெண்மரும் கருப்பமுற்றுத் தனித்தனியே ஒவ்வொரு புத்திரனைப்பெற்றனர். காந்தருவ தத்தை, குணமாலை, பதுமை, கேமசரி, கனகமாலை, விமலை, சுரமஞ்சரி, இலக்கணை யென்னுந் தேவியர்புதல்வரெண்மருக்கும் முறையே சச்சந்தன், சுதஞ்சனன், தரணி, கந்துக்கடன், விசயன், தத்தன், பரதன், கோவிந்த னென்று பெயரிடப்பட்டனர். அப்புதல்வர் வளர்ந்து, ஐந்தாவது பிரா யத்தில் வித்தியாரம்பஞ்செய்விக்கப்பெற்று, முறையே கலைகள்கற்று, படைக் கலம் பயின்று, ஊர்திகளூர்ந்து மேன்மையடைந்தார். அப்பொழுது சீவக னுக்கு நாற்பத்தைந்தாவது பிராயஞ்சென்றது.

பின்னர் ஒருநாள் மல்லிகைமாலையென்பவள்வந்து சீவகனைவணங்கி, "அரசே! சோலை நிறையப்பூத்து அழகெய்தியது; அதனைக் கண்டருள்க" என்ன, சீவகன் தேவியர்சூழ அச்சோலையையடைந்து எல்லாவளங்களையுந் தான்கண்டு தேவியர்க்குங்காட்டி ஒருபலாமரத்தின் கீழ் [illegible]டைந்து ஒருபக்

கித்திருந்தான். அப்பொழுது அவ்விடத்தே ஓராண்குரங்கு தன்னோடுபிணங்கிய தன்காதன்மந்தியை மகிழ்விக்கும்பொருட்டுப் பலாப்பழமொன்றையெடுத்துக் கீறிச் சுளைகளை அதற்குக்கொடாநிற்கையில், அச் சோலைகாப்பாளனாகிய ஒருவன்வந்து அக் கனியைக்கவர்ந்து அக்கடுவனையும் மந்தியையும் ஓட்டித் தான் உண்டு மகிழ்ந்தான். அதனை ஆங்கிருந்த சீவகன்கண்டு செல்வத்தில் மிகவும் அருவருப்புற்று, "கைப்பழமிழந்தமந்தி அரசையிழந்த கட்டியங்காரனையொத்தது; இச் சிலதன், அக் கட்டியங்காரனைத் துறந்து அரசையெய்திய என்னையொத்தனன். வலியான் கவர்ந்துநுகர்தற்குரிய இச்செல்வத்தால் அடையும்பயனென்னை" என்றெண்ணித் துறக்குஞ்சிந்தையனாய்த் தன்மாளிகையடைந்து ஸ்நானஞ்செய்து அறுசுவையடிசிலுண்டு முகவாசங்கொண்டு தேவிமார்களோடும் கோயிலைச்சார்ந்து அருகக்கடவுளைவணங்கித் துதித்து வலமாகவந்தான்.

வந்தவன் அவ்விடத்து அசோகமரத்தின்கீழே பளிக்குக்கல்மேலே சாரணரிருவர்நிற்பக்கண்டு, அவரைத் தரிசித்து வணங்கி வாழ்த்தி, அவரை நோக்கி, "அடிகளே! பிறப்பினையொழிக்கும் வழியறியாதேன் பலபிறப்புக்களிலும் செய்துகொண்ட தீவினைகெடும்படி தவஞ்செய்து ஞானத்தையடையுமாறு அருளுமின்" என்று பிரார்த்திக்க, அவருள் இரத்தினப்பிரபையென்பவர், "அரசனே! கேட்பாய்" என்று, தவத்தாற் பெறுகின்ற மக்கள்யாக்கையையும், அந்தயாக்கை நூறியாண்டும் நிலைபெற்றுநில்லாது கருப்பமுதலாக அழிகின்ற அழிவையும், நரககதி விலங்குகதி மக்கட்கதி தேவகதியென்கின்ற நாற்கதித்துன்பத்தையும், துணியப்படும் பொருளையும், அப்பொருளைத் துணியுந்துணிவையும், சீலத்தையும் தானத்தையும், அச்சீலத்தாலும் தானத்தாலும் பெறப்படும் பயன்களையும், வீட்டிலக்கணத்தையும் விளங்க விரித்துக்கூறினர். யாவற்றையும் சீவகன் விரும்பிக்கேட்டு, "சுவாமீ! அடியேனுடைய முற்பிறப்பையும், அப் பிறப்பிற்செய்த பாவத்தையும் அருளிச்செய்க" என்ன, அவர் கூறுவாராயினர் :—

"தாதகியென்பதொருநாட்டிற் பூமிமாதிலகமென்னுநகரில் அரசன் பவணமாதேவனென்பான்; அவன்மனைவி சயமதியென்பாள்; அவர்புத்திரன் அசோதரனென்பான். அவனுக்குத் தந்தைதாயர் இலக்கணமமைந்த மகளிரை மணஞ்செய்விக்க, அவ்வசோதரன் அம்மனைவிகளோடும் இன்புற்றொழுகுநாட்களிலே, ஒருநாள் அவன் அம்மனைவியரோடும் நீர்விளையாடுதற்கு ஒரு தடாகத்தை அணுகியபொழுது, அவன்மனைவியர் ஆங்குள்ள தாமரைமலரில் ஒளித்திருக்கும் அன்னக்குஞ்சுகளைக்கண்டு, "இவற்றைப் பிடிப்பித்துத் தருக" என்று அவனைவேண்ட, அசோதரன் தன்னருகேநின்ற ஏவலாளரொருவனைக்கொண்டு, அவற்றுளொன்றைப் பிடிப்பித்து அம்மாதர்களுக்குக்கொடுத்தனன். அவர்கள் அதற்குப் பாலூட்டித் தமதுமார்போடணைத்துப் பாதுகாத்துவந்தார். இதனை ஒருநாட் பவணமாதேவன் கண்டு, நடுநடுங்கி, அசோதரனால் விளைந்தமை தெரிந்து, சினந்து, அவனைவருவித்து, நேரேயிருத்திப்

பலவறம்போதித்து, "மைந்தனே! பறவைகளையும், விலங்குகளையுந் தம்மின யினின்றும் பிரித்துக் காவல்செய்து வைத்தோர், மறுமையில் தாமுந் தம் கிளையினின்றுநீங்கிப் பிறரால் காவல்செய்யப்படுவர்" என்றுகூற, அச்சாத ரன்கேட்டு மிகவுமஞ்சி, அவ்வன்னப்பார்ப்பைத் தன்பெடையொடு கூட்டினின் றும் விடுவித்து, அன்றுபிடித்த தடாகத்தே போகவிட்டுத் தன்னைவணங்கிப்பணி ந்து, "அடியேன் துறந்து தவஞ்செய்வல்" என்ன, அரசன் "மைந்தனே! உலகைக்காத்துப் பின்துறவினையடைவாய்" என்று மறுத்துக்கூற, அதனை அவன் மனங்கொள்ளானாய்த் தந்தையை உடன்படுவித்து விடைபெற்றுத் துறவிற்சென்றான். அவ்வேசாதரன் நீயே" என்றுகூறி மேற்செய்து கூறுஞ் சாரணர், "அங்ஙனந் துறவிற்சென்றநீ தவஞ்செய்து மறுமையில் ஏகம்பாத மென்னுங் கற்பத்து இந்திரனாய் அரசுபுரிந்து இங்கேவந்துதித்தாய்; அன் னப்பார்ப்பைக் கிளையினின்றும் பிரித்துச் சிறைவைத்தமையால் நீயுங்கிளை யினின்றும் பிரிந்து சிறைகொள்ளப்பட்டாய்" என்று கூறக்கேட்டு அந்நிப் பழைபடைத்துத் துறக்குந்திறத்தையுற்றச் சீவகன் அவ்வாறாகத் துணிந் தான். அப்பொழுது அச்சாரணரிருவரும் எழுந்து விசும்பாறாகத் தாமுறி த்தவிடஞ்சென்றார்.

உடனே சீவகன் தேவிமாரோடும் தன்மாளிகையடைந்து தன்கருத்தை யாவருமறியக்கூறி, நந்தட்டனையழைத்து, "நீ இவ்வுலகாள்வாய்; நான் துறப் பேன்" என்ன, அவன், "இவ்வற்ப வாழ்க்கைவேண்டேன்; நின்திருவடி யை வழிபட்டொழுகும் வாழ்வன்றோ அடியேன் வேண்டுவது" என்றான். பின்பு தன்புதல்வன் சச்சந்தனையழைத்து அவனுக்கு இராசதருமங்கள் பல வற்றையுங்கூறி மணிமுடிசூட்டி அவனை அரசாக்கி, தம்பிமார்புதல்வருக்கும், தோழர்புதல்வருக்கும் உரிய சிறப்புக்களியற்றி, தான் துறத்தல்கேட்டுப் பிரி வாற்றாது, "யாமும் நின்னோடு துறப்பேம்" என்றுகூறிய தேவிமாரெண்மரை யும் விசயையாற் சேர்த்துத் துறப்பித்து, தன்பிரிவைப்பொறாத மந்திரத்தா ரும், நகரத்தாரும், மற்றையாரும் விம்மிவிம்மிப் புலம்பித்துடிக்கவும் தான் ஒருவரையும் நோக்கானாய்த் தேவர்கள் தாங்கிச்செல்லுஞ் சிவிகையூர்ந்து சம வசரணமடைந்து ஸ்ரீவர்த்தமானஸ்வாமிகளைத் தரிசித்துச் சுதன்மரென்னுங் கணதரரால் விதிப்படியே துறந்து விபுலகிரியில் தவஞ்செய்து சுக்கிலத்யானம் பண்ணி யாவருக்குந் தருமோபதேசஞ்செய்து எல்லாவுலகத்திற்கும் உச்சியி லுள்ளதாகிய ஸித்தக்ஷேத்திரத்தையடைந்து வீடுபெற்றான்.

பின்பு அவன்மேனி அக்கினியிந்திரனாற் கருப்பூரவிளக்குப்போலே மறை ந்தபின்பு, எல்லாவுலகத்தாருங்கூடிப் பஞ்சகல்யாணத்துள் ஒன்றாகிய பரி நிர்வாணமென்னுங் கல்யாணத்தை விதிப்படி செய்தார்கள்.

தேவிமாரெண்மரும் தவஞ்செய்து மறுமையில் இந்திரராய் இன்புற் றனர். நந்தட்டனும், தோழரும் தவஞ்செய்து மறுமையிற் தேவராய்ச் சுவர்க்கம்பெற்றனர்.

சீவகன் சரித்திரச்சுருக்கம் முற்றிற்று.

*ஸ்ரீபுராணத்தில், உ௪ – ம் தீர்த்தங்கரராகிய*

## ஸ்ரீவர்த்தமானர் புராணத்துள்ள

# சீவகசரித்திரம்.

மற்றொருநாள், சிரேணிகமகாராஜன், ஸமவசரணமடைந்து, அசோகவனத்துள் அசோகவிருக்ஷமூலத்து ரூபயௌவந சுபலக்ஷணஸஹிதராகித் தியாநாரூடராகியிருந்த ஜீவந்தரமுனிகளைக் கண்டு அத்தியந்தம் (க) விஸ்மிதனாகி, ஸுதர்மகணதரரை யடைந்து, "பகவானே! (உ) ஈதிருசலக்ஷணசஹிதராகிய இந்தத்தபோதனர் யார்?" என்றுவினவ, அவரும் அருளிச்செய்வார்: "ஜம்பூத்வீப பரதக்ஷேத்திர ஹேமாங்கத (௩) விஷய ராஜமகாபுரத்து ராஜா, ஸத்தியந்தரன்; தேவி, விஜயையென்பாள். இவன் மந்திரி, காஷ்டாங்காரிகன்; புரோஹிதன், ருத்திரதத்தனென்பான். ராஜா விஜயாதேவியுடன் அனவரதம் போகாபிலாஷியாகையினால், மந்திரிபக்கலே ராஜ்யகாரியநிருவாஹத்தினை நியோகித்து, இஷ்டவிஷய காமபோகங்களை அநுபவித்துச் செல்லாநின்ற நாளகத்து ஒருநாள், விஜயை, ஓர் அசோகவிருக்ஷத்தினைப் (௪) பரசுவினால் சேதிக்க, வீழ்ந்தபின், அதன்மூலத்தே ஒரு பாலாசோகம் அஷ்டமாலாலங்கிருதமாகித் தோற்றவும் ஸ்வப்நங்கண்டு இராஜாவுக்கு ஸ்வப்நத்தை நிவேதிப்ப, இராஜாவும் சொல்லுவான்:—"எட்டுக்கல்யாணத்தை யுடையனாகி எனக்குப்பின் ஸகலபுவன ராஜ்ய யோக்கியனாயினொரு புத்திரனைப் பெறுதி" என்றனன். அதன்பின், சுவர்க்கவாஸியாயினொருதேவன் ஸ்வஜீவிதாந்தத்து அவதரித்து விஜயாதேவிகருப்பத்தை யடைந்தனன். அந்நகரத்துக் கந்தோத்கடனென்பான் ஒரு வைசியன், மனோகரோத்தியானத்து எழுந்தருளியிருந்த சீலகுப்தரென்னுந் தபோதனரை நமஸ்கரித்து, "பகவானே! எனக்கு இதற்குமுன் ஆயுஷ்யஹீனராகிய புத்திரரே ஜனித்தனர்; இனி ஆயுஷ்மானாகிய புத்திரன் உளனாகுவனோ?" என்றுவினவ, முனிவரனும் (௫) அவதிஞானத்தாற் பார்த்து, "இதன்மேல், ஆயுஷ்மான்களாயினார் பலபுத்திரரையும்பெறுவை; அதற்கு உபாயமும்; பிறந்து மிருதனாகிய புத்திரனை ஸ்மசானபூமியுள் ஸம்ஸ்கரித்தற்காகச் சென்றவிடத்து அங்கே ஒருபிள்ளையைப்பெறுவை. அவனும் ஸகலபுவநராஜாவாகித் தபப்பிரபாவத்தால் முக்திபதமடைகுவன்" என்று சீலகுப்த தபோதனர் அருளிச்செய்யக் கேட்டுப் போயினன். ஒரு

---

(க) விஸ்மிதம் - ஆச்சரியம்.

(உ) ஈதிருசலக்ஷணஸஹிதர் - இத்தன்மையதாகிய இலக்கணத்தோடுகூடியவர்.

(௩) விஷயம் - நாடு.

(௪) பரசு - கோடாலி.

(௫) அவதி ஞானம் - முற்பிறப்பையறியுமறிவு.

(௧) யக்ஷிதேவதை (௨) சரமதேகதரனொருவன் விசயாதேவிக்குப் புத்திரனாகுமென நினைத்து அவனுக்கு உபசாரஞ்செய்வேனென்று ராஜகிருகத்தில் ஒரு கருடயந்திரத்திலே ஸன்னிஹிதமாய்நின்றனள். மற்றொருநாள், (௩) பிரபாதசமயத்து, ருத்திரதத்தன், ராஜகிருகமடைந்து அலங்காரஸ்ரீயையாகிய தேவியைக் கண்டு, "தேவி! ஸ்வாமி எங்கே யெழுந்தருளியிருக்கின்றனர்" என்றுகேட்ப, அவளும், "இப்போது பள்ளிகொண்டருளுகின்றனர் ஆதலின் காணமுடியாது" என்றுசொல்லக் கேட்டு, இவ்வசனம் தூர்நிமித்தமென்று நிச்சயித்து மீண்டுபோகிக் காஷ்டாங்காரிகனையடைந்து இரகஸ்யமாகச் சொல்லுவான்: "உனக்குச் சகலபுவனராஜ்யமுண்டாகுமாதலின், அரசனை லோகாந்தரமடைவிப்பாயாக" என்றுசொல்லக் கேட்ட காஷ்டாங்காரிகன், தனதுகரங்களால் (௪) சிரவணங்களைப் புதைத்து, "முன்பு (௫) காஷ்டபாரவாகியாகிய எனக்கு ராஜ்யபாரம்பிரஸாதித்த ஸ்வாமிக்கு (௬) ஈதிருசதுஷ்கருமத்தைச் செய்க வென்று சொல்லிப் பிழைசெய்தனையே" என, புரோகிதனும், "தத்புத்திரனாலே உனக்கு மரணம் அவசியம் (௭) பாவியாகுமாதலின், உனக்கு உறுவதுசெய்வாயாக" என்றுசொல்லிப்போயினன். பின் ருத்திரதத்தனும் மூன்றுநாள், அஸாத்திய வியாதிபீடிதனாகி மரணமடைந்து நரகம்புக்கனன். அதற்பின், காஷ்டாங்காரிகன் தனதுமரணபயத்தால் ராஜாவுக்கு மரணத்தைப் பண்ணுவேனென நிச்சயித்துப் பலவித சம்மானங்களால் இரண்டாயிரம் ராஜாக்களை ஸ்வவசராக்கி அவர்களோடுங்கூட ராஜபவனத்தை வளைய, ராஜாவும் அதனைக்கேட்டுத் தேவியைக் கருடயந்திரத்தின்மேற்போகவிட்டு யுத்தஸன்னத்தனாகிப்புறப்பட்டு யுத்தம்பண்ணப் (௮) பராஜயமெய்திய காஷ்டாங்காரிகன், காளாங்காரகனென்னும் தன் புத்திரனோடுங் கூடவந்து யுத்தம்பண்ணி ராஜாவை லோகாந்தரமடைவித்து இராஜ்யத்தை அடைந்தனன். விஜயமாதேவியும் கருடயந்திரத்தின்மேற் போகி யக்ஷியின்பிரபாவத்தாற் சரீரபாதையின்றியே ஸ்மசானப்பிரதேசமடைந்து ஸர்வாங்கோபாங்கஸௌந்தரஞ்சிச் சந்திராதித்தரை அதிசயிக்கும் காந்திதீப்தியினையுடையனாகிய புத்திரனைப் பயந்தபின், யக்ஷிதேவதை, அநித்தியத்துவாதி ஸம்ஸாரஸ்வபாவவர்ணனபூர்வகமாக, "சரமதேகியாகிய நின்புத்திரன் ஸகலபுவனராஜ்யத்தாங்கித் தபப்பிரபாவத்தால் முக்திபதமடைகுவன்" என்று தேவிக்குச்சொல்லித் தத்காலயோக்கியமாகிய தேவியதுதுக்கங்களை நீக்கியிருந்தபின், கந்தோத்கடன், மிருதனாகியபுத்திரனைக் கொண்டுவந்து தத்பிரதேசத்தேவைத்துத் தத்ஸமீபத்தே பிள்ளையது ஸ்வரத்தினைக்கேட்டு, "ஜீவ" என்னும் ஆசீர்வாதஞ்சொல்

(௧) யக்ஷிதேவதை - அருகனுக்குப் பணிசெய்வதோர் தெய்வம்.
(௨) சரமதேகதரன் - முடிவான
(௩) பிரபாதசமயம் - காலை.
(௪) சிரவணம் - காது.
(௫) காஷ்டபாரவாகி - விறகுகட்டைச்சுமப்பவன்.
(௬) ஈதிருசதுஷ்கருமம் - இத்தன்மையாகிய தீத்தொழில்.
(௭) பாவி - வரற்பாலது.
(௮) பராஜயம் - தோல்வி.

லிப் பிள்ளையையெடுப்ப, தேவியும் அதனைக்கண்டு மிகவும் சந்தோஷித்த பின்னை, பிள்ளையை அப்பிரகாசமாகக் கொண்டுபோகி, ஸுநந்தையென்னுந் தன்பாரியையைக் குறுகி, "ஸஜீவனாகிய பிள்ளையைப் பரீக்ஷியாது தந்தனை" என்று (௧) கிருத்திரிமகோபத்தாற் கொடுப்ப, அவளும் ஆனந்தத்துடன் வாங்கிவளர்ப்ப, வளர்கின்றபிள்ளைக்குச் சீவகனென்னும் நாமகரணம்பண்ணியதற்பின், ஸுநந்தை நந்தாட்டியனென்னும் புத்திரனைப் பெற்றனள். விசயமாதேவியும் யக்ஷிதேவியுடன்கூடக் கருடயந்திரத்தாற்போகி ஒரு தாபஸாச்ரமத்தே வஸித்தனள். ஸத்தியந்தரமகாராஜனுக்குத் தேவிமார் பாமரதியும், அநங்கபதாகையுமென்பா ரிருவ ருளர். அவர்கட்குப் புத்திரர் மதுரனும் வகுளனு மென்பார். அந்நகரத்து விசயனென்னும் சேனாபதிக்கும் ஜயவதியென்னும்பாரியைக்கும் புத்திரன் தேவஸேனன்; சாகரசேன னென்னும் புரோகிதனுக்கும் ஸ்ரீமதிக்கும் புத்திரன் புத்திஷேணன். தனபாலசிரேஷ்டிக்கும் ஸ்ரீதேவிக்கும் புத்திரன் வரதத்தன். மதிஸாகரமந்திரிக்கும் அநுபமைக்கும் புத்திரன் மதுமுகன். (௨) ஸ்ராவகதருமஸகிதராகியமதுராதிகள் அறுவரும் ஜீவந்தரனுடன் வளர்ந்து மித்திரராகிச் செல்கின்றநாளகத்து ஒருநாள், நகரபாஹ்யோத்தியானத்து மித்திரருடன் (௩) வனக்கிரீடைபண்ணுகின்ற குமாரனைக் குறுகிப் (௪) பஸ்மகவியாதி பீடிதனாகித் தாபஸவேஷதாரியாயினான் ஒருவன், "குமாரனே! ஸமீபமாக இவ்விடத்து நகரமுண்டோ?" என்றனன். குமாரனும், முறுவல்கொண்ட முகத்தனாகி, "பாலராகிய எங்களைக் கண்டால் நகரம் (௫) ஆஸன்னமேயென்பது (௬) அநுபதேசமாகவே பிரஸித்தமாக இருப்ப, இவ்வண்ணங்கேட்கின்றீர்; மோகவியாகுலசித்தத்தினீர்போலும்" என்று குமாரன்சொன்ன (௭) பரிணத வசனங்களைக்கேட்டு, இராஜ்யார்ஹமாகிய சரீரகதசுபலக்ஷணாதிகளைக் கண்டு இவன் இராசகுமாரனெனநிச்சயித்து (௮) க்ஷுத்பீடாபரவசனாகிய தாபஸன் போசனார்த்தியாயினன். குமாரனும் அதனை (௯) ஸம்வதித்து அவனுடனேபோகி ஸ்வபவநமடைந்து போஜனஸமயத்துக் குமாரன் ஸ்வஹஸ்தத்தால் தாபஸனுக்கு ஆஹாரங்கொடுப்பத் ததாஹாரயுக்திக்ஷணத்திலே ரோகபீடையெல்லாம் போயின. அதற்பின், கந்தோத்கடஸமீபமடைந்து, "மஹாவியாதிவிநாசகாரணனாகி மஹோபகாரியாகிய குமாரனுக்கு யான் சாஸ்திராப்பியாசம் பண்ணப் பெறுவேனாகவேண்டும்" என்றுசொல்ல, கந்தோத்கடனும், "சாஸ்திரகுருவாயினாற்கு நமஸ்காராதி விநயங்கள் செய்யவேண்டுமே; நீர் அந்யலிங்கிகளாகின்றீராதலின், அது ஸம்பவிப்பதன்றுபோலும்" என்றுசொல்ல, தாபஸனும் சொல்லுவான்: "ஸிஹ்ம

---

(௧) கிருத்திரிமம்-இயற்கையல்லாதது.
(௨) ஸ்ராவகதருமம்-இல்லறநடை.
(௩) வனக்கிரீடை - பொழில்விளையாட்டு.
(௪) பஸ்மகவியாதி-பெரும்பசியை [illegible]வம் யானைத்தீயெனனும் நோய்.
(௫) ஆஸந்நம் - ஸமீபத்திலுள்ளது.
(௬) அநுபதேசம் - சொல்லாமை.
(௭) பரிணதவசனம் - பக்குவமான மொழி.
(௮) க்ஷுதபீடை - பசித்துன்பம்.
(௯) ஸம்வதித்து - ஒத்துச்சொல்லி.

மபுரமென்னும் நகரத்து ராஜா ஆர்யநந்தியென்பேன். வீரநந்திமுனிவரான் சமீபத்தே தரும சிரவணாநந்தரம் க்ருதிஷேகமாபுத்திரனுக்கு இராஜ்யபதம் கொடுத்துத் தீக்ஷாப்ராப்தனாகியபின், காலாந்தரத்துப் பஸ்மகமென்பதோரு மகாரோகம் தோன்றுதலின், தீக்ஷாப்ரச்சுதனாகித் தாபஸவேஷதாரியாகின்றேன்; யான் ஸம்மியக்திருஷ்டியாதலின், உனக்கு ஸத்தர்மவாகுமென்றேன்" என்றுசொல்லக்கேட்டு, கந்தோத்கடன் மிகவும்பிரீதனாகித் தருமவாத்ஸல்யத்தினாற் குமாரவிருத்தாந்தத்தினை ரகஸ்யமாகவறிவித்துத் தாபஸாசிரமத்தே குமாரனைச் சாஸ்திராப்பியாசம்பண்ண விட்டனன். குமாரனும் போதாதிசயத்தால் அல்பகாலத்தே ஸகலவியவகாரசாஸ்திரபாரங்கதனாயினன். அதற்பின், ஆர்யநந்திகள், ஸம்யமத்தினைப் பிராபித்துத் தபப்ரபாவத்தால் முக்திபதமடைந்தருளினர்.

குமாரனும், யௌவனாவஸ்தையினை அடைந்து செல்கின்ற காலத்துக் காளகூடனென்பான் ஒரு (க) வியாதபதி, அந்நகரத்தே நிரைகூட்டங்கொண்டுபோக, அந்நிரைக்கு அதிபதியான கோபாலன் கோபேந்திரனென்பான்; இவன் பார்யை கோபஸ்ரீயென்பாள்; "இவள்புத்திரியாகிய கோதாவரியினை இந்நிரைமீட்கவல்ல வீரபுருஷனுக்குக் கொடுத்தும்" என்று காட்டாங்கானிநகரத்திலே (உ) கோஷணைபண்ணுவிப்ப, அதனைக்கேட்டு ஜீவகஸ்வாமி மித்திரரோடுகூடப்போகி வியாத(ங)பலமடைந்து யுத்தம்பண்ணிச் சயித்து மீட்டுக்கொண்டுவந்து நகரமடைந்து யுத்தமுகத்துப் பராக்கிரமம்பண்ணிய நந்தாட்டியனுக்குக் கோதாவரியினைக் கொடுப்பித்தனன்.

இப்பால், ஜம்பூத்வீப பரதக்ஷேத்திரத்து விஜயார்த்தபர்வத உத்தரஸ்ரேணியில், ககனவல்லபநகராதிபதி கருடவேகனென்னும்வித்யாதரன், தாயாதியாயினானொருவனாற் (ச) பராஜிதனாகிப்போந்து ரத்நத்வீபத்து மனுஜோதயமென்னும்பர்வதத்து ரமணீயமென்பதொருநகரம்பண்ணுவித்திருந்தனன். இவன்பார்யை, தாரணியென்பாள்; இவர்கட்குப்புத்ரி, கந்தர்வதத்தையென்பாள். இவள், ஒருநாள் உபவாஸவிதியால்நோற்று முடிவின்கண் (ரு) ஜினபதிபூஜைபண்ணித் திவ்ய (சு) சேஷைகொடுவந்து ராஜாவுக்குக்கொடுப்ப, அவனும் அதனைவாங்கிச் (எ) சிரஸாவகித்து உபவாஸ (அ) பரிஶ்ராந்தையாகிய புத்ரியை, "(கூ) பாரணைபண்ணுவாயாக" என்றுவிடுத்தபின், "பெண்பிள்ளையை யாவர்க்குக்கொடுத்தும்" என்று மதிஸாகரனைவினவ, அவனுஞ்சொல்லுவான்: "ஒருநாள் மஹாமேருபர்வதநந்தனவனத்துப் பூர்வதிக் (க0) ஜின

(க) வியாதபதி - வேடர்தலைவன்.
(உ) கோஷணை - பறைமுழக்கம்.
(ங) பலம் - சேனை.
(ச) பராஜிதன் - ஜயிக்கப்பட்டவன்.
ஜினபதி - அருகன்.
(சு) சேஷை - தெய்வப்ரஸாதம்.
(எ) சிரஸா - தலையாலே.
(அ) பரிஶ்ராந்தை - ஶ்ரமத்தை அடைந்தவள்.
(கூ) பாரணை - உபவாஸவிரதத்தின்முடிவிற்செய்யும் உணவு.
(க0) ஜினபவனம் - அருகன்கோயில்.

ப்வனமடைந்து, (௧) ப்ரதக்ஷிணீகரண ப்ரணம ஸ்தவநாப்யர்ச்சனம்பண்ணியபின், அங்கே (௨) ஸந்நிஹிதராகிய விபுலமதிசாரணதபோதனரை நமஸ்கரித்து (௩) தர்மச்ரவணாநந்தரம், 'என்ஸ்வாமிபுத்திரியாகிய கந்தர்வதத்தை, யாவர்க்குயோக்யை' என்றுயான்வினவ, அவரும் அவதிஞானத்தாற்பார்த்து அருளிச்செய்வார்: 'ஜம்பூத்வீப பரதக்ஷேத்ர ஹேமாங்கதவிஷய ராஜமஹாநகரத்து ஸத்யந்தரமஹாராஜபுத்ரனுக்கு வீணாஸ்வயம்வரத்தால் தேவியாகும்' என்று அருளிச்செய்தனர்" என்று மந்திரிசொல்லக்கேட்டு, ராஜாவும், "பூதலத்துள்ளாருடன் (௪) அபூர்வமாகியஸம்பந்தத்தினை யாங்ஙனஞ்செய்தும்" என்றுவினவ, மந்திரிசொல்லுவான்: "ராஜமஹாபுரத்து வ்ருஷபதத்த (௫) ச்ரேஷ்டிக்கும் பத்மாவதிக்கும்புத்திரன், ஜினதத்தனென்பான்; அவனால் நமது (௬) அபிப்ரேதகார்யம் ஸித்திக்கும். அஃது எவ்வண்ணமென்னின், ராஜமஹாபுரஸமீபமாகிய (௭) ப்ரீதிவர்த்தனமென்னும் (௮) உத்யானத்து ஸாகரசேன (௯) கேவலிகளுக்குக் கேவலபூஜார்த்தமாக நின்பிதாவினோடுங் கூடச்சென்று கேவலபூஜைபண்ணியபின், (௧௦) தர்மவாத்ஸல்யத்தால் வ்ருஷபதத்தஜினதத்தர்களோடு (௧௧) பாந்தவமுண்டாயிற்று. அதன்பின், வ்ருஷபதத்தன், புத்ரனுக்கு ச்ரேஷ்டிபதங்கொடுத்துக் குணபாலமுனிஸமீபத்தே தீக்ஷித்தனன். பத்மாவதியும் ஸுவிர்தையென்னும் (௧௨) ஆர்யாங்கனைபக்கல் தீக்ஷித்தனள். ச்ரேஷ்டிபதப்ராப்தனாகிய ஜினதத்தனும் வாணிஜ்யார்த்தமாக ஜலயாத்ரையால் இங்கேவருவன்" எனக்கேட்டு, ராஜாவும் அவனை உபாயத்தாற்கொண்டுவருவதற்குப் பலாதிகனென்னும் வித்யாதரனையேவ, அவனும் ஸ்வவித்தையால் மரக்கலமுடைந்ததாகக்காட்டியபின், ஜினதத்தனும் ஒரு பலகை (௧௩) அவலம்பனமாகப்போந்து ஸமுத்ரத்துள் ஒருகரையினையடைந்து, பின் பலாதிகனுடன்சென்று விநயபூர்வகமாக ராஜஸமீபமடைந்தபின், மாயையால்உடைவித்த மரக்கலத்தைக்காட்டி, மிகவும் (௧௪) ஸம்ப்ரீதனாகிய ஜினதத்தனுக்குப் பூர்வவ்ருத்தாந்தத்தினையறிவித்து, "கந்தர்வதத்தையைக்கொடுபோகி ராஜமஹாபுரத்து வீணாஸ்வயம்வர கல்யாணவிதியாற்கொடுப்பாயாக" என்று பெண்பிள்ளையைக்கொடுப்ப, அவனும் கொண்டுபோகித் தன்னகரம

(௧) ப்ரதக்ஷிணீகரணம் - ப்ரதக்ஷிணம்செய்தல். ப்ரணமம் - வணக்கம். ஸ்தவனம்-துதித்தல். அப்யார்ச்சனம்- பூஜை.

(௨) ஸந்நிஹிதர் - ஸமீபத்திலிருப்பவர்.

(௩) தர்மச்ரவணாநந்தரம் - தர்மத்தைக்கேட்டபின்பு.

(௪) அபூர்வம் - முன்னில்லாதது.

(௫) ச்ரேஷ்டி - செட்டி.

(௬) அபிப்ரேதகாரியம் ப்பெற்றகாரியம்.

(௭) ப்ரீதிவர்த்தனம் - ப்ரீதியை விர்த்திபண்ணுவது.

(௮) உத்யானம் - தோட்டம்.

(௯) கேவலிகள் - முத்திபெற்றவர்.

(௧௦) தர்மவாத்ஸல்யம் - தர்மத்திலுள்ளப்ரீதி.

(௧௧) பாந்தவம் - பந்துத்தன்மை.

(௧௨) ஆர்யாங்கனை - தவப்பெண்.

(௧௩) அவலம்பனம் - பிடிப்பு.

(௧௪) ஸம்ப்ரீதன் - செவ்வியப்ரீதியையுடையவன்.

டைந்தபின், காஷ்டாங்காரிகனுக்கு ஸ்வயம்வரவ்ருத்தாந்தத்தினையறிவித்துச் சுபதிவஸத்து ஜினபதிபூஜாபுரஸ்ஸரமாக ஸ்வயம்வர கோஷணைபண்ணிய பின், மனோஹரோத்யானத்து ஸ்வயம்வரமண்டபத்து (க) ஸமுதிதராகிய (உ) த்ரைவர்ணிகரும் கந்தர்வதத்தைக்கு வீணையிற்றோற்றபின், ஜீவந்தர குமாரன் மித்ரரோடுங்கூட ஸ்வயம்வரமண்டபமடைந்தபின், இவனுக்கு வீணைகள்பலவுங்கொடுப்ப, அவற்றுள், நரம்புமுதலானவற்றுள் உரோமமுதலானதோஷங்களைக்காட்டி, "வித்யாதரகுலத்துப் பரம்பரையாய் வருகின்ற ஸுகோஷணையென்னும் வீணையைத்தருக" என்று வாங்கிக்கொண்டு மதுரமாகவாசித்தபின், வீணையிற்றோற்ற கந்தர்வதத்தை ஜீவந்தரகுமாரனுக்கே மாலையிட்டனள். அதனைக்கண்டு, காஷ்டாங்காரகன்முதலான ராஜகுமாரர்கள் (ந) அஸஹமானர்களாகி யுத்தஸந்நத்தராகியபின், ஜீவந்தரகுமாரன் ஜயகிரியென்னும் (ச) மதஹஸ்தியினையேறி, மித்ரரோடும் பலாதிகவித்யாதரனோடுஞ்சென்று யுத்தம்பண்ணிஜயித்தபின், கந்தர்வதத்தையைக் கல்யாணவிதியால் விவாகம்பண்ணி, இஷ்டவிஷயகாமபோகங்களை அநுபவித்துச் செல்லாநின்றகாலத்து, ஒருநாள்,

வஸந்தகாலத்து, நகரஜனங்கள் வஸந்தவிநோதார்த்தமாக ஸுரமலயமென்னும் உத்யானமடைந்து வஸந்தோத்ஸவமநுபவித்திருப்ப, அந்நகரத்து வைஶ்ரவணதத்தனென்னும் வைச்யனுக்கும் சூதமஞ்சரியென்னும்பார்யைக்கும் புத்ரி, ஸுரமஞ்சரியென்பாள்; குமாரதத்தனென்னும் வைச்யனுக்கும் விமலைக்கும்புத்ரி, குணமாலையென்பாள்; இவர்களிருவர்களும் வஸந்தக்ரீடைபண்ணித் தமது (ரு) சூர்ணங்காட்டி, "அதனில் இதுநன்று" என்று (சு) பரஸ்பரவாதமுண்டானவிடத்து, ஸுரமஞ்சரி, சந்த்ரோதயமென்னும் தனதுசூர்ணத்தை ச்யாமலதையென்னும் (எ) சேடிகையிலும், குணமாலை ஸூர்யோதயமென்னும் தனதுசூர்ணத்தை வித்யுர்லதையென்னுஞ்சேடிகையிலுங்கொடுத்து, (அ) "கந்தயுக்திநிபுணராயினோர்க்குக்காட்டிக்கொண்டுவருக" என்று விடுப்ப, அவர்களும்போகிப் பலரையுங்கேட்ப, பலரும் தர்சனஸ்பர்சனகந்தங்களாற்பார்த்துச் சந்த்ரோதயத்தை ஸ்துதிப்பாரும் ஸூர்யோதயத்தை (கூ) ப்ரசம்ஸிப்பாரும் ஸமானமென்பாரும் ஜீவககுமாரனே அறிவானென்பாருமாயினபின், ஜீவந்தரகுமாரனுக்குக்காட்ட, அவனும், சந்த்ரோதயத்தை "அழகிது" என்றுசொல்லி, அவர்களுக்கேற யுக்தியினாற்காட்டுவான்வேண்டி அவ்விரண்டினையும்வாங்கி, ஆகாசத்துவீச, அவற்றுள் சந்த்ரோதயத்தை வண்டுகள்சூழ்ந்துகொண்டன. இவ்வண்ணம் யுக்தியினால்

(க) ஸமுதிதர் - கூடியவர்.
(உ) த்ரைவர்ணிகர் - முதல் மூன்றுவர்ணத்தவர்.
(ந) அஸஹமானர்கள் - ஸஹியாதவர்கள்.
(ச) மதஹஸ்தி - மதயானை.
(ரு) சூர்ணம் - சுண்ணம்.
(சு) பாஸ்பரம் - ஒருவருக்கொருவர்.
(எ) சேடி - ஏவல்செய்பவள்.
(அ) கந்தயுக்தி - கந்தத்தின்சேர்க்கை.
(கூ) ப்ரசம்ஸித்தல் - துதித்தல்.

(௧) கந்தாதிசயத்தை அறிவித்தபின், ஸுரமஞ்சரி குணமாலைகள் பரஸ்பரம் மாத்ஸர்யத்தின்நீங்கினர். அங்கே அஞ்ஞானராகிய ஜனங்களால் (௨) பாதிதமாகி ஓடி நீருள்வீழ்ந்து கண்டகதப்ராணனாயிற்றொரு (௩) ச்வாவினைக் கண்டு, ஜீவந்தரகுமாரன் எடுப்பித்து அதன்செவியுள், பஞ்சநமஸ்கார மங்கலபதங்களைச்சொல்ல, அதுவும் ஸாவதானமாகிக்கேட்டுச் சரீரம்விட்டு அதன்மாஹாத்மியத்தால், சந்த்ரோதயமென்னும்பர்வதத்துச் சுதர்சனனென்னும் யக்ஷனாயிற்று; ஸுதர்சனன், தத்காலத்து அவதிஞானத்தாற் பூர்வபவஸம்பந்தத்தினையறிந்து இங்குவந்து ஜீவந்தரகுமாரனைக்கண்டு, "குமாரனே! நின் (௪) ப்ரபாவத்தால் (௫) ஈத்ருசவிபவத்தைப்பெற்றேன்" என்றுபூஜித்து "(௬) வ்யஸநோத்ஸவகாலங்களில் என்னைநினைக்கப்பெறவேண்டும்" என்று சொல்லிப்போயினன். அதற்பின், வன (௭) விஹாரணம்பண்ணிப்போதுகின்ற நகரஜனகோலாஹலத்தினாற் ப்ரமித்து ஓடிவருகின்ற அசனிவேகமென்னும் மதஹஸ்தி, ஸுரமஞ்சரியேறிய ரதத்தினைக்குறுகுதலும், அதனைக்கண்டு, குமாரன் கருணாபரவசனாகித் தனது பலப்ரபாவத்தினால் அதனைப் (௮) ப்ரஹரித்து (௯) நிவாரித்து மீண்டு நகரமடைந்தபின், ரூபயௌவன விஞ்ஞானாதி குணாலங்க்ருதனாகியகுமாரனை ஸுரமஞ்சரி (௧௦) அநுராகித்தமையை இங்கிதசேஷ்டைகளாலறிந்து வைச்ரவணதத்தாதி பந்துஜனங்கள் கந்தோத்கடனுக்குஅறிவிப்ப, அவனும் அதிப்ரீதனாகிச் சுபதிவஸத்து ஜீவந்தரகுமாரனுக்கு விவாஹவிதியால் ஸுரமஞ்சரியைக்கொடுத்தபின், அவளுடன் இஷ்டவிஷயகாமபோகங்களால் இனிது செல்கின்றகாலத்து, குமாரபீடிதமாகி (௧௧) க்ஷீணசக்திகமாகிய அசனிவேகமென்னும் மதஹஸ்தி கவளங்கொள்ளாதுநின்றமையறிந்து காஷ்டாங்காரிகன் மிகவும் கோபித்து, "வைச்யோசிதமாகிய வாணிஜ்ய (௧௨) வ்யாபாரமின்றி ராஜபுத்ரா (௧௩) நுரூபமாக (௧௪) ஆசரிக்கின்ற கர்விதனாகிய ச்ரேஷ்டிபுத்ரனை (௧௫) லோகாந்தரமடைவிக்க" என்று சண்டதண்டனென்னும் (௧௬) தளவரனை (௧௭) நியோகிப்ப, அவனும் (௧௮) தத்ர பலஸஹிதனாகிச்சென்றுகுறுக, அதனையறிந்தகுமாரன் புறப்பட்டு யுத்தம்பண்ணிச் சண்டதண்டபலத்தையெல்லாம் (௧௯) பங்கம்பண்ணி, "காஷ்டாங்காரிகன் ஸந்நிஹிதனாகின்றிலன்; இந்த (௨௦) க்ஷுத்ர

---

(௧) கந்த அதிசயம் - கந்தத்தின் மேன்மை.
(௨) பாதிதமாகி - துன்புறுத்தப்பெற்று.
(௩) ச்வா - நாய்.
(௪) ப்ரபாவம் - மஹிமை.
(௫) ஈத்ருசவிபவம் - இத்தன்மையதாகியசெல்வம்.
(௬) வ்யஸநம் உத்ஸவம் - துக்கம், மகிழ்ச்சி.
(௭) விஹாரணம் - ஸஞ்சாரம்.
(௮) ப்ரஹரித்து - அடித்து.
(௯) நிவாரித்து - விலக்கி.
(௧௦) அநுராகித்தமை - ஆசையுற்றமை.
(௧௧) க்ஷீணசக்திகம் - குறைந்தவன்மையையுடையது.
(௧௨) வியாபாரம் - செய்கை.
(௧௩) அநுரூபம் - உரியது.
(௧௪) ஆசரிக்கின்ற - அநுஷ்டிக்கின்ற.
(௧௫) லோகாந்தரம் - வேறுஉலகம்.
(௧௬) தளவரன் - சேனைத்தலைவன்.
(௧௭) நியோகிப்ப - ஏவ.
(௧௮) தத்ர - அங்கே.
(௧௯) பங்கம்பண்ணி - உடைத்து.
(௨௦) க்ஷுத்ரம் - அற்பம்.

ஜனங்களைவதிப்பது கர்மமன்று" என்றுகருதி, ஸுதர்சனயக்ஷனிவனைவிடுத்தனன். அவனும் தத்க்ஷணத்திலேவந்து விஜயகிரியென்னும் மதயானையின்மேலேற்றிக்கொண்டுபோகித் தனதிடமடைந்தனன். ஜீவந்தரகுமாரன், யக்ஷநிர்மிதமாகிய பூஜாதிசயங்களை அநுபவித்திருந்தனன். ஜீவந்தரகுமாரன், அபாயமின்றியிருந்ததைக் கந்தர்வதத்தை வித்யாப்ரபாவத்தாலறிந்து, குமாரனுற்ற தாந்தத்தினையறியாது பயசலிதராகிய நந்தாட்யன்முதலாகிய பந்துஜனங்களை உள்ளபடியறிவித்தலின், அவர் பயத்தினீங்கினர். குமாரனும் (௧) யக்ஷாவாஸத்தே சிலகாலங்கழித்தபின் அபூர்வதேசங்களைக்காண்பான்வேண்டிக் கமனோன்முகனாகியபின், அவனுக்குக் காமரூபிணியென்னும் (௨) முத்திரிகை முதலாயினகொடுத்துவிடுப்ப, அநேகதேசங்களைக்கடந்துபோகிச் சந்த்ராபமென்னும் நகரங்குறுகுதலும், அந்நகரத்துத் தனபதியென்னும்ராஜனுக்கும் திலோத்தமையென்னுந்தேவிக்கும் புத்ரி, பத்மோத்தமை; ராஜா, ஆதித்ய முனிகளென்பாரொருதபோதனரை நமஸ்கரித்து, "இவள் யாவர்க்குப் பார்யையாகும்" என்றுவினவ, அவரும், "ஒருகாலத்தில் இவளுக்கு விஷஸ்பர்சனமுண்டாம்; அதனைத் தீர்க்குமவனுக்குயோக்யை" என்றனர். இவளும் யௌவனாவஸ்தையினையடைந்து, வனவிஹாரம்பண்ணுகின்றபொழுது, இவளை ஒரு ஸர்ப்பங்கடிப்ப மோஹித்தனள். இதனையறிந்து, "(௩) விஷஹரணம்பண்ணினவனுக்குக் கந்யகையோடுகூட அர்த்தராஜ்யங்கொடுப்பன்" என்று அரசன் கோஷணைபண்ண, அதனைக்கேட்ட வித்யாநிபுணராகிய ஜனங்கள், விஷஹரணம்பண்ணமாட்டாது நீங்கியபின், விஷவித்யாநிபுணராயினாரைத் தேடித்திரிகின்றபரிஜனங்கள், ஜீவந்தரகுமாரனைக்குறுகி, "பூஜ்யனே! உனக்கு விஷவித்யா (௪) கௌசல்யமுண்டோ" என்றுவினவ, குமாரனும், "சிறிது உண்டுபோலும்" என, ஸந்துஷ்டராகியபரிஜனங்கள், குமாரனைக் கொண்டுபோகி ராஜஸமீபமடைவிப்ப, குமாரனும் (௫) யக்ஷோபதிஷ்ட (௬) மந்த்ரானுஸ்மரணத்தால் விஷவிநாசம்பண்ணியபின், ராஜ்யார்ஹமாகிய லக்ஷணகுணாதிசயங்களைக்கண்டு, "இவன் ராஜகுமாரன்" எனநிச்சயித்துப் பத்மோத்தமையினைக் குமாரனுக்கு விவாஹவிதியாற்கொடுத்து அர்த்தராஜ்யத்தினையும் கொடுத்தபின், அவளுடன் இஷ்டவிஷயகாமபோகங்களை அநுபவித்து, லோகபாலன்முதலாகிய முப்பத்திருவர்மைத்துனரோடுங்கூட இனிதுசெல்கின்றகாலத்து, தேசாந்தரகமனோன்முகனாய் ஒருவருமறியாதபடி பல்லவதேசத்தைக் கடந்தபின், க்ஷேமவிஷயத்து க்ஷேமபுரமென்பதொரு ஜினப்வனத்தைக்குறுகினனாக, தத்க்ஷணத்திலே ஜினபவனஸமீபமாகியதொரு சம்பகவ்ருக்ஷம் புஷ்பித்தது; உத்யான ஸகலகோகிலங்களும்

(௧) யக்ஷஆவாஸம் - யக்ஷர்களின் ருப்பிடம்.

(௨) முத்திரிகை - மோதிரம்.

(௩) விஷஹரணம் - விஷத்தைப் போக்கல்.

(௪) கௌசல்யம் - திறமை.

(௫) உபதிஷ்டம் - உபதேசிக்கப் பெற்றது.

(௬) அநுஸ்மரணம் - பின்னினைத்தல்.

கூவின; நகரஸமீபமாகிய மனோஹரமென்னும் உத்யானத்து ஸஹஸ்ரகூடமென்னும் தடாகமும் ஸலிலபரிபூர்ணமாயிற்று; (க) தத்கத ஸகலகுவலயாதி புஷ்பங்களும் மலர்ந்தன; ப்ரமரநிகரங்களும் (உ) பரிப்ரமித்தன; ஜினபவன் கோபுர கவாடங்கள் தாமேநீங்கின. அவ்வவ்வதிசயங்களைக்கண்டு விஸ்மிதனாகித் தடாகத்தையடைந்து ஸ்நானபுரஸ்ஸரமாகப் புஷ்பங்களைக் கைக்கொண்டு ஜினபதிஸமீபமடைந்து அர்ச்சனாபுரஸ்ஸரமாக ஸ்துதித்திருந்தனன். தந்நகரஶ்ரேஷ்டி ஸுபத்ரனுக்கும் நிஸ்பருதியென்னும்பார்யைக்கும் புத்ரி, க்ஷேமஸுந்தரியென்பாள்; ஸுபத்ரஶ்ரேஷ்டி, வினயந்தரரென்னும் தபோதனரையடைந்து, "க்ஷேமஸுந்தரி யாவர்க்குப்பார்யையாகும்" என்று வினவ, அவரும் அருளிச்செய்வார்: "கந்யகாயோக்யனாகியபர்த்தா ஸஹஸ்ரகூடஜினபவனத்தையடைதலும் சம்பகவிகாஸமும் (ங)கோகிலகோலாஹலமும் தடாகபூர்ணமும் தத்கத குமுதவிகாஸமும் மதுகரஸஞ்சாரமும் கோபுர (ச) கவாடவிகடனமுமாகிய அதிசயங்களுளவாகும்" என்று (ரு) ஆதேசித்தனர். ஆதலின், தத்பரீக்ஷார்த்தமாக நாள்வழிபார்த்திருக்கின்ற ஸுபத்ரன்பரிஜனங்கள் ஜீவந்தரகுமாரனையும் அவ்வவ்வாச்சர்யங்களையும் கண்டு, (சா) ஸம்ப்ரமத்துடன்சென்று ஶ்ரேஷ்டிக்கு அறிவிப்ப, அவனும்வந்து குமாரனை எதிர்கொண்டுபோற்றித் தனது (எ)பவனமடைந்து சுபதிவஸத்துக் கல்யாணவிதியாற் குமாரனுக்கு க்ஷேமஸுந்தரியைக்கொடுப்ப, அவளுடன் இனிது அனுபவித்துச் சிலகாலங்கழிந்தபின், முன்பு ஸத்யந்தரமஹாராஜனால் தனக்கு (அ) ப்ரஸாதஞ்செய்யப்பட்ட சாபபாணங்களைக் குமாரனுக்கு யோக்யமென்றுகொடுப்ப, அவற்றைக்கொண்டு அங்குநின்றும் அப்ரகாசமாகப் போந்து பலநாடுங்கடந்து ஸுஜனவிஷய ஹேமாபநகரத்துஸமீபமாகிய மனோஹரோத்யானமடைந்தனனாக, தந்நகராதிபதி த்ருடமித்ரனென்னும் ராஜாவுக்குத்தேவி, நளினையென்பாள்; இவளுக்குப்புத்ரி, ஹேமாபையென்பாள்; ராஜா தன்புத்ரியை யாவர்க்குக்கொடுத்துமென்று ஒரு (கூ) நைமித்திகனைக்கேட்ப, அவனும், "மனோஹரோத்யானத்து ஒரு (க௦) லக்ஷத்தினை நோக்கி எய்தபின், யாவனதுசரம் லக்ஷத்திற்சென்று மீண்டுவந்துவிழுவதாகும். அவன் கந்யாபதியாகும்" என்றனன். அன்றுதொடங்கி, ராஜபுத்ரர்கள், அந்தஉத்யானத்தே யந்த்ரத்திலே (கக)தனுர்வியாயாமம்பண்ணுகின்றவிடத்தே, ஜீவந்தரகுமாரனும் குறுக, அவர்களும், "குமாரனே! தனுர்வேதசிக்ஷையில் அப்யாஸமுண்டாயின், எய்வாயாக" என்ன, குமாரனும் அவர்களுடைய சாபபாணங்களைக்கண்டு, "லக்ஷணஹீனங்கள்" என்றுதூஷித்து

(க) தத்கத - அதையடைந்த.
(உ) பரிப்ரமித்தன - நாற்புறமும் ன.
(ங) கோகிலகோலாஹலம் - குயில் முழக்கம்.
(ச) கவாடவிகடனம் - த்தல்.
(ரு) ஆதேசித்தனர் - கட்டளையிட்டனர்.
(சா) ஸம்பரமம் - பரபரப்பு.
(எ) பவனம் - வீடு.
(அ) ப்ரஸாதம்செய்யப்பட்ட - கொடுக்கப்பட்ட.
(கூ) நைமித்திகன் - சோதிடன்.
(க௦) லக்ஷ்யம் - குறி.
(கக) தனுர்வியாயாமம் - விற்பயிற்சி.

மத்யமலக்ஷணத்ததாகியதொரு பாணத்தினைவாங்கிக்கொண்டு எய்ய, அது லக்ஷ்யத்திற்செல்லாது மீண்டுவந்ததுகண்டு, விஸ்மிதராகி, "குமாரனுக்குத் தனுர்வேதாப்யாஸம் இப்பெற்றியதோ" என்ன (க) மித்தியாபஹாஸம்பண்ணியபின், குமாரனும் (உ) லஜ்ஜிதனாகி, ஸ்வஹஸ்தகதபாணத்தினால் எய்த விடத்து லக்ஷ்யத்திலேவீழ்ந்தது. அதனைப்பரீக்ஷிப்பான்வேண்டி ராஜ (ங) நியுக்தராகிய பரிஜனங்கள் ஸம்ப்ரமத்துடன் கொண்டுசென்று ராஜாவுக்குக் காட்ட, அவனும் இவனுடைய ராஜயோக்யமாஹாத்ம்யத்தினைக்கண்டு ராஜ புத்ரனெனநிச்சயித்துக் கல்யாணவிதியால் ஜீவந்தரகுமாரனுக்கு க்ஷேமமாலை யைக்கொடுத்தனன். குணமித்ர பஹுமித்ர தனமித்ர ஸுமித்ரர்முதலாகிய கந்யகாப்ராதாக்களைத் தனுர்வித்யாதி ஞானகுசலராகப்பண்ணி, குமாரன் இனிதிருந்தனன். கந்தர்வதத்தை தனதுவித்யையால் அப்ரகாசமாகவந்து ஜீவந்தரகுமாரன் (ச) குசலவ்ருத்தியினையறிந்து தனதுவாரவினையறிவித்துச் செல்கின்றகாலத்து, ஒருநாள், நந்தாட்யன் கந்தர்வதத்தாஸமீபமடைந்து, "ஸ்வாமினீ! அப்ரகாசமாகப் பலநாளும்போகின்றதேசம்யாது" என்று வினவ, அவளும் (ரு) மந்தஸ்மிதஞ்செய்து, "குமாரனே! தத்ப்ரதேசமடைய வேண்டுதியாயின், ஸ்நானபவித்ரனாகி ஸ்மரதரங்கிணியென்னுஞ் சயனதல த்து நின்ப்ராதாவினை ஸ்மரித்துச் சயனம்பண்ணத் தத்ஸமீபமடையலாகும்" என்றபின், நந்தாட்யனும் அவ்வண்ணஞ்செய்ய, கந்தர்வதத்தாயோகத்தால் ஆபோகினீயென்பதொருவித்யை, சயனதலத்தோடெங்கொண்டுபோய் ஜீவந்தர குமாரஸமீபமடைவிப்ப அடைந்து ஜீவந்தரகுமாரனை நமஸ்கரிப்ப, ஜீவந்தர குமாரனும் ஆனந்தத்தோடு நந்தாட்யனை ஆலிங்கனம்பண்ணியபின், கந்தோத் கடாதி பந்துஜனவ்ருத்தாந்தத்தினையுங்கேட்டுப் பரஸ்பரம் ப்ரீதராயிருந்த னர். மற்றொன்றுசொல்லுதும்:

ஸுஜநவிஷய சோபாநகரத்துராஜா த்ருடமித்ரனுக்கு ப்ராதாவாகிய ஸுமித்ரனுக்குத்தேவி, வசுந்தரை; இவர்கட்குப்புத்ரி, ஸ்ரீசந்த்ரையென் பாள். இவள் யௌவநாவஸ்தையினையடைந்தபின், ஒருநாள், தன்மாளிகை யில்விளையாடுகின்ற (சு) கபோதமிதுனங்களைக்கண்டு (எ) ஜாதிஸ்மரணமு டையளாகி மூர்ச்சித்தனளாக, இவளைப் பரிஜனங்கள் சந்தனாதிகளால் தேற் றியபின், மாதாபிதாக்கள் அதனைக்கேட்டுப் பரவசராகித் திலகசந்த்ரிகை மகள் அநங்கஸுந்தரியென்னுஞ்சேடியை, "பெண்பிள்ளையின் மூர்ச்சாகார ணத்தையறிந்துவருவாயாக" என்றுபோகவிட, அவளும் ஜாதிஸ்மரணத்தால் மூர்ச்சைவந்தமை கந்யகைபக்கல்கேட்டுவந்துசொல்லுவாள்: "இதற்கு முன் றும்பவத்து ஹேமாங்கதவிஷய ராஜமஹாபுரத்து வைசியன், ரத்நதேஜனென்

(க) மித்தியாபஹாஸம் - பொய்யா
(உ) லஜ்ஜிதனாகி - வெட்கமடைந்து.
(ங) நியுக்தர் - ஏவப்பட்டவர்.
(ச) குசலவ்ருத்தி - க்ஷேமமாக தல்.

(ரு) மந்தஸ்மிதம் - புன்சிரிப்பு.
(சு) கபோதமிதுனம் - புறாவிரட்டை.
(எ) ஜாதிஸ்மரணம் - பழம்பிறப் புணர்ச்சி.

பான்; பார்யை, ரத்நமாலையென்பாள்; இவர்கட்குப்புத்ரி, அநுபமையென் பாள்; அந்நகரத்துக்கனகதேஜனென்னும்வைச்யனுக்கும் சந்த்ரமாலைக்கும் புத்ரன் ஸ்வர்ணதேஜன்; மைத்துனனாகிய இவனுக்கு அநுபமையைக்கொடுத்துமென்றிசைந்த மாதாபிதாக்கள் பின் அவனை அவமதித்து, மணிகாரனென்னும் வைச்யபுத்ரனாகிய குணமித்ரனுக்குக்கொடுத்துச் செல்கின்றகாலத்து, அவன் அம்போநிதியென்னும் ஓராற்றின் சுழியுள் அகப்பட்டு மரித்தபின், அநுபமையும் பர்த்ருமரணதுக்கிதையாகித் தத்ப்ரதேசத்தேவீழ்ந்துமரித்தனள்; பின்பு அவர்களிருவரும் அந்நகரத்து ஒருவைச்யன்க்ருஹத்தே பவனவேகனும் ரதிவேகையுமென்னும் கபோதமிதுனங்களாகப்பிறந்து (க) போதாதிசயத்தாற் பிறருபதேசிப்ப அக்ஷராப்யாஸமுதலாகிய ஸாமர்த்யத்தினையடைந்து ச்ராவகயோக்யாசாரங்களை ஆசரித்துப் பூர்வபவஸம்பந்தத்தினாற் பரஸ்பரம் அநுராகித்து வளர்கின்றகாலத்து, அநுபமைக்குமைத்துனனாகிய ஸ்வர்ணதேஜன்மரித்து (உ) மார்ஜாரமாகப்பிறந்தனன்; மார்ஜாரம் பூர்வவைரத்தால், அநுபமையாகிய ரதிவேகையைப்பிடிப்பப் பவனவேகனென்னும்புரு, நக (ங) துண்டங்களால் மார்ஜாரத்தைப் பாதித்துச்செல்லாநின்றகாலத்து, ஒருநாள் பர்வதபார்ச்வத்தே கபோதமிதுனங்கள் விளையாடப் போகியவிடத்து வலையிலே பவனவேகனகப்படக் கண்ட ரதிவேகை சோகத்தினோடு கூடவந்து ச்ரேஷ்டிக்குத் (ச) தத்பர்த்ருமரணத்தினை மூக்கினாலெழுதிக்காட்டி, சோகத்தால்மரித்து ஸ்ரீசந்த்ரையாகிப்பிறந்தது" என்று சேடி சொல்லக்கேட்டு ஸ்ரீசந்த்ரையுடைய பூர்வபர்த்தாவைத்தேடுவான்வேண்டி ஒருப்பட்டகன்று இவள்பூர்வபவங்களையெழுதுவித்து ரங்கதேஜனென்னும்நர்த்தகனையும் மதனலதையென்னும் நர்த்தகியினையும்அழைத்து ஸம்மானபூர்வகமாக, (ரு) ஏதத்வ்ருத்தாந்தத்தினை நாடகமாகப்பண்ணி அபிநயித்துப் பலதேசங்களிலும் ரங்கஸ்தானத்துப் (சு) பட்டகத்தைவிரித்துக் கூத்தாடுக" என்று சொல்லிவிடுத்தனர். அவர்களும்போகி அவ்வண்ணஞ்செய்கின்றகாலத்து, ஒருநாள், ராஜா, புஷ்பவனமென்பதோருத்யானத்து ஸமாதிகுப்தரென்னுந் தபோதனரைநமஸ்கரித்துத் தர்மச்ரவணாநந்தரம், "என் புத்ரி பூர்வபவ பர்த்தாவைக் காணலாவதுஎங்கே" என்றுவினவ, அவரும், "இப்பொழுது ஹேமாபநகரத்தில்" என்றருளிச்செய்யக்கேட்டு, நர்த்தகரோடுகூடப்போகி ஹேமாபநகரமடைந்து ரங்கஸ்தானத்தேகூத்தாடுவிப்ப, தத்தர்சனார்த்தமாக நகரஜனங்களோடுவந்து நந்தாட்யன்கண்டு, ஜாதிஸ்மரணத்தினால்மூர்ச்சிப்ப, ஜீவந்தரகுமாரன் சீதக்கிரியைகளால் மூர்ச்சைநீக்கி, "மூர்ச்சாகாரணம்" என்னென்றுவினவ, அவனும் பட்டகத்துஎழுதிய பூர்வபவஸம்பந்தத்தினையெல்லாஞ்சொல்லி, "பூர்வபவத்து நின்மாளிகையிலே

(க) போதாதிசயம் - ஞானமிகுதி.
(உ) மார்ஜாரம் - பூனை.
(ங) துண்டம் - மூக்கு.
(ச) தத்பர்த்ரு - தன்கணவன்.
(ரு) ஏதத்வ்ருத்தாந்தம் - இந்தவரலாறு.
(சு) பட்டகம் - படம்.

பவனவேகனென்னும் கபோதமாகி, (க) ஜீவிதாவஸானத்து நந்தாட்யனாயினேன்" என்றுசொல்லக்கேட்டு, அத்யந்தம் விஸ்மிதனாகி ஜீவந்தரகுமாரன் ஸ்ரீசந்த்ராநந்தாட்யர்களுக்குக் கல்யாணவிதியினைத் தொடங்குவானொருப்பட்டனன். மற்றொன்றுசொல்லுவதும்:

ஹரிவிக்ரமனென்பானொரு வ்யாதபதி தன்தாயாதியாயினானொருவனாற் பீடிதனாகிப்போந்து கபித்தவனஸமீபமாகியதோர் பர்வதபார்ச்வத்தே ஒரு நகரம்பண்ணியிருந்தனன். இவனுக்கும் வனகிரியென்னும்பார்யைக்கும் புத்திரன், வனராஜனென்பான்; ஹரிவிக்ரமனுக்கு (உ) ஸாமந்தர், அதிபலனும் வடவ்ருக்ஷனும் சித்ரஸேனனும் ஸைந்தவனும் அரிஞ்சயனும் சருமர்ந்தனனும் என்பார். வனராஜனுக்குஸகாயர், லோகஜங்கனும் ஸ்ரீஷேணனும் என்பாரிருவர். ஒருநாள், நகரசோபையென்னும்நகரமடைந்து ஹர்ம்யதலத்துவிளையாடாநின்ற ஸ்ரீசந்த்ரையது ரூபயௌவனஸௌந்தர்யாதிசயத்தினைக்கண்டு விஸ்மிதராகிப்போகின்றவர் ஸ்நானார்த்தமாகக் கொண்டுபோகின்ற ராஜவாகனமாகிய ப்ரதானதுரகத்தினைப் பலத்தாற்பிடித்துக்கொண்டுபோய் ஹரிவிக்ரமனுக்குக்கொடுப்ப, அவனும் அவர்களுக்கு ஸம்மானம்பண்ணியபின், வனராஜனுக்கு ஸ்ரீசந்த்ரையது ரூபஸௌந்தர்யாதிசயத்தையறிவிப்ப, அவனும் பூர்வபவ ஸ்நேஹானுபந்தத்தினால் மிகவும் (ங) அநுரக்தனாகி, "அவளை யாதானும் ஒருபாயத்தாற் கொடுவந்துதரவேண்டும்" என்று பகுவிதஸம்மானங்களாலிரப்ப, அவர்களும் நகரமடைந்து (ச) நிவாஸஸ்தானமறிந்து அதற்கு அநுரூபமாக நிலவறைபண்ணி அவளையுங்கொண்டு அங்கேவி, "இன்னார் இவ்வண்ணஞ்செய்தனர்" என்று ஓலையெழுதிவைத்துப்போனவிடத்து மற்றைநாள், பெண்பிள்ளையைக்காணாது பந்துஜனங்கள் அதிதுக்கிதராயபின், ஸிம்ஹமித்ரனும் யக்ஷமித்ரனுமென்னும் கந்யகாப்ராதாக்கள் அவ்வோலையைவாசித்து அவ்வழியேதொடர்ந்துசென்று யுத்தம்பண்ண, அவர்களும் இவர்களையும்பிடித்துக்கொண்டுபோகி வனராஜனுக்குக்கொடுத்தனர். அவளும், "என்னுடைய நகரத்து ஜினபவனம் நமஸ்கரித்தல்லது வார்த்தைபேசேன்" என்று மௌனவிரதங்கைக்கொண்டனள். வனராஜனும் இவளதபிப்ராயத்தையறிந்து, "யாதானுமோருபாயத்தால் என்கண் அநுராகிப்பாளாகப்பண்ணவேணும்" என்று தன்பரிசாரகஸ்திரீகளையேவ, அவர்களும் நானாப்ரகாரத்தாற் பேசிப்பவும், அவள் முன்போலச் சலியாதிருந்தனள்; இந்தவ்ருத்தாந்தத்தினை ஹரிவிக்ரமன்கேட்டு, "இவ்வண்ணஞ்செய்துபிழைசெய்தனை" என்று வனராஜனை மிகவுங்கோபித்து ஸ்ரீசந்த்ரையினைத் தன்புத்ரிகளோடுகூட வர்த்திப்பாளாகப் பண்ணியபின், த்ருடமித்ரன் ஸுமித்ரன்முதலாகிய ஸகலபந்துஜனங்களோடுங்கூட ஜீவந்தரகுமாரன் யுத்தஸன்னத்தனாகிச்சென்று ஹரிவிக்ரமனுடைய நகரத்தைவளைந்து யுத்தஞ்செய்யத்தொடங்கியபின், "பந்துஜனவிநாசகாரண

(க) ஜீவிதாவஸானம் - வாழ்நாள் முடிவு.
(உ) ஸாமந்தர் - சிற்றரசர்.
(ங) அநுரக்தன் - பிரீதிகொண்டவன்.
(ச) நிவாஸஸ்தானம் - இருப்பிடம்.

மாகிய யுத்தஞ்செய்யுமது காரியமன்று" என்றுகருதி ஜீவந்தரகுமாரன், ஸுதர்சனயக்ஷனை நினைந்தனன்; அவனும் தத்க்ஷணத்திலே ஸ்ரீசந்த்ரையைக்கொடுவந்துகொடுத்துப் பின்னும் யுத்தோன்முகனாகிய ஹரிவிக்ரமனையும் வனராஜனையுங்கட்டிக்கொடுவந்து குமாரஸன்னிதானத்திலிட்டனன். தத்காலத்தே (௧) சர்யாமார்க்கமெழுந்தருளினதொரு சாரணரைக்கண்டு ஜீவந்தரகுமாரன், நவபுண்யக்ரமத்தாலெதிர்கொண்டு அமுதுசெய்வித்துப் (௨) பஞ்சாச்சர்யமடைய, அதுகண்டு வனராஜன் ஜாதிஸ்ம்ருதியடைந்து, "யான்முன்பு ஸ்வர்ணதேஜனென்னும் வைச்யனாகிப்பிறந்து அதற்பின் மார்ஜாரபவத்துக் கபோதத்தினையடர்த்துப்பிடித்தபின், மற்றொருநாள் ஒருதபோதனர் ஆகமாத்தியயனம்பண்ணக்கேட்டிருந்து உபசமபாவத்தால் வைராநுபந்தத்தினீங்கி வநராஜனாயினேனாதலிற் பூர்வபவஸ்நேகத்தால் இவ்வண்ணஞ்செய்தேன்; என்பலபராக்ரமத்தாலன்று" என்றுசொல்லியபின், அவர்களைப் பந்தத்தினீக்கிப் போகவிட்டபின் சோபாநகரமடைந்து கல்யாணவிதியால் ஸ்ரீசந்த்ரையினை நந்தாட்யனுக்குக்கொடுத்தபின், ஹேமாபநகரத்தேறவருகின்றவன் ஒருபொய்கைக்கரையில் விட்டிருந்தபொழுது அப்பொய்கையுள் ஸ்நானபானாதிகளைச்செய்கின்ற பரிஜனங்களைச் சில (௩) மக்ஷிகங்கள்வந்து பாதிப்ப, "இது (௪) க்ருதகமாகவிருந்தது" என்று அறிந்து, "இதற்குக்காரணமென்ன" என்று யக்ஷனை ஸ்மரிப்ப, அவனும் அதுபொழுதேவந்து அப்பொய்கையுள் ஒருவித்யாதரன்செய்த அம்மாயத்தினை நீக்கி அவனைக் குமாரஸந்நிதானத்துவைப்ப, அவனும், "நீயார்" என்றுவினவச் சொல்லுவான்: "பூர்வபவத்து மாலாகாரனென்னும்வைச்யனுக்கும் குஸுமஸ்ரீயினுக்கும்புத்ரன்; ஜாதபடனென்பேன்; தனதத்தனென்னும்வைச்யனுக்கும் நந்தியென்னும்பார்யைக்கும்புத்ரன் சந்த்ராபனென்னும்மித்ரனோடுங்கூட நின்கண்ணே ஸத்தர்மங்கேட்டு மதுமாம்ஸநிவ்ருத்திவ்ருதம் கைக்கொண்டுமுடித்து வித்யாதரனாயினேன். ஒருநாள், ஸித்தகூடத்துஸன்னிஹிதராகியசாரணரை நமஸ்கரித்துப் பூர்வபவஸம்பந்தத்தினைக்கேட்டு (௫) பவத் தர்சனார்த்தமாகவந்தேன், நின்பூர்வ பவஸம்பந்தமாவது: தாதகீஷண்ட பூர்வமந்தர பூர்வவிதேக புஷ்கலாவதீவிஷய புண்டரீகிணீநகராதிபதி, ஜயந்தரன்; தேவி, ஜயதேவி; இவர்கட்குப் புத்ரன், ஜயத்ருடன். இவன் ஒருநாள், மனோகரோத்யானமடைந்து வனவிஹாரம்பண்ணி ஒருபொய்கையுள்விளையாடாநின்றதொரு அன்னக்குஞ்சைக்கண்டு ஆதரித்து, ஒரு (௬) சேடகனைவிடுத்துப் பிடிப்பித்துக்கொண்டுபோந்து வளராநிற்ப இதன்மாதாபிதாவாகிய அன்னங்கள் இதன்பின்றொடர்ந்துசென்று மாளிகையிலே அநவரதமும் சோகஸ்வரத்தால் அரற்று

(௧) சர்யை - பிக்ஷைகோடல்.

(௨) பஞ்சாச்சரியங்களாவன - தேவர்கள் மலர்மழைபொழிதல், பொன்மழைபொழிதல், தேவதுந்துபிமுழக்கல், தேவஸ்துதி, தென்றல் நறுமணம் வீசல்.

(௩) மக்ஷிகம் - ஈ.

(௪) க்ருதகம் - செயற்கை.

(௫) பவ - உன்னுடைய.

(௬) சேடகன் - ஏவல்செய்பவன்.

கின்றவிலற்றுள், பிதாவாகிய அன்னத்தைச் சேடகன் எய்துவீழ்த்தினன்; ஜய தேவிகண்டு, "இஃது என்" என்றுவினவ, சேடகனும் உள்ளபடிசொல்லி யபின், குமாரனைநோக்கி, "இந்தப்பாபக்ரியையைசெய்துபிழைசெய்தனை; இனி இதனைத்தாயோடேகூடவிடுவாயாக" என்றுசொல்ல, அவனும், "அங்ஙனமாகிய என்னால் இப்பாபக்ரியையைசெய்யப்பட்டது" என்று ஆத்மநிந்தையோடுங் கூடிப் பிரித்தபதினாறுநாளிற்கூட்டியபின், ஸம்ஸாரவிரக்தபப்ரபாவத்தால் ஸஹஸ்ராரகல்பத்துத்தேவனாகி அஷ்டாதசஸாகரோபமகாலம் திவ்யஸுக மனுபவித்துப்போந்து ஜீவந்தரகுமாரனாயினை. முன்பு சேடகனாலெய்யப் பட்ட அன்னம் நின்சத்ருவாகிய காஷ்டாங்காரிகனாயிற்று. முன்பு அன்னக் குஞ்சைக் கிளையிற்பிரித்தனையாதலிற் பதினாறுஸம்வத்ஸரம் நீயும் நின்கிளையிற் பிரிந்தனை" என்று இவ்வண்ணம் வித்யாதரன்சொல்லக்கேட்டு, அவனுக்கு ப்ரியவசனஞ்சொல்லிவிட்டு ஹேமாபநகரமடைந்து இஷ்டவிஷயங்களையனு பவித்துச்செல்கின்றகாலத்து, மற்றொன்றுசொல்லுதும்:

"ராஜபுரத்துநின்றும் நந்தாட்யன்போகி ஜீவந்தரகுமாரனையடைந்த பின், வருளமதுராதிகள் கந்தர்வதத்தையைக்குறுகி, விநயோபசாரஸஹித மாக, "ஸ்வாமியும்நந்தாட்யனும் எந்தத்தேசத்தே வர்த்திக்கின்றனர்" என்று வினவ, அவளும் ஸுஜனவிஷயஹேமாபநகரத்துள்ளார" என்றுசொல்லக் கேட்டு மிகவும்ப்ரீதராகி ஸ்வபந்துஜனங்களுக்கு அறிவித்து, ஹேமாபந நகரத்து ஏறப்போகின்றவர்கள் தண்டகாரண்யத்துத்தாபஸாச்ரமத்துவிட்டனர்; அவ்விடத்து (க) யத்ருச்சையாய் விஜயமஹாதேவி அவர்களைக்கண்டு, "நீங் கள் எங்குள்ளீர்; எங்குப்போகின்றீர்" என்றுவினவ, (உ) யதாவ்ருத்தாந்தமறி வித்தபின், புத்ரவிரஹ துக்கபீடிதையாகியதேவி சோகபாஷ்பம்வீழ்த்த, "அப்பிள்ளையை இங்கேயும்கொண்டுவருவீராக" என்றுசொல்லிவிடுத்தபின், அவர்களும், "தேவியதுசோகாவஸ்தையினாலும் ரூப ஸாத்ருச்யத்தாலும் ஸ்வா மிக்குமாதாவேபோலும்" என்று ஸந்தேஹமெய்திப்போய் ஹேமாபநகரமடை ந்து சௌர்யப்ரகாசபுரஸ்ஸரமாக ஸ்வாமியைக்காண்பான்வேண்டி, ஒரு வ்யாதபதியோடுங்கூடி (ங) ஸார்த்தத்தினைச் சூறைகொண்டனர். ஸார்த்தத் துள்ளவர்கள் சிரோகதஹஸ்தராகி ஆக்ரோசபூர்வகம் ஜீவந்தரகுமாரனுக்கு அறிவிப்ப, அவனும்வ்யாதபலத்தோடும் யுத்தம்பண்ணுகின்றவிடத்து வருளா திகளும் தமதுவீர்யப்ரகாசபூர்வகமாக ஸ்வநாமாக்ஷரஸஹிதமாம்பசரங்களை விட, அவற்றைக்கண்டு பந்துஜனங்களாவதறிந்து, அவர்களுடன்கூடிக் கா் தோத்கடாதி பந்துஜனவ்ருத்தாந்த (ச) நிவேதநாநந்தரம் தண்டகாரண்ய வ்ருத்தாந்தத்தினையறிவித்தபின், அப்போதே ராஜபுரகமனேச்சையனாகி த்ரு டமித்ராதிபந்துஜனங்களுக்கறிவித்து, சாதுரங்கபல (ரு) விபூதியோடுங்கூ

(க) யத்ருச்சை - தற்செயல்.
(உ) யதாவ்ருத்தாந்தம் - உள்ளவாறு.
(ங) ஸார்த்தம் - பொருளோடுகூடிய கூட்டம்.
(ச) நிவேதநாநந்தரம் - தெரிவித்தபின்.
(ரு) விபூதி - செல்வம்.

டப்போகித் தண்டகாரண்யத்துத் தன்வரவுபார்த்திருந்த விஜயமஹாதேவியை நமஸ்கரித்திருப்ப, தத்க்ஷணத்தே ஸுதர்சனயக்ஷன் சந்நிதனாகித் திவ்யாபரண வஸ்த்ரகந்த மால்யபோஜனாதிகளாற்பூஜித்து மதுரவசனங்களாற் குமாரமாதாக்களுடைய சோகதுக்கங்களைக் கெடுத்துப்போயினபின், குமாரனது புண்யமஹிமையினைக்கண்டு மிகவும் (க) பிரஸன்னையாகி ரஹஸ்யமாகப் புத்திரனைநோக்கி, "ஸ்வாமியை லோகாந்தரமடைவித்து நம்குலராஜதானியாகிய ராஜபுரத்தே ராஜ்யபதமெய்தி வர்த்திக்கின்ற காஷ்டாங்காரிகன் நமக்குச் சத்துருவாயினன். தேஜஸ்வியாகிய உன்னால் உபேக்ஷிக்கப்படுவானல்லன்" என்றுசொல்ல, "அவ்வண்ணஞ்செய்கின்றேன்" என்றுசொல்லி, காலானுரூபமாக (உ) அபிப்ரேதகார்யமுடிந்தபின் நந்தாட்யனோடே எழுந்தருளுமளவுமிவ்வனப்பிரதேசத்தே இருந்தருளுவீராக" என்றுசொல்லி, மஹாதேவிக்கு ரக்ஷார்த்தமாகச் சிலபரிஜனங்களையுமிருத்திப்போகி முன்பேபரிஜனங்களையடைவித்து அப்ரகாசமாக ராஜமாபுரமடைந்து யக்ஷனாற்கொடுக்கப்பட்ட காமமுத்ரிகாப்ரபாவத்தினால் ஒரு வைச்யவேஷங்கொண்டுபோகி (ங) ஆபணப்ரதேசத்திருப்ப, அந்நகரச்ரேஷ்டி ஸாகரதத்தன் பார்யை, அமலையென்பாள்; புத்திரி விமலையென்பாள்; "இவளை யாவர்க்குக்கொடுத்தும்" என்று நைமித்திகனைவினவ, "கன்யகாயோக்யபர்த்தா ஸன்னிஹிதனாகியபொழுது ஸ்வர்ணரஜதாதி ஸகலதனங்களும் அதிகலாபத்தவாகும்" என்று ஆதேசமுண்டாதலின், ஜீவந்தரகுமாரன் ஸன்னிஹிதனாகியபொழுதே அவ்வண்ணமாகியபின் ஆனந்தத்துடன்கூடி ஜீவந்தரகுமாரனுக்கு விமலையை விவாஹவிதியாற்கொடுக்க அனுபவித்துச் சிலகாலங்கழித்தபின்பு (ச) பரிவ்ராஜகவேஷங்கொண்டுபோகிக் காஷ்டாங்காரிகஸமீபமடைந்து, "அதிதியாகியவெனக்குப் போஜனதானம்பண்ணவேண்டும்" என்ன, அவனும் உபசாரஸஹிதமாகப்போசனம்பண்ணுவித்தபின், அதுவே காஷ்டாங்காரிகவினாசநிமித்தமாகக்கொண்டு புறப்பட்டு ஒருவ்ருத்தப்ராஹ்மணவேஷங்கொண்டு போகி ராஜபுத்ராதிவிசிஷ்டஜனங்களிருந்தஸபையையடைந்து, "த்ருஷ்டபலமாகிய வசீகரண சூர்ணாஞ்சனாதி ஔஷதவித்தைகளுள; வேண்டுவீர்களாயின், உபதேசங்கொள்வீராமின்" என்ன, அவர்களும், "என்னே, இந்தவார்த்திகயானுரூபமாகின்றதில்லை, இவன்வசனம்" என்றுசொல்லி, அபஹஸித்து, "இந்நகரத்தே குணமாலை யென்பாள் ஒருவைச்யபுத்ரி, சூர்ணத்தினை ஜீவந்தரகுமாரன் ஸ்துதியாமையாற் புருஷத்வேஷியாகி வர்த்திக்கின்றனள்; அவளை வசீகரணம்பண்ணவல்லீராயிற் பின்பு யாங்களும் அப்யஸித்தும்" என்றுசொல்லியபின், மாயாவ்ருத்தனும், "அவ்வண்ணம் செய்குவன்" என்று ப்ரதிஜ்ஞைபண்ணி, குணமாலைபவனமடைந்து, "அதிதியாயினேனொரு

(க) பிரஸன்னையாகி-திர்ப்தியடைந்தவளாகி.

(உ) அபிப்ரேதகாரியம்-இச்சிக்கப்பெற்றகாரியம்.

(ங) ஆபணம் - கடைத்தெரு.

(ச) ப்ரிவ்ராஜகவேஷம் - ஸந்யாஸ

வன்வந்துநின்றனன்" என்று சேடிமுகத்தாலறிவித்து, குணமாலையின் அனுமதியாலவடைவிக்கஅடைந்து (க) பத்ராஸனத்திருப்ப, "எங்குநின்றும்வருகின்றீர்; எங்குப்போகின்றீர்" என்று குணமாலையினவ, (உ) ஸ்கலிதவசனத்தனுகி, "பின்னின்றும்வருகின்றேன்; முன்னேக்கிப் போகின்றேன்" என்று பரிஹாஸவசனங்களைப்பரிஜனங்கள் அபஹஸிக்கப்பின், "வார்த்திக்யம்ஸ்த்ரீவிகாரம்பண்ணுமென்பது தகுவதன்றே" என்று அவர்களைநிவாரித்து, "முன்னேக்கிப்போகின்றதேசம்யாது" என்றுவினவ, "ஜராவிநாசகாரணமாகிய கந்யாதீர்த்தத்தேறப்போகின்றேன்" என்ன, அவளும், "என்னே! இவனது சரீரம் வார்த்திக்யாநுரூபமாயினும் வசனம் யௌவனனுலங்க்ருதமாயினவாறு" எனநினைந்து உபசாரஸஹிதமாக அவனுக்குப் போஜனம்பண்ணுவித்தனள். அதற்பின், "(ங) அபிலஷிததேசத்தேறப்போவீராயின்" என்ன, அவனும், "அவ்வண்ணஞ்செய்வேன்" என்று ஸ்கலிதவசனத்தனுகி அவளாஜ்ஞையாற்சயனஸ்தலத்தையடைய, குணமாலை,பரிசாரகஜனங்கள் அதனையறிந்து அவயவங்களைப்பற்றியீர்க்கின்றவர்களைநிவாரித்து, "சயனஸ்தலத்தேவஸிப்பிக்க" என்று பிரேரித்தபின், இரவுவஸித்து (ச) ப்ராபாதகாலத்து அதிமதுரமாகப்பாடிய இவனது ஸ்வரத்தைக்கேட்டு, "காந்தர்வதத்தாவிவாஹகாலத்து ஜீவககுமாரன்பாட்டே போன்றிருந்தது" என்று விஸ்மிதையாகி, குணமாலை அவனையடைந்து, "என்னென்னவித்தைகள் அப்யஸித்தீர்" என்றுகேட்ப, தர்மார்த்தகாமசாஸ்திரபாரங்கதனுகின்றேன்; தர்மார்த்தபலங்களைப் பிரதிபாதிப்பது காமசாஸ்த்ரம்; அதன்பேதத்தனவாகிய ஸகலகலாவித்தைகளும் அறிவேன்" என்ன, அவளும் ஆதரித்து, "கந்தயுக்திமுதலாகியவித்தைகளை எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றுபிரார்த்தித்து அப்யஸியாநின்றவிடத்து, மற்றொருநாள், வித்யாதிதேவதாபூஜா வ்யாஜத்தினுல் ஒருத்யானமடைந்து ஏகாந்தமாகத் தனது ஸ்வபாவரூபத்தைக்காட்டிப் பின்னரும் (ரு) விச்வாஸார்த்தமாகச் சூர்ணவிவாதவ்ருத்தாந்தத்தினையுஞ்சொல்லிக் கரதலஸ்பர்சனஸம்பாஷணமும்பண்ணியபின், அவளும் லஜ்ஜாஸ்நேகபரவசையாகிநிற்ப, பின்னும் தனதுவ்ருத்தவேஷங்கொண்டு வித்யாதேவதாபூஜைபண்ணியபின், இந்தவ்ருத்தாந்தத்தினைப் பந்துஜனங்களறிந்துமிகவும்ப்ரீதராகி, ஜீவககுமாரனுக்குக் குணமாலையை விவாகவிதியாற்கொடுத்தபின், அவளுடன் இஷ்டவிஷயகாமபோகங்களையநுபவித்துச் சிலநாள்கழிந்தபின், ஒருநாள், ஸமஸ்த பந்துஜனங்களோடும் சாதுரங்க (௬) பலஸஹிதனுகி விஜயகிரியென்னும் மதஹஸ்தியின்மேலேறி ராஜ (௭) பரிச்சதம் புடைசூழ்தரக் கந்தோத்கடபவனத்தினையடைந்தனன். அதனைக் காஷ்டாங்காரிகன்கேட்டு மிகவுங்கோபித்தவிடத்து ஆப்தராகிய மந்திரிகள்,

(க) பத்ராஸனம் - மங்களமான ஆஸனம்.

(உ) ஸ்கலிதம் - தழுவல்.

(ங) அபிலஷிததேசம் - இச்சிக்கப்பெற்றநாடு.

(ச) ப்ராபாதகாலம் - விடியற்காலம்.

(ரு) விச்வாஸார்த்தம் - நம்பிக்கையின்பொருட்டு.

(௬) பலம் - சேனை.

(௭) பரிச்சதம் - பரிவாரம்.

"ஜீவந்தரகுமாரன், மகானுபாவனும் ஸுதர்சனயக்ஷமித்ரனும் வித்யாதரபல ஸஹிதனும் மதுராவகுளாதிஸஹாயனும் ஆதலின், அவன் அபேத்யபராக்ரமன்; அவனுடன் விரோதிக்குமது விநாசஹேதுவாகும்" என்று சொல்ல அடங்கினன்; மற்றொன்றுசொல்லுதும்:

விதேஹவிஷயத்து ராஜா, கோபேந்த்ரன்; தேவி, ப்ருத்விஸுந்தரி; புத்ரி, ரத்னவதி; "இவள், சந்த்ரகவ்யதனமென்னும் யந்த்ரம் வீழ்தரச் சரந்தூரந்திட்டவனுக்கு யோக்யை" என்று நியதியுண்டாதலின், ததர்த்தமாகக் கோபேந்த்ரமஹாராஜன், ராஜமகாபுரமடைந்து, ஸ்வயம்வரகோஷணபூர்வகமாக ராஜாக்களையழைப்பித்தபின், அவர்களும் (க) ஸமுதிதராகிவந்து யந்த்ரத்திலெய்து, அஸமர்த்தராகியபின், ஜீவந்தரகுமாரன் ஸித்தநமஸ்காராநந்தரம் ஆசார்யராகிய ஆர்யநந்திகளை நமஸ்கரித்து யந்த்ரத்தை ஸ்கலிதமாகவெய்தனன்; அதனைக்கண்டு ராஜவித்யாதரஜனங்கள் ஸாதுகார்முகராகி ஸ்துதிப்ப, ரத்னவதி, ஜீவந்தரகுமாரன்மிசை மாலையிட்டனள். காஷ்டாங்காரிகன்முதலியராஜாக்கள், கன்யாபஹரணம்பண்ணுவான்வேண்டி யுத்தந்தொடங்குதலும், ஜீவந்தரகுமாரன், ஸத்யந்தரமகாராஜ ஸாமந்தவர்க்கமாகியவர்களுக்குத் தூதமுகத்தால் தனதுவ்ருத்தாந்தத்தினையும் க்ருதக்னனாகிய காஷ்டாங்காரிகனது ஸ்வாமித்ரோஹத்தினையும் அறிவித்து ஸாமபேததானதண்டலக்ஷணத்தவாகிய சதுர்விதோபாயத்தினால் அவர்களைவசீகரித்து யுத்தோன்முகனாகி விஜயகிரியென்னும் மதஹஸ்தியேறி யுத்தாங்கணங்குறுகுதலும் காஷ்டாங்காரிகன் அசனிவேகமென்னும் மதஹஸ்தியைமேற்கொண்டுகுறுகி, யுத்தம்பண்ண, அவனை ஜீவந்தரகுமாரன் லோகாந்தரமடைவித்தனன். ததனந்தரம், ஸகலராஜபலமும் ஜீவந்தரஸ்வாமியைச் சரணமாக அடைந்தபின், ராஜ்யகோஷணபூர்வகம் விஜயாதேவ்யாதி ஸகலபந்து ஸஹிதனாகி ஜினபதிபூஜாதிமங்கலக்ரியாபூர்வகமாக ஸுதர்சனயக்ஷ வித்யாதரப்ரப்ருதிகள் ராஜ்யாபிஷேகம்பண்ணியபின் ரத்னவதி கல்யாணாநந்தரம் காந்தர்வதத்தைக்கு மஹாதேவீபட்டங்கொடுத்து, துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனப்ரகாரத்தினால், ராஜ்யபரிபாலனம்பண்ணி இஷ்டவிஷயகாமபோகங்களையனுபவித்துச் செல்கின்றகாலத்து, மற்றொருநாள், ஜீவந்தரமஹாராஜன், ஸுரமலயோத்யானத்து வரதர்மதபோதனர் பார்ச்வத்தே தர்மச்ரவணாநந்தரம் நந்தாட்யாதி பந்துஜனங்களோடுகூட ஸம்யக்தர்சன தானசீலோபவாஸ ஜினபூஜாதி வ்ருதங்களோடுகூடிச் செல்லாநிற்ப, ஒருநாள், அசோகவனமென்னும் உத்யானத்துப் பரஸ்பரயுத்தம் பண்ணுகின்ற வானரஸமூகத்தைக்கண்டு போக(உ)நிர்விண்ணனாகித் தத்ரஸன்னிஹிதராகிய சாரணதபோதனர்பார்ச்வத்தே தனதுபூர்வபவஸம்பந்தத்தினைக்கேட்டு, ப்ரதிதிவஸம் ஜிநபதிபூஜாபராயணனாகின்றவன், ஸுரமலயோத்யானத்தே ஸ்ரீவர்த்தமான

(க) ஸமுதிதராகி - மகிழ்ச்சியையுடையவர்களாகி.

(உ) நிர்விண்ணன் - ஒன்றும்தோற்றாதவன்.

பட்டாரகர் ஸ்மவஸரணம் ஸந்நிஹிதமானமைகேட்டு, விபுலகிரியைப்போய், ஸமவஸரணமடைந்து ஜிநபதிபூஜாநந்தரம் கந்தர்வதத்தாபுத்ரனாகிய வஸுந்தரபுத்ரனுக்கு ராஜ்யபதங்கொடுத்து ஸத்யந்தரமஹாதேவியோடுங்கூடக் காந்தர்வதத்தாதிதேவிகளும் அவர்கள்மாதாக்களும் சந்தனார்யையாஸமீபத்தே தீக்ஷித்தபின், ஜீவந்தரமஹாராஜனும் நந்தாட்ய மதுமாதிஸஹாய மாதுலாதி மஹீபதிகளோடுகூட ஸர்வஸங்கபரித்யாகரூபத்தாகிய ஜிநதீக்ஷையைப் ப்ராபித்து ஜீவந்தரமுனிகளும் தபப்ரபாவத்தால் சுருதகேவலீபதப்ராப்தராகி விஹரித்து ஸ்ரீவர்த்தமானபட்டாரகர் பரிநிர்வாணானந்தரம் விபுலகிரியிலே அகாதிகர்மக்ஷயம்செய்து முக்திபதமடைகுவர்" என்று ஸுதர்மகணதரர் அருளிச்செய்யக்கேட்டு ஸ்ரேணிகமஹாராஜன், அதிஸந்துஷ்டனாய் நமஸ்கரித்துப்போகித் தனதுநகரமடைந்தனன்.

## சீவகசரித்திர முற்றிற்று.

# சீவகசிந்தாமணி ஆராய்ச்சிவிளக்கம்.

| சீவக. செய்யுளெண். | மூலம் அல்லது கருத்து. | நூற்பெயர்களின் முதலியன. | நூல்களின் பகுதிகள். | செய்யுள் அல்லது அடி-எண். | மூலம் அல்லது கருத்து. |
|---|---|---|---|---|---|
| 2 | வெம்புஞ் சுடரிற் சுடருந்திரு மூர்த்தி (அருகன்) [ர்மணி) | சிலப் | கக | உ | செங்கதிர் ஞாயிற்றுத் திகழொளி சிறந்து |
| 4 | கற்பாலுமிழ்ந்தமணி (சீவக, கூ-கல்லா | கதை | நருமதைகட | கூ | கல்லுட் பிறந்த கழுவாக் கதிர்மணி |
| ,, | ,, | பிரமோ | வஞ்சுனை | அஎ | கல்லார் மணிப்பூ ணுமையாள் |
| 6 | மீனே றுயர்த்த கொடிவேந்தனை வென்ற பொற்பின்.........சாமி | சீவக | காமக | ௬எஉ | சுறவுயர்த்த ......... காளை யன்ன கா [ளைநின் |
| ,, | சீவகசாமி, (சீவக. உ०உகூ - சாமி) | ,, | முத்தி | கக | சீவகசாமி |
| ,, | தேனூற (௩௫ - தேனூறு தீஞ்சொற்) | கல் | 'தன்னுழை' | ,, | தேனுறை தமிழும் (தேன் - இனிமை) |
| 7 | ஓடாததானை | களா | சுயம் | கஅ | ஓடாததானைகளன் |
| ,, | ,, | பாரத | கரு-ம்போர் | அகூ | ஓட்டமிறுனையான் |
| 10 | தோளூற்றொர் தெய்வந் துணையாய்த் துயர் தீர்த்த வாறும் | திருக் | நட்பு | அ | உடுக்கை யிழந்தவன் கைபோல........ நட்பு |
| 11 | கலைமாக்கட லீந்தி யாங்கே ......... கிளைவள்ளல் விடுத்த வாறும் | சீவக | இலக் | கஎ | சிலையிடம் பிடித்த ஞான்றே தெவ்வரைச் செருத்த நம்பி |
| 14 | வென்றிக் களிற்றை.........வென்ற | திருவால | ௬० | ௩ | வென்றிப் புரம் வென்றேன் |

| சீவக. செய்யுளெண். | மூலம் அல்லது கருத்து. | நூற்பெயர்கள்முதலியன. | நூல்களின் பகுதிகள். | செய்யுள் அல்லது அடி எண். | மூலம் அல்லது கருத்து. |
|---|---|---|---|---|---|
| 16 | சிக்க(= அகப்பட) | சீவக | விமலை | உ | பொதிந்து சிக்க |
| ,, | வினைக்கென்று........பணித்தவாறும் | ,, | குண | கoக | இடர்வரி னினைக்க வென்று |
| 18 | அத்தம்மனைய களிறு (களஙு,உoஉஉ) | ,, | மண்மக | ககo | அத்தமா மணிவரை யனைய தோன்றல |
| 19 | கற்பா டழித்த கனமாமணித் தூண் செய் தோளான் | கூர்ம | இராவண வதை | கக | கற்பா டழித்த புயத்தரக்கன் |
| 23 | மதியங் கெடுத்த வயமீனெனத் தம்பி மாழாந்து (சீவக. கஉகஞ) | சீவக | கனக | கஙகூ | வெண்மதி யிழந்த மீன்போல் விடலைக் குத் தம்பி மாழாந்து |
| 26 | கண்மணிப் பாவை யன்ன......பெண் | பாரத | இராச | கஙு | கண்மிசைமா மணிநிகரென் கான்முளை |
| 27 | அறிவன் னடிக்கீழ்.........துறந்த | சீவக | கோவி | க | வீரன் ருணிழல் விளங்க நோற்றபின் |
| 28 | வீணைக் கிழவன் (சீவக, சகக) | ,, | இலக் | உஉக | வீணைவேந்து=சீவகன் |
| ,, | விருந்தார்கதி (சீவக, ஙஅக) | ,, | காமக | ஙசஎ | நுகர்ச்சியி னுலகம் |
| 29 | ஈனோர்க்குரைப்பாம் | சிலப் | பதி | ௰ஙு | ஈனோர் வடிவிற் காண்டலில் |
| ,, | ,, | மணி | உஅ | கஙஉ | ஈனோர்க் கெல்லா மிடர்கெட |
| ,, | ,, | குளா | மந்திர | எஅ | ஈனோ ருட்கு மாதன கண்டன் |
| 30 | பாரதச் சென்ற கேள்வி | கந்த | பாயிர | கூஉ | பாரது கேள்வு |
| 31 | தெங்கின் பழம்வீழ [ஒருடைத்தீ | சீவக | காமக | ஙகூ | தெங்கினேனுண் பழம்பரீஇ |
| ,, | கமுகி னெற்றிப், பூமாண்ட தீந்தேன் | ,, | பதுமை | ஙஙு | கமுகி னெற்றிப் பசிபழ முதிர வீண்டு |
| ,, | தெங்கின் பழம்வீழ.........வாழைப் பழங்கள் சிந்தும் | நைடத | சுயம் | கஞகூ | தாழைநறும் படைக்காய் வீழ்ந்து...... அரம்பைப சாய்க்கும் வளைபோல |
| 32 | ஆழ்வி னுண்களிற் றீட்டம்போல் | சீவக | முத்தி | சசஉ | கோமா னடிசாரக் குஞ்சரக்கச் செல் |
| 33 | வெள்ளிவெண், கோளிணைத்தனபோ ற்கோ ழுந் தாரைகள் | கம்ப | ஆற்று | ச | வான், வெள்ளி வீழ்இடை வீழ்த்தெனத் தாரைகள் |
| 34 | முழவி னின்றதிர்.....அருவித்திரள் | பதிற் | | ௬o | பணைக்குரலருவி |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ,, | அருவித்திரள்....துகிற்கொடி போன்ற | ,, | | ௨௭ | வரைமிசை யிழிதரு மருவியின் மாட்த்து.........கொடிநுடங்கு தெரு |
| 35 | முத்தாரமும் போன்றவை | கிறபா | | ௨ - ௫ | ஆரம் போல......சேய்வரற் கான்யாறு |
| 36 | வள்ளற் கைத்தல மாந்தரின்...உய்த்து | கம்ப | ,, | ௭ | வள்ளி யோரின் வழங்கின மேகமே |
| 38 | காடு கையரிக் கொண்டு கவர்ந்து | நைடத | நாட்டு | ௭ | சங்கொடு கையரிக் கொண்டு |
| 39 | தடங்கொள்வெந் (நகில்) | பெரிய | திருக்குறிப்பு | ௨௨ | பிள்ளைதைவர.........எறி |
| 40 | பழங்கொடெங் கிலையெனப் பரந்து பாய்புனல், வழங்க | மேரு | வைசயந்த | ௧௧ | ஆறு, பணிவிலாப் பழங்கொ டெங்கி னிலையெனப் பரந்தது |
| ,, | பம்பையிற் சாற்றி | சீவக | நாமக | ௧௫ | சிலைக்கும் பம்பையும் |
| 43 | காமனுஞ் சாமனும் (சீவக, ௧௭௧௫) | கலி | மருதம் | ௨௧ | சாமனர் தம்முன் செலவு காண்க |
| ,, | ,, | நாய்ச்சியார்திருமொ | க - தி. தையொரு | ௧ | அநங்கதேவா ......... உன்னையுமும்பியையுந் தொழுதேன் [தார் |
| ,, | ,, | உத்தர | அசுவமேத | ௧௨௭ | காமனுஞ் சாமன் றானும் |
| ,, | ,, | பிரமோ | சீமந்தனி | ௭ | காமனுஞ் சாமனு மெனக்கவி னமைந் |
| ,, | ,, | பாரத | அருச்சுனன் தீர்த்த | ௨௭ | சாமனிலுங் காமனிலுந் தயங்கு மெய்யோன் |
| 46 | கவரிகன் றூட்டப் போந்தபால் | தணிகை | வள்ளி | ௭௪ | கன்றினைக் கவரி யூட்டிக் கழிந்தபால் |
| 49 | அளமரு குயிலினம் | திருவிளை | நாட்டு | ௧௮ | அளமரு பொறிபோல் |
| 50 | களிப்பவுண் டிளவனங் கன்னி நாரையைத் திளைத்தலின் | சீவக | மண்மக | ௨ | சலஞ்சலமேய் வனநோக்கி, யரிதுணரன்னம் பெடையெனத் தழுவி |
| ,, | தெருட்டுஞ் செம்மற்றே | முத்தொ | "வெருவரு" | ...... | மின்றழைக்குஞ் செமமற்றே |
| 51 | கண்ணெனக் குவளையுங் கட்ட லோம்பினர், வண்ணவாண் முகமெனமரையி னுள்புகார் | கம்ப | நாட்டு | ௪௦ | கண்கைகான் முகம்வா யொக்குங் களையலாற் களையி லாமை.........உலாவிகிற்பார் |
| 53 | சொல்லரு.........காய்த்தவே | திருவிளை | ,, | ௨௭ | புனையற வுணர்ந்தோர் ......ஒசிந்தது |
| 54 | மீன்கணி னளவும் | சீவக | பதுமை | ௨௨௮ | கயற்கணி னளவுங் கொள்ளார் |
| ,, | தேன்கணக் கரும்பியல் காடும் | ,, | முத்தி | ௫௦௭ | கரும்பலாற் காடொன் றில்லாக் கழனி |
| ,, | செந்நெலின் ......... களிறுமாய் கழனி யாக்கம் (சீவக. ௧௧௧௭) | மது | ......... | ௨௭ | களிறு மாய்க்குங் கதிர்க் கழனி |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 71 | காடியுண்ட ......... இருந்தவண்ண மன்னர் | சிறுபா | | உகஉ - ச | மகளி, ரகிலுண விரித்த வம்மென் கூந்தலின் மணிமயிற் கலாப மஞ்சிடைப் பரப்பி |
| ,, | ,, | கதை | வயந்தக னகன்றது | க - கக | காடி கலந்த சோடிக் கலிங்கம், கழும லூட்டுங் காழகி னறும்புகை, முழுநிலா மாடத்து முடிமுத றழுவ |
| 73 | கொய்ம்மலர தோன்றிபோற் சூட்டு டைய சேவல்....போர்க்கொளீஇ | திருவிளை | நகர | எக | கொம்மலர்க் குடுமிச் சேவல் கோழி ளங் தகர்போர் மூட்டி |
| 75 | வெப்பின் முப்ப முச்சுனைத், தலைத்த ணீர் மலரணிந்து சந்த னஞ்செய் பந்தரும் (சீவக. உகநுசு) | கழுக்குன் றப் | ,, | கஎ | முப்பழம் பொதிந்த வாவி மூவகைத் தலைதெண் ணீராத், தப்பற நறை கொண் டேட்டிச் சந்தனப் பந்த ரீட்டி, வெப்பொழி தரப்பெய் வாரும் |
| 76 | அடிசில் வைக லாயிர மறப்புறமுமா யிரம் | மணி | உ0 | சு - எ | அறவோர் பள்ளியு, மட்டிற் சாலையும் |
| 77 | நற்றவஞ் செய்வார்க்கிடந் தவஞ்செ ய்வார்க்கு மஃதிடம்......அஃதிடம் | ,, | கச | ச0 - சக | அறஞ்செய் மாக்கள் புறங்காத் தோம்புநர், நற்றவஞ் செய்வோர் பற்றற முயல்வோர் |
| ,, | ,, | ,, | உஉ | உஉ | நற்றவப் பெண்டிர் |
| ,, | மற்றநாடு வட்டமாக வைகு மற்ற காடரோ | காஞ்சி | நகர | கஉக | பற்பல நகர மெல்லாம் வட்ட மாப் படைத்த காஞ்சி |
| 78 | பெண்வலைப் படாதவர் பீடி ஞெங் கிய, வண்ணலங் கடிநகர் | சீவக | குணமா | க | காசறு துறவின் மிக்க கடவுளர் சிந்தை போல, மாசறு விசும்பு |
| 79 | விண்புகு வியன்சினை மெலியப் பூத்தன | நைடத | அன்னத் தைக்கன் | நு | விண்புகு வியன்சினைத் தருக்கள் |
| 87 | பாத்தரும் பசும்பொனின் மாடத்து | சீவக | காமக | நுகக | பாத்தரும் பசும்பொற் றலம் |
| 89 | பொற்சிறு தேர்மிசை......சான்றவே | பட் | | உஉ - ௫ | மகளிர் உணங்குணு.........விலக்கும் |
| ,, | ,, | மணி | நு | கசக - நு | புதல்வரைப், பொலந்தேர்......ஏற்றி |
| ,, | ,, | திருவிளை | நகர | அ0 | பெண்முத்தமனைய.........தேருருட்டு வார்கள் |

| சீவக. செய்யுளெண். | மூலம் அல்லது கருத்து. | நூற்பெயர்களின் முதலியன. | நூல்களின் பகுதிகள். | செய்யுள் அல்லது அடி எண். | மூலம் அல்லது கருத்து. |
|---|---|---|---|---|---|
| 54 | செக்........யாக்கம் | கைடத | சுயம் | கரு அ | களிறு மாய்க்குஞ் செக்கெலங்குலை |
| ,, | ,, | பிரபு | மாயையுற் | கக | யானை மறையக் கதிர்த்தலைச் சாலி நீடி |
| ,, | ,, | தணிகை | நாட்டு | ககச | களிறு மாய்ப்ப கதழ்ந்தெழு பூம்பயிர் |
| 55 | தேய்பிறை யிரும்புதம் வலக்கை சேர்த்தினர். | திருவிளை | ,, | உஎ | கொடும்பிறை வடிவிற் செய்த கூனிரும் பங்கை வாங்கி |
| ,, | செக்கெலகன்ற காடு | திருஞான | சீகாழி | பூவார்-கு | செக்கெற் காடேறிச் சங்கினும் |
| 56 | கம்பலம் பொலிவெய்த | சீவக | பதுமை | ருஉ | எங்கு கம்பலத் தின்னிசை |
| 57 | பாளைவாய் கமுகினம் பழங்கள் சிக்தமே | கைடத | அன்னத்தைக்கண் | கு | பாளைவாய் கமுகிற் முவிப் படுபழஞ் சிதறி |
| 58 | போர்விளுன் மலிக்து(போர்வு-போர்) | ஐங்குறுநிணைமா | | கு அ | விண்டு வன்ன வெண்ணெற்போர்வின் |
| ,, | ,, | | | கச அ | எருமை........நெற்போர்வு குடிவரும் |
| 61 | இணைகிலைப்பொருகர் | சிலப் | க0 | கரு அ | தெண்ணிணைப் பொருகர் |
| 64 | இளிவளர் பூமருது | பெரிய | திருக்குறிப்பு | க0 | இளி மருதமர் சேக்கைய மருதம் |
| 66 | வாலெகன்னை | சீவக | ாமக | கருக | வன்னைவாடு (ாஸ. சுயம். கசஅ) |
| 67 | கயர்தலைக் குடைதயின் | திருவிளை | வெள்ளை | உஉ | கயக்தலைக் குடைந்த போது |
| 68 | பசைவ விடிப்பவ நுகக்கை வாளைப் பக்பழம்.........தடிக்தி | பதிற் | | உக | அவெறி புலக்கை வாளைச் சேர்த்தி |
| 69 | கன்றருத்தி மங்கையர் கவிதை போதிதா கின்ற பேதி | மணி | கஉ | கக | தரவைகன் முர்த்திக் கவிதை பொழியும் |
| 70 | அகிற்புகை திரண்டதொக்கு மாமணிப்புரு | பாரத | காண்டவ | ருக | கபோதகோத் தனவிடை விடையெழுஞ் சுடர்த்துபம் |
| 71 | மகளிர்கூந்தற்குக் கலாபம் உவமை | மலை | | சச | கணங்கொ டோகையிற் கதுப்பிகுத்தசைஇ |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 71 | காடியுண்ட ........ இருந்தவண்ண மன்னர் | சிறுபா | | ௨௬௨ - ௪ | மகளி, ரகிலுண விரித்த வம்மென் கூந்தலின் மணிமயிற் கலாப மஞ்சிடைப் பரப்பி |
| ” | ” | கதை | வயந்தக னகன்றது | ௧ - ௧௧ | காடி கலந்த கோடிக் கலிங்கம், கழுமவூட்டுங் காழகி னறும்புகை, முழுநிலா மாடத்து முடிமுத நூவ |
| 73 | கொய்ம்மலர தோன்றிபோற் சூட்டுடைய சேவல்....போர்க்கொளீஇ | திருவிளை | நகர | ௭௧ | கொய்ம்மலர்க் குடுமிச் சேவல் கோழிளங் தகர்போர் மூட்டி |
| 75 | வெப்பின் முப்ப ழச்சுளைத், தலைத்தணீர் மலரணிந்து சந்த னஞ்செய் பந்தரும் (சீவக. ௨௩௯) | கழுக்குன்றப் | ” | ௧௭ | முப்பழம் பொதிந்த வாலி மூவகைத் தலைதெண் ணீரைத், தப்பற நறை கொண்டேட்டிச் சந்தனப் பந்தரீட்டி, வெப்பொழி தரப்பெய் வாரும் |
| 76 | அடிசில் வைக லாயிர மறப்புறமுமாயிரம் | மணி | ௨0 | ௧ - ௭ | அறவோர் பள்ளியு, மட்டிற் சாலையும் |
| 77 | நற்றவஞ் செய்வார்க்கிடந் தவஞ்செய்வார்க்கு மஃதிடம்......அஃதிடம் | ” | ௧௪ | ௪0 - ௪௧ | அறஞ்செய் மாக்கள் புறங்காத் தோம்புநர், நற்றவஞ் செய்வோர் பற்றற முயல்வோர் |
| ” | ” | ” | ௨௨ | ௨௨ | நற்றவப் பெண்டிர் |
| ” | மற்றநாடு வட்டமாக வைகு மற்ற நாடரோ | காஞ்சி | நகர | ௧௨௧ | பற்பல நகர மெல்லாம் வட்ட மாப் படைத்த காஞ்சி |
| 78 | பெண்வலைப் படாதவர் பிடி ஞெங்கிய, வண்ணலங் கடிநகர் | சீவக | குணமா | ௧ | காசறு துறவின் மிக்க கடவுளர் சிந்தை போல, மாசறு விசும்பு |
| 79 | விண்புகு வியன்சினை மெலியப் பூத்தன | நைடத | அன்னத் தைக்கண் | ௩௯ | விண்புகு வியன்சினைத் தருக்கள் |
| 87 | பாத்தரும் பசும்பொனின் மாடத்து | சீவக | காமக | ௩௯௧ | பாத்தரும் பசும்பொற் றூலம் |
| 89 | பொற்சிறு தேர்மிசை......சான்றவே | பட் | | ௨௨ - ௯ | மகளிர் உணங்குணு........விலக்கும் |
| ” | ” | மணி | ௩ | ௧௪௧ - ௩ | புதல்வரைப், பொலந்தேர்......ஏற்றி |
| ” | ” | திருவிளை | நகர | ௮0 | பெண்முத்தமலையை.........தேருருட்டுவார்கள் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ,, | ,, | கதை | நருமதைச் சம்பந்தம் | அ௨ - எ | ஒன்றுமுத லாக வோரெட் டிறுத்த, வாயிரங் காறு மாத்த பரிசத்து...... தோழித் தூதினர் |
| 109 | ஆசைப்பட் டரச வைக | சிலப் | ௧௬ | ௧௩எ | அர சொடுங்குங் கடிமனை வாழ்க்கை |
| 111 | புகை இரவுசெய்தல் | திருவிளை | ௩௧௫ | அஎ | அட்டில்வாய்ப் புகையும் ......... கங்குல் பட்டது |
| 113 | பவளக்கார்கிடுகு | சீவக | முத்தி | ௬௭எ | பவளக்கா ரிகழும்......... கிடுகு |
| 116 | சொற்கள் பொருளில்லா ஓசையாதல் | திருவிளை | ௩௧௫ | ௯எ | பாய தொன்மர.........கிடந்தன்றே |
| | ,, | தணிகை | ,, | ௬எ | பொருண்மை சுட்டிய........பேசுவார் |
| 120 | நாத்தலை மடிவிளி (சீவக. ௪௩எ) | பெரும்பா | | ௧௬௯ | மடிவாய்க் கோவலர் |
| ,, | ,, | கூர்ம | பிலக்க | ௪௦ | செங்கா மடிவிளி கேட்டலும் |
| 122 | வளையறுத் தனையன வாலரி | கந்த | வில்வலன் | ௧௨ | வளையின் சின்ன, மொத்த தண்டுலம் |
| ,, | வளையறுத்.........ஒருபால் | நைடத | நாட்டு | ௧௬ | மாதர்மென் முல்லை.........நுகர்வர் |
| 124 | புரிபுனர்குழல் | சிலப் | ௬ | ௧௬௯ | குழல்வழி நின்றது யாழே |
| 131 | நறைக்கொடி | ஐங்குறு | | ௨எ௯ | நறைக்கொடி கொண்டு |
| ,, | ,, | புறநா | | ௧௬௮ | நறைநார்த் தொடுத்த வேங்கை |
| 135 | இரவும்பகலும்தெரியாமையால் நகரம் சுவர்க்கம்போலுதல் | நைடத | நாட்டு | ௨எ | கொல்லுலை ......... இமையவ ருலக மேய்க்கும் |
| 138 | விழவும் வேள்வும் | திருநா | திருமழபாடி நீறேறு.௧௦ | | விழவொலியும் வேள்வொலியு மானூன் |
| ,, | ,, | பெரியதிரு மொழி | ௯-ப. ௪-தி. | அ | வேள்வும் விழவும் வீதியி லென்று மறுதலூர் |
| 142 | சேணிலத் தியற்றிய சித்திரச் சுருங்கை | சிலப் | ௧௬ | ௯௪ - ௫ | யானை யினநிரை பெயருஞ், சுருங்கை வீதி |
| ,, | ,, | மணி | ௨அ | ௫ | சுருங்கைத் தூம்பின் |
| ,, | ,, | கம்ப | ஊர்தேடு | ௧௪௫ | கரந்துறை காண்பான் |
| 145 | கொங்கு விம்மு கோதை [செய்குன்று | நைடத | கைக்கிளை | ௧ | கொங்கு விம்மு கோதை யோடு |
| 148 | திளைவிளைதல் முதலியன அமைந்த | சீவக | கேம | அ௫ - எ | பொழிந்து.........ஒச்சினனே |
| 152 | ஊற்றிருந்தழும் மதத்த | தணிகை | காப்பு | ௨ | ஊற்றிருக்கு மதக்களுழி |
| 157 | நாகத்தி னழற் சீற்றத்தன் | சீவக | பூமக | ௧௯ | அரவி னவிராரழல் போன்று சீறி |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 200 | வெஃகிலாக் கேள்வியான்(சீவ.கககஎ) | சூளா | மந்திர | சுரு | வெஃகிலாக்கேள்வியானை |
| ,, | ,, | கூர்ம | சந்திர | க0கூ | வெஃகிறதி கேள்வி விருட்டுணி |
| 202 | யானைத்தவிசை நாய்மேலிடுதல் | பழ | | எரு | பெரியார்க்கு.........நாய்மேற் றவிசிடு மாறு |
| ,, | ,, | திருவாச | உயிருண்ணி | உ | ஒருநாய்க்குத்தவிசிட்டிங், கூறுருடல் புகுந்தான் |
| ,, | ,, [(சீவக. உஎகச) | ,, | திருவேசறவு | ரு | பொற்றவிசு நாய்க்கிடுமா றன்றே [இ |
| 203 | நகம் பூண்பல் (பாரம் பூண்பேன்) | சிறுபா | | ககஙு-ரு | ஈகைச் செந்நகம்...... ஒருதான் முங் |
| ,, | ,, | சூளா | மந்திர | எ | உலகங் காக்கும் விழுநகம் [மேள்ளான் |
| ,, | ,, | கந்த | வள்ளி | கஅ | கிராதர்க் கெல்லா, நாயக நகம்பூண் |
| 209 | தொழுனையாறு (யமுனை) | சிலப் | கஎ | பக். ஙககக | தொழுனைத்துறைவனோடாடியபின்னை |
| ,, | ,, | பழ | | க உ | தொழுனையுள்,......மபக்குறத்தாள் |
| ,, | ,, | கூர்ம | கண்ணன்பூ | ஙச | தொழுனை யன்னோன் கருதழியொழு |
| ,, | கண்ணன் குருந்தமரத்தை ஒசித்தது | திருஞான | புறம்பயம் | ங | குருந்தொசிபெருந்தகையு நீயும்[கிற்று |
| ,, | ,, | திருநா | திருவதிகை | வெறி.க0 | கொல்லைவாய்க் குருந்தொசித்து |
| ,, | ,, | நாய்ச்-திரு | ங. தி. கோ | உ | குருந்திடைக்கூறைபணியாய் |
| 210 | காமமே கன்றி நின்ற | மணி | உஉ | உ0 | கன்றிய காமக் கள்ளாட்டு |
| 213 | அளந்தன போக மெல்லாம் | நாலடி | பழவினை | ங | வளம்பட.........செய்தாருமில் |
| 219 | விடியற்காலக் கனவு உடனேபலித்தல் | சிலப் | கரு | க0ரு-சு | கனவுபோல.........கடிதீங்குறும் |
| 220 | கண்கழூஉச்செய்து | திருஞான | திருப்பழனம் | க0 | கண்டான் கழுவா முன்னே யோடிக் கவ்வைக் கஞ்சியையுண்டு |
| ,, | கண்கழூஉச்செய்து.........செய்தாள் | ஆசார | | க0 | கண்கழீஇத்.........தொழுதெழுக |
| 227 | பாவியேனுவிவருந்துதியோ | சீவக | குணமா | கசுஎ | பாவியேற் காவியொன்று |
| 231 | ஆய்ந்தவனிச்சமாலை பெரும்பாரமாய் | ,, | முத்தி | க0ங | அனிச்ச மலரும் பொறையாகி |
| 243 | தவளைக் கிண்கிணி (சீவக, ஙகஉசு) | கதை | உழைச்சன | உசஎ | தவளைக் கிண்கிணி ததும்புஞ் சீறடி |
| ,, | ,, | சீகாளத்தி | நான்முக | உசு | தவளைவாய்ச் செம்பொற் கிண்கிணி |
| 255 | கோணிலை திரிந்து......கோல்கோடின் | மணி | எ | அ-க0 | கோணிலை திரிந்திடிற் ...... இல்லை, |
| 256 | கார்த்திகை விளக்கிட்டன்ன | சேதுபு | தேவிபுர | ருக | கார்த்திகை...விளக்கின் விளங்கினான் |
| 259 | பொன்விளைந்தபூமிபொலிய | ஐங்குறு | மருதம் | க | நெற்பலபொலிகபொன்பெரிதுசிறக்க |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2531 | அரங்குபுல்லென்னப்போகி | ,, | குமார | ௧0 | தம்புரிவளைகன் னகர்ச்செல்வம்புல்லென |
| 2535 | செல்வர்க்கேசிறப்புச்செய்யுந்திருந்து நீர்மாந்தர் | திருக் | | எ௰௨ | இல்லாளை யெல்லாரு மௌ ளுவர் செ ல்வனை,யெல்லாருஞ் செய்வர் சிறப்பு |
| ,, | ,, | கால | மெய்ம்மை | ௯ | காலாடுபோழ்திற்.........சிலர் |
| 2541 | முனித்தலைக்கண்ணிநெற்றிச்சிறூர் | சீவக | கோவி | ௬௨ | புறுத்தலைவேடன் |
| ,, | முழாவிற்புல்லி | தணிகை | வள்ளி | ௰௧ | செங்கைமுழாவிற்பொலிவண்முழவும் |
| 2553 | உடம்பெலாங் கண்க ளாயின் | திருவாச | சதகம் | ௨௧ | உடம்பெல்லாங் கண்ணா யண்ணா, வெ ள்ளந்தான் பாயாதால் |
| 2554 | மூலைமுத றறந்த வன்றே........தெவ் வரைச் செகுத்த நம்பி | பொருந | | ௧௩௯- ௧௪௮ | ஆளிநன்மானணங்குடைக்குருளை,.... கரிகால்வளவன் |
| 2556 | பொருளார்க்கே,வரும்வழிவினையுழந்து | திருக் | | ௰௯௪ | ஆக்கமதர்வினாய்ச்செல்லும் |
| 2569 | ஆழிசெம்பொற் சூட்டொடு கண்ணி... | சீவக | மண்மக | ௯௯ | பைம்பொனாழிதொட்டான் |
| 2578 | வேனன் மல்கி [அருளி | திருநா | சடலூர் | மலை-௩ | வேனலானையுரித்து [வந்ததால் |
| ,, | ,, | சிலப் | அ | இறுதி-வெ | வேனற்பாணிக்கலந்தாள்; இளவேனல் |
| ,, | ,, | நள | சுயம் | ௨௧ | இளவேனல்வந்ததெதிர் |
| 2580 | போகபூமியும் | சீவக | இலக்க | ௨0௯ | உத்தரகுருவுமாகி |
| 2583 | வாளெனவாளைபாய | புற. வெ | தும்பை | ௨௧ | வாளை பிறழுங் கயங்கடப்ப, ஆடினார்; வாள்விதிர்த்து |
| ,, | ,, | கம்ப | பம்பை | ௨௨ | வாளெனவாளைகள்பாய |
| ,, | வலையவர் முன்றிற் பொங்கி வாளென வாளை பாயச், சிலையவர் குரம்பை யங்கண் மானினஞ் சென்று சேப்ப, .........கொலைகடிந் திவற லின்றி | பட் | | ௧௯எ-௯ | வலைஞர்முன்றின் மீன்பிறழவும் விலை ஞர்குரம்பைமாவீண்டவும் கொலை கடிந்துங்களவுநீக்கியும் |
| 2608 | சிங்க நடப்பதுபோற் சேர்ந்து......... பாதமுடிதீட்டி [வா யாங்கு | மேரு | பூரண | ௬௩ | இளஞ்சிங்கநடப்பதேபோற்சென்றவ ன்பணிந்தெழுந்து |
| 2612 | கற்சிறை யழித்து வெள்ளங் கடற்க | தொல் | புறத்திணை | அ | வருவிசைப் புனலைக் கற்சிறை போல |
| ,, | ,, | மது | | எ௨௰ | வருபுனற் கற்சிறை கடுப்ப |
| ,, | ,, | கூர்ம | சூரியன்மரபு | ௨௪ | கற்சிறையழித்து.........ஒழுகுஞ்சரயு (ஷை நவசண்ட, ௯0) |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2747 | மணிவண்ணனுவலியவலித்தான் | சீவக | முத்தி | ௨௯௫ | மணிவரையனையமாதவன் |
| 2749 | ஒருகடலி விட்டகழி மற்றொருகடலி விட்டதுகத்துளையிற்செல்லல் | திருச்சிற் | | ௯ | வளைபயில் கீழ்கட லின்றிட மேல்கடல் வானுகத்தின்,றுளைவழி கோக்கழி கோத்தென |
| ,, | ,, | கதை | களிறுபெயர்த்தது | | தென்கட லிட்டதோர் திருமணி வான்கழி, வடகட னுகத்துளை வந்துபட் டாங்கு |
| 2756 | பொய்கையுண் மலரெனவளர்ந்து | மது | | ௪௯௧-௫ | மாக்கனை ........ தாமரைப்போதுபிடித்தாங்கு |
| 2769 | எதிலான் முர கம்பி யெளிதென விறந்த பாவத் | திருக் | | ௧௪௫ | எளிதென வில்லிறப்பா னெய்துமெஞ் ஞான்றும், விளியாது நிற்கும் பழி |
| 2771 | விழுப்பற வதுக்கி யிட்டு | மேரு | கிரயத்தி | ௨௫ | விழுப்பற வதுக்கவினை யேகொடிய |
| 2781 | மனுவனைய மென்குன் மடவும்பு | பெரும்பா | | ௪௫௨ | மனவுச்சூ ழடும்பு [தென்பார் |
| 2784 | கிரம்பாத கீரிபாற் றிமென்னு ளாழ்ந்து, பெரும்பார வாடவர்போல்...... புல்லுண்ணு பொன்றும் | கதை | பிடிவீழ்ந்தது | ௫௫-௪ | குண்டுதுறை யிடுமணற் கோடுற வழுந்திய, பண்டிதுறை யேற்றும் பகட்டினைப்போல |
| 2787 | வேள்விவாய்க் கண்பபேத்தும் ...... நாலுலப்பித் திட்டார் | திருக் | | ௫௨௯ | கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற், செல்லா துயி [ருண்ணுங் கூற்று |
| 2789 | மல்லன் மலையனைய மாதவனை | ,, | | ௮௯௮ | குன்றன்னார் |
| 2793 | காவலாய், கவிழ்தற்றன்பம் | நால | இளமை | ௨ | வந்ததே, யாழ்கலத் தன்ன கலி |
| 2824 | ஐவகைப் பொறியும் வாட்டி யாமை போ லடங்கி | திருக் | | ௧௨௯ | ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றின் |
| 2825 | இன்பதுன்பஒப்புமை (சீவச. ௧௧௯௭, ௨௯௪௦) | தொல் | மெய்ப்பா | ௧௨. உரை | செஞ்சாந் தெறியினுஞ் செத்தினும் போழினு, நெஞ்சோர்ந் தோடா நிலைமை |
| 2826 | பாற்கதிர்த் திங்கட் கொட்பிற் பருமித்த களிறுபோல, நூற்கதி கொண்டு கண்ணு னுகத்தள வெல்லை நோக்கி ........தவர்மனையில்வந்தால் | மேரு | வச்சிராயுதன் | ௫௮ | மண்ணிற் கண்ணுகத் தளவு நோக்கி ........ வாள்வாய்ப் பிடிகடப்பதே போல், எற்றநாண் மீனே டேகு மதியென........புக்கான் |

| சீவக. செய்யுளெண். | மூலம் அல்லது கருத்து. | நூற்பெயர்களுமதலியன. | நூல்களின் பகுதிகள். | செய்யுள் அல்லது அடி எண். | மூலம் அல்லது கருத்து. |
|---|---|---|---|---|---|
| 2839 | குஞ்சி, கமைத்தபூக் தாமக் தோய | திருநா | ஆரூர் | பொய். ந | நம்மா னமைப்புண்ணேன் |
| 2842 | அடங்கலர்க்கு | திருக் | | உஎச | நெஞ்சிற்றுறவார் |
| 2845 | உள்பொரு ளிதுவென வுணர்தன் ஞானமாம் | ,, | | சஉந | எப்பொருள் ........ மெய்ப்பொருள் காண்பதறிவு |
| 2885 | கழிந்தகம் பிறவி தம்மு ளேதிலம் யாங்களெல்லாம் | சீவக | காமக | உசக | அவற்று ளெல்லா மேதிலம் பிறந்து நீங்கிச்,செல்லுமக் கதிக டம்முட் சே |
| 2887 | தணக்கிறப் பறித்த போதந் தானவை விடுத்தல் செல்லா.........உடம்பு | பெரிய | கண்ணப்ப | ககரு | வங்கிளைப் பற்றிப் போதா வ } [ரலம் ல்லும் பென்ன நீங்கான் } |
| 2889 | சாசார னென்னு.....தேவர் கோவாய் | மேரு | நால்வரும் | சo | இந்தச் சாசா ரணுல் |
| ,, | ,, | குளா | மந்திர | கககூ | சாசாரமென்னு, மித்திரவுங்கமெய்தி |
| 2890 | சிலம்பிற் சிலம்புங்குர லன்னம் | கம்ப | நகரப் | கூகி | சிலம்பேங்க வேங்குவ,அன்னம்; (நை. கையடை. உச; நை. பம்பை, கசி) |
| ,, | ,, | கூர்ம | சந்திர | ககச | சிலம்பொலி யென்னப் பெடையன மரற்றி [தது |
| 2891 | மொழி, கஞ்சன் வேலினு ளமுங்க வீழ்ந் [ந்ததே | சீவக | முத்தி | சகஅ | இன்னுரை பெயிறவில் அமிழ வீழ்ந் |
| 2902 | கரும்புவார் கரடொன் றில்லாக் கழனி | புறநா | | கக | கரும்பல்லது காடறியாப், பெருந்தண் பணை |
| 2907 | வாய்ப்பமிக் கேம மின்றும்......சரக்குமன்றே. (முற்றும்பார்க்க) | ,, | | கஅச | காப்செல் லருத்து......உலகமுங் கேடுமே (முற்றும்பார்க்க) |
| 2908 | செல்லுயிர்......கம்பி யென்முன்(முற்றும்பார்க்க) | ,, | | கஅரு | செல்லுமுயி ரன்றே ..... வேந்தர்க்குக் கடனே. (முற்றும்பார்க்க.) |
| 2909 | ஆர்வலஞ் சூழ்ந்த வாழி........ அன்னதாமே. (முற்றும்பார்க்க) | ,, | | கஅகி | காவ்பார் கோத்த......... தலைத்தலைத் தருமே (முற்றும்பார்க்க.) |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2910 | காய்ந்தெறி கடுங்கற் றன்னைக் கவுட் கொண்ட களிறு போல......வெகுளி மாற்றி | ,, | | ௩௦ | களிறுகவு ளடுத்த வெறிகற் போல, ஒளித்த துப்பினை |
| ,, | வேந்தர்தாம் விழைபவெல்லாம்........ மறைத்தல் | திருக் | | ௪௪௦ | காதல காத லறியாமை யுய்க்கிற்பி, னேதில வேதிலார் நூல் (ஷை ௬௯௨) |
| 2930 | காட்டிடத் தொருமகன் றூரக்கு மாக் கலை, யோட்டைடைத் தாமெனி னுய்யும் | புறநா | | ௧௯௩ | வெண்களரி, னொருவ னட்டும் புல்வாய் போல,வோடி யுய்தலுங் கூடும் |
| 2932 | மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங் கலுங், தேய்தலு முடைமையைத் திங்கள் செப்புமால் | ,, | | ௨௭ | தேய்த லுண்மையும் பெருக லுண்மை யும், மாய்த லுண்மையும் பிறத்த லுண்மையும், அறியா தோரையு மறி யக் காட்டித்,திங்கட் புத்தே டிரிதரு மூலகத்து |
| ,, | ,, | கூவப்புரா ணம் | நைமிச | ௧௪ | உலகினர் செல்வ நந்த லுரைப்பொரு ளிரண்டுங் கோட, விலகுவிண் மதி யங் காட்ட வென்றுமோர் தகைத் தாய்ச் சேறல், விலகுதஞ் செல்வ மெங்கள் விழுப்பொருளாய வண்ண, லலகில்செஞ் சோதிப் பின்ன லணி மதி யுணர்த்த வாழ்வார் |
| ,, | ,, [தைமடவாரே | தியாகராச | நைமிச | ௧௯ | அகன்மதி வளர்ந்து தேய்ந்தற் றச்சக போகத் தன்மை, நகலுறக் காட்ட |
| 2945 | குழலேங்கு மாறேங்கி யழுதார் கோ | புறநா | | ௧௪௩ | குழலினை வதுபோ லழுதனள் பெரிதே |
| 2974 | தாழிவாய் மறைக்கும்.........குவளை | சிலப் | ௫ | ௧௯௨ | தாழிக்குவளை |
| ,, | ,, | பாரத | காண்டவ | ௧௮ | தாழிநறுங் குவளையந்தார்த் தருமன் |
| 2998 | தேய்பிறை யுருவக்கேணி | பட் | ௩௫-௮ | | மதிசேர்ந்த.........வான்பொய்கை |
| ,, | குவளை யஞ்சிக் குறுவிழிக் கொள்ளும் வாட்கண் | கூர்ம | சம்புத்தீவின் | ௯எ | குற்றசெங் கழுநீ ரணைந்தரில் விரித்த கண்ணெனக் குறுவிழிக் கொள்ளும் |
| 3018 | வாடா மாலை வார்தளிப் பிண்டி | திருமு | | எ௯ | வாடா மாலை யோடையொடு துயல்வர |

| சீவக. செய்யுளெண் | மூலம் அல்லது கருத்து. | நூற்பெயர்களுமதலியன. | நூல்களின் பகுதிகள். | செய்யுள் அல்லது அடி எண். | மூலம் அல்லது கருத்து. |
|---|---|---|---|---|---|
| 3018 | வாடா மாலை வார்தளிப் பிண்டி [நிக்து | மணி | ௩ | ௪௧-௫௦ | பன்மரம் யாவையும், வாடா மாமலர் மாலைகடேக்கலின் |
| 3081<br>3107 | சுக்கிலத் தியான மென்னுங் கணையெ தன்னுயிர் தான்பரிந் தோம்பு மாறு போன், மன்னுயிர் வைகலு மோம்பி | மேரு<br>திருக் | சஞ்சயந்தன் | ௨௧<br>௧௪௪ | சுக்கிலத் தியானவா ளெடுத்து<br>இன்னு வெனத்தா னுணர்ந்தவை துன்னுமை, வேண்டும் பிறன்கட் செயல் |
| 3111 | மணியுயிர் பொன்னுயிர் மாண்ட வெள்ளுயி, ரணியுயிர் செம்புயி ரிரும்பு போலவாம், பிணியுயி ரிறுதியாப் பேசினேன் | மணி | ௨௭ | ௧௫௦-௫௩ | கருமம்பிறப்புங்கருநீலப்பிறப்பும், பசும்பிறப்புஞ்செம்பிறப்பும், பொன்பிறப்பும்வெண்பிறப்பும். (சிவஞானசித்தியார், பர. ஆசீவகன், அ) |



# விளங்காமேற்கோளகராதி.

பக்கம்.

இவற்றுட் சிலவற்றின் நேரேகுறிக்கப்பட்ட நூற்பெயர்கள், சிலப்பதி காரவுரை, கல்லாடவுரை முதலியவற்றிற் கண்டவை.

# விசேடக்குறிப்பு.*



1. தேவர் - இந்நூலாசிரியராகிய திருத்தக்கதேவர்; துறந்தோரைத் தேவரென்றல் சைனசமயமரபு; குணபத்திரதேவர், உதீசித்தேவரென்னும் பெயர்களாலுணர்க. ஆசிரியர் - தொல்காப்பியர். அம்மைமுதலிய எட்டாவன: அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்பன; "அம்மைதானே" (தொல். செய்) என்னும் சூத்திரமுதலியவற்றைப்பார்க்க. படாதென்பது பாடுதல்வினையையும் பாடப்படும் ஆண்மகனையும்நோக்காது அவனது ஒழுக்கத்தினையுணர்த்தும். பரவற்கண்வரும் செந்துறைப்பாடாண்பாட்டும், புகழ்ச்சிக்கண்வரும் செந்துறைப்பாடாண்பாட்டும், முன்னோர்கூறிய குறிப்பின்கண்வரும் செந்துறைப்பாடாண்பாட்டுமெனப் பாடாண்பாட்டு மூவகைப்படும்; முன்னோர்கூறிய குறிப்பாவது பழையதோர்கதையைப் பொருளாகக்கொண்டு பிறர்க்கு உறுதிபயப்பக் கூறுவது. செந்துறை-மக்களைப் பாடுவது. தேவபாணி-தேவரைவாழ்த்துவது. தாழ்ம்பட்ட - தாழ்தல் பொருந்திய. மருவின் பாத்தியது - மருவிநடந்த வழக்கினது பகுதியை இலக்கணமாகவுடையது; (தொல். குற்றியலுகர.எஎ-ஆ.). உலகம் நித்தியமென்பது சைனர்களுடைய கொள்கையாதலின், 'மூவாமுதலாவுலகம்' என்றார். சாதுக்கள்-துறந்தோர். சித்தசரணம் - சித்தனைவணங்கல்; சித்தன் - காதி, அகாதியென்னும் இருவகைக்கருமங்களையுமவ்வாறு அக்கினியிற்றிரளல் உடம்பைத்துறந்து பரிநிர்வாணம்பெற்று மூவுலகத்துச்சியிலிருப்பவன்; சித்திபெற்றவன்; அசரீரியென்றும் அநங்கனென்றும் கூறப்படுவன்: முத்திபெற்றவர்கள் பலராகவிருந்தும் ஒருமையாற்கூறல், சாதியொருமையென்பர். "மூவுலகத்துச்சிச் சூளா மணிவிளக்குத், தேர்வகையிற் சித்தி யவர்" (அருங்கல. கடுகூ). முத்தியுலகம், ஸித்தக்ஷேத்திரம்; இது, வென்றுருலகமென்றும் வழங்கப்படும். குருக்கள் - திருத்தக்கதேவருடைய ஆசிரியர். சித்தசரணம், அருகசரணத்தின்பின்பு கூறப்படுதல்முறை.

2. பத்மம், சங்கம், மத்ஸ்யம், ஸ்ரீவத்ஸம் முதலிய இரேகைகள் நூற்றெட்டும் மஸூரிகைமுதலிய அடையாளங்கள் தொளாயிரமும் ஆக மறுக்கள் ஆயிரத்தெட்டென்றும், ஸ்வஸ்திகம், நந்தியாவர்த்தமுதலிய இரேகைகள் நூற்றெட்டும் மஸூரிகைமுதலிய அடையாளங்கள் தொளாயிரமும் ஆக மறுக்கள் ஆயிரத்தெட்டென்றும் நூல்கள் கூறும். ஸ்ரீவர்த்தமானர், பொன்னிறமுடையவராதலின், 'வெம்புஞ் சுடரிற் சுடருந் திருமூர்த்தி' என்றார்; 'பரிதியங்கடவுளன்னனோன்'' என்பர்பின்; 374; இதனை, திருக்கலம்பகக்காப்புச்செய்யுளின் உரையாலுமுணர்க. அருகன் - ஜினன்; பூஜ்யன். இஃது அடியார்க்குநல்லார்கருத்து.

3. நல்லறம் - ஜினதர்மம். அருஞ்சுரத்தின்மரம் -

* அரும்பத அகராதிமுதலியவற்றாலும் சீவகசிந்தாமணி ஆராய்ச்சி விளக்கத்தாலும் விளங்காத மூலப்பகுதி உரைப்பகுதிகளுள் இன்றியமையாத சிலவற்றிற்குமட்டுமே இக்குறிப்பு எழுதப்பெற்றது.

மரம்; (புறநா. கககூ; நாலடி. சுற் றச். உ)

6. சாமி - ஸாமி; ஸ்வாமீயென்னும் வடமொழிச்சிதைவு. பாகதம்-பிராகிருகம். அகம் - அகநானூறு.

10. ஒருதெய்வம்-யக்ஷிதேவதை.

11. நஞ்சுஅற்ற-நைந்துற்ற; மனமுருகிய. நாகர்-பவணதேவர். நாகரிற் றுய்த்தமையை, "மாசுண மகிழ்ச்சி மன்றல்", "நாகரி ருயினரே" என்பவற்றாலுமுணர்க; 189, 217.

13. மழைவள்ளல்-மழைபோலே வரிசையறியாமற் கொடுப்பவன்; 899.

14. பஞ்சநமஸ்காரமாகிய மந்திரங்கள்-அருகர், ஸித்தர், ஆசாரியர், உபாத்யாயர், ஸாதுக்களென்னும் பஞ்சபரமேஷ்டிகளை வணங்குதற்குரியனவாகிய ஐந்துமந்திரங்கள்; "மந்திரங்களைந்து மனத்தில்வாச் சென்றாக, விந்திரற்கு மிந்திரரே யெண்" (அருங்கல. க௬௦). இவை மரணத்துன்பத்தை நீக்குதலின், அமிர்தெனப்படுமென்பர்; "ஐம்பத வமிர்தமுண்டால்," (946) என்பதனாலறிக.

15. அன்னப்பார்ப்பைச்சிறைசெய்தசெய்தியை, இந்நூல், 2851 - ம் [illegible] ணர்க.

16. சிக்கவென்பது குடநாட்டில் வழங்குகின்றது.

22. எற்றுார் - இரந்தவர்.

23. உதிதன் - உண்டானவன்.

26. மாமன்மகளென்றதற்கு மாமன்மனைவியென்று பொருள்கொண்டார், அடியார்க்குநல்லார்; (சிலப். கொலை. கஎ-ம்அடியுரையைப்பார்க்க).

27. சிவகன் உருமுற்றபாம்பின் அஞ்சியதை, 2891 - ம்பாட்டாலுமுணர்க. அறிவன் - ஸ்ரீவர்த்தமானர். அடி-அவர்கோயிலாகிய சமவசரணம்; துறந்து தவஞ்செய்தற்குரிய இடம் அது; இப்படியே, "வீரன் றாணிழல் விளங்க நோற்றபின்", என்பர்பின்னும்; 409. சமவசரண இயல்பை, இப்புக்ககத்து, அஎக - ம்பக்கத்துக்குறிப்பாலறியலாகும்.

29. கேவலமடந்தை - மோக்ஷலக்ஷ்மி; 3117 - ம்பாடலைப்பார்க்க.

32. சக்கரவர்த்தியென்றது, சூரியகுலத்திற்பிறந்த நாபிமஹாராஜாவின் பௌத்திரரும் விருஷபதீர்த்தங்கரரின் புத்திரருமாகிய பரதேசுவரசக்கரவர்த்தியை; இவர் பரதராஜசக்கரவர்த்தியென்றுங் கூறப்படுவர்; கஉ-மஹாசக்கரவர்த்திகளுள்முதல்வர். இவருக்கு அஎ - லக்ஷம் யானைகளுள்ளனவென்பர்; "கோமா னடிசாரக் குஞ்சரங்கள் செல்வனபோல்" (3040) என்பதனாலுமுணர்க. மேலே, "ஆதிக்காலத் தந்தணன் காதன்மகன்" (366) என்றதும் இவனையே.

34. "தூதிறால்" என்பர்; 235.

37. குறிப்பு-தொனி; 'உண்டு' என்றவாக்கியத்தில் உண் னு த ல்முதலிய மனிதர்செய்கைகள் முறைபெறத்தொனித்தல்காண்க; பின்னும் இந்நூலுள்ளே [illegible] க்கியங்கள் பலவுள்ளன.

39. 'சனையெனும்பெயருடை' என்றும் பாடம்.

40. பம்பை - ஒருவகைவாத்தியம்; "சிலைக்கும்பம்பை" 42.

41. உவமிக்கும்பொருள்-உபமேயம்; 1557-ம்பாட்டின்உரையைப்பார்க்க.

43. காமனென்றது, கன்னபிரானுக்கு உருக்குமணியினிடமாகத்தோற்றிய பிரத்தியும்நனையென்றும் சாம்பனென்றது, அவருக்கு ஜாம்பவதியினிடமாகத்தோற்றிய ஸாம்பனையென்றுங்கொள்க; இராமலக்ஷ்மணர்களைப்போல இவ்விருவரும் எப்பொழுதும் இடைவிடாமற் சேர்ந்தேவாழ்ந்துகொண்டிருந்தனரென்று ஜைநநூலாகிய பிரத்தியும்நசரிதம் கூறுமென்பர்.

48. நிலமயக்கம்-திணைமயக்கம்.

51. பண்-நிறைந்தாரம்புகளையுடையஇராகம்; "நிறைநரம் பிற்றே பண்ணெனலாகும்" என்பது திவாகரம்; ஏழுசுரங்களையுமுடைய இராகமென்றபடி; இது வடமொழியில் ஸம்பூர்ணராகமென்றும் ஜநகராகமென்றும்

கூறப்படும்; எழுபத்திரண்டுமேளகர்த்தாக்களிலுள்ளவையெல்லாம் ஸம்பூரணராகங்களே; குறைந்தநரம்பையுடைய இராகம் திறமெனப்படும்; "குறைநரம் பிற்றே திறமெனப் படுமே" என்பது திவாகரம்.

மெல்லாம் இசைநூல்வல்லார்வாய்க் கேட்டுணர்க. களைபறிப்போர் இங்கே ஆடவரென்றுதெரிகிறது.

54. 'ஒல்லென் சும்மைத்து' என்றதனால், முற்றினமை கூறப்பட்டது.

56. கம்பலம்=கம்பலை; இச்சொல், பெருங்கதையிற் கம்பலெனவும் வழங்கும்.

58. போர்வு-நெற்போர்; (ஐங்குறு. ௯, ௫௮)

60. ஒருக்கின-ஓரிடத்திற்கூட்டின.

61. கிணைநிலை-வேளாளரைக்கிணைகொட்டுவோன் புகழ்ந்து பாடுதல்; கிணை-ஒருவகைப்பறை; தடாரி. பொருநர், ஏர்க்களம்பாடுவோர், போர்க்களம்பாடுவோர், பரணிபாடுவோரென மூப்பகுதியினர்.

63. ஓர்க்கோலை - கடலிற்றோன்றும் ஒருவகைப்பொருள்; அம்பர்.

64. கிளி, மருதமரத்திலிருத்தற்குரியதென்பர். தேன், மது: 872.

65. தாமரைமலரும் குயிலோசையும் இளவேனிற்குரியன. தோகைமயில் - ஆண்மயில். குயிலின் ஓசை பஞ்சமஸ்வரமென்று கூறப்படுமாதலின், 'மெல்லியவோசையன்மையின்' என்றார்.

அர்த்த உன்மீலனமுடையனவென்பர். "வள்ளைவாடு" என்பர்பின்னும்; 168. கழாய் - ஆடுதற்குநாட்டும் மூங்கிற்கம்பம். தொழிற்பெயர் - வினையாலணையும்பெயர்.

67. ஆவியன்னபூந்துகில் - புகைபோன்ற, பூத்தொழிலமைந்த ஆடை.

68. ஆசினி - ஈரப்பலா.

70. 'சிலர்பாட' என்னும்வாக்கியம் தொனிப்பொருள்.

72. இமைத்துநோக்கின், கண்ணிற் பிரதிபிம்பம் தோன்றாது.

73. "பூத்தலைவாரணப்போர்த்தொழிலிளையவர்" என்பர்; 120. பூழ் - குறும்பூழ்ப்பறவை; காடை.

74. வட்டில் - கிண்ணம்.

76. இறையிலிநிலம்-பகுதியில்லாத நிலம்; ஸர்வமானியம். கம்மியர்=கர்மியர் - தொழில்செய்வோர்.

81. இன்பிடி-இனியபிடி. யானைக்கவளம் நெற்கற்றையாலாக்கப்படும்; "நெல்லுடைக் கவளம்", "காய்நெல்லறுத்துக் கவளங்கொளினே" (புறநா. ௨௨, ௧௮௪.) என்பனவற்றாலுணர்க. வாரிகள் - யானைக்கூடங்கள். யானைக்கூடங்கள், மதிலைச்சார அமைத்தல் வழக்கம்; சூளாமணி, நகரச்சருக்கம், ௨ - ம செய்யுள்பார்க்க.

83. கோளகை - யானைத்தந்தப்பூண்; 645, 2275-ம்பாடல்களினுரையாலுமுணர்க. "மௌலி யிரண்டுமிருகோட்டுக், கோளகையாகக்கொண்ட கோக்களிறு" என்பது, இராசராசசோழனுலா, ௨௩௯.

84. வட்டம்-வட்டமாக ஓடுமிடம்.

85. புறப்படைவீடு - புறநகர். புறம்பே அணைந்த இடம் புறம்பணையென்பர் அடியார்க்குநல்லார்; (சிலப். கனாத்திறம். ௧௨)

86. மட்டத்துருத்தி, நெடுந்துருத்தியென்பன நீர்வீசுங்கருவிகள்.

87. பாத்தல் - பகுத்தல். ஏ - மேல்நோக்குதல்,

88. 'சிலர் கோபத்திற்குஅஞ்சி' என்னும்வாக்கியம், தொனிப்பொருள்.

89. கோழிமேற் குழையெறிதல், நன்னூல், ௨௦௮ - ம் சூத்திரவிருத்தியுரையிலும், திருவானைக்காப்புராணம், திருநாட்டுச்சிறப்பு, ௧௧௨ - ம் செய்யுளிலும் கூறப்பட்டுள்ளது; பெருஞ்செல்வரென்றபடி.

93. "பழுமரப் பறவையொத்த" (828) என்பர்பின்னும்; மிலேச்சர் - இலக்கணத்திருத்தமில்லாத சொற்களைச்சொல்லுவோர்; ஐயறிவுடையோர்; "மாவு மாக்களு மையறி வினவே" (தொல். மர.), "பொழுதளந் தறியும்

பொய்யா மாக்கள்" (முல்லை. ௫௫) "செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்" "கொலைவினைய ராகிய மாக்கள்" (திருக். ௪௨௦, ௩௨௯ என்பவற்றாலறிக.

95. இந்நகரத்தருகே கழியிணைந்தமை, 92, 427-ம் செய்யுட்களாலும் பெறப்பட்டது. சுறாக்களின்தன்மையை, 142-ம் பாடலாலுமுணர்க.

96. மும்மலம் - காமம், வெகுளி, மயக்கம்; சங்கைமுதல் பாஷண்டிமூடமிறுதியாகியமலங்கள் இருபத்தைந்தென்று கூறுவதுமுண்டு. கடவுள்-முனிவன்; "தொன்முது கடவுட் பின்னர்மேய" (மது. ௪௧). 'எழுந்தவண்டு' என்னும்வாக்கியமும், "புண்டரிகந் தியெரிவ போல்விரியப் பூம்புகைபோல், வண்டிரியுந் தெண்ணீர் மகதையர்கோன்" (நள. சுயம். ௧௪௪) என்பதும் ஒத்திருத்தல்காண்க.

98. தப்பல் - கொல்லல்; "பார்ப்பார்த்தப்பிய" (புறநா. ௩௪). "கன்னிய மகளிரிற் காண்டற் கரியன" என்பர் பின்; 1203.

99. யோசனையினளவு, பலவகைப்பட்டு வழங்குகின்றது: நாற்காதந்தான் யோசனையென்று சைனரும், ௪ - நாழிகைவழி அல்லது ௭௨ - நாழிகைவழியென்று மலைநாட்டாரும், ௪ - குரோசவளவென்று வடநாட்டாரும்வழங்குவர்; [குரோசம் ௧௨ - நாழிகைவழி] இந்நூல், 1901-ம் கவியுரையைப்பார்க்க.

101. துவக்குதல் - இங்கே, தானே

102. இடங்கணிப்பொறி - வந்தோர்மேற் கல்லைவீசும்பொறி. ஐயவித்துலாம்-கதவை அணுகாதபடி கற்கவி தொடங்கினாற்றுந்துலாம்; கற்கவி-நிலையின்மேலே போடப்பட்டிருக்கும்பா.

103. வட்டு - எஃகுருண்டை. யவனர் - ச்சர்; இவர்கள் வேலையிற்சிறந்தவர்கள்.

104. செய்யுளுறுப்பு இருபத்தாறுவன, மாத்திரைமுதல் வண்ணம் இறுதியாகவுள்ளவை; "மாத்திரையெழுத்து" என்னும் சூத்திரம்பார்க்க; (தொல். செய். ௧.)

101-4. சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, ௨௦௭-ம் அடிமுதலியவற்றிலும், திருவிளையாடற்புராணம், திருநகரப்படலம், ௨௪-ம் திருவிருத்தமுதலியவற்றிலும் மதிற்பொறிகள் இப்படியே கூறப்பட்டிருத்தல்காண்க.

105. எப்புழை - பகைவர்மேலே அம்புகளை எய்யுந்துவாரம்; "எப்புழை ஞாயி லேந்துநிலையரணம்" (பு. வெ. நொச்சி. ௧, கொளு); (தொல். புறத்திணை. ௧௦ - ம் சூத்திரம் நச்சினார்க்கினியருரையைப்பார்க்க.) இதனை, 1444-ம்கவி ஒத்திருத்தல்காண்க.

106. பொன்வினைநிவு: 503. நன்பொன்வினைநியம்.

112. பட்டம் - அரசராற்கொடுக்கப்படும் பட்டப்பெயர்கள்; அவை எட்டி, காவிதியென்பன; "எட்டி காவிதிப் பட்டந் தாங்கி" (பெருங்கதை); பூண் - இங்கே பொற்பூமுதலியன; "எட்டிப் பூப்பெற் றிருமுப் பதிற்றி யாண்டு, தொட்டிய செல்வத் துயர்ந்தோ னாயினன்" — மணி. (22) ௧௧௩-௪. யோசனையின் அளவை, 99-ம் கவிக் குறிப்பாலுணர்க.

113. நால்வேதவன் - நாலிற்றேர்ச்சியடைந்தவன். படுத்தலம். கற்படுத்தியபூமி. ஐயவி - வெண்சிறுகடுகு; இது தெய்வங்களுக்கு இனிது; "நெய்யோ டையவி யப்பி" (திருமு. ௨௨௮), "ஐயவி யப்பிய நெய்...... ன நிலை" (நெடுநல். ௮௬) என்பவற்றாலும் அவற்றின் உரையாலுமுணர்க. இச்செய்யுளின்பொருள், 2975 - ம் செய்யுளாலும் அதனுரையாலும் நன்குவிளங்கும்.

114. தாள் - தாழைத்திறக்குங்கோல்; "இன்பப்புதாத்திறக்குந் தாளுடையமூர்த்தி" என்பர்பின்; 1549; "அறக் கந் திறப்பதோர் தாள்" (அறநெறி. ௧௧௨). யவனப்பேழை - யவனதேசத்துப்பெட்டி.

116. இருள் - தேன்கூடு; எழுவர், "உத்தம குலத்து நாற்பெருங் குடியு முயர்ந்தவு மிழிந்தவு மயங்க, வைத் தவு மான புறக்குடி மூன்றும்" (திரு விளை. நகரங்கண்ட. சகு) என்றும் வழங்கப்பெற்றுள்ளார். "பாயதொன் மரப்பறைவ" (திருவிளை. நகர. சுஎ) என்னும்பாடல் இதன் உ - ம் அடிப் பொருளைத்தழுவியது.

117. உண்டசோறு - உண்டுமிக்க சோறு.

118. ஒப்பித்த - அலங்கரித்த.

119. பலி-பூசை. கொடி-ஒழுங்கு.

120. தோன்றி-செங்காந்தள். நாத் தலை மடிவிளி - நாவினது நுனியை மடித்துச்செய்யும் ஒலி; இது சீழ்க்கை, வீளையெனவும்வழங்கும்; "எடுத்தனர் விளியுஞ் சங்கும் வீளையும்" 447.

121. காசு - பலவகைமணிகள்.

122. துவை - புளிங்க

129. இருவேரி - வெட்டிவேர்.

131. மடைநூல் - பாகசாஸ்திரம்; "கந்துகக் கருத்து மடைநூற் செய்தி யும்"—மணி. (உ) உஉ.

135. நைடதம், நாட்டுப்படலத் ப்பாடல் இக்கவியைப் பின் ப

136. உயிர் உறுப்புமுதலியன கொ டுத்தலைத் ததீசி, சிபி, வலன், புத்தன் முதலியோரிடத்துக்காண்க. இந்நக ல் இரப்போரில்லையெனறபடி. பொன்னகர் - இராசமாபுரம்.

139. திங்கள்முக்குடை - திங்கள் போன்ற மூன்றுகுடை; அகடு-ம் பக் கம்பார்க்க; "திங்கள்மூன் றடுக்கிய திருமுக்குடை" (சிலப்.நாடுகாண்.க.)

140. கற்பகங்கள் பத்துவகைப்படு மென்றும் அவை மாலைமுதலியவற் றை யளிக்குமென்றும் சைனநூல்கள் கூறுமாதலின், 'கற்பகச்சோலை' என் றார்; 1716, 2841, 2997-ம் பாடல் களையும் அவற்றின் உரைகளையும் இப் புத்தகம் அஎ0-ம் பக்கத்துக் கீழ்க் குறிப்பையும்பார்க்க.

142. புறம்பில் அகழ் - நகரத்தின் மதிற்புறத்தேயுள்ள அகழி. கிடங்கு - அகழ்; இஃது அரசன்மனையைச்சூழ் ந்தமதிலின்புறத்தது. கரந்தகற்படை - மூடப்பட்டுள்ள கற்படுத்தியவழி; கரந்துபடையெனவும் கரந்துறை யெனவும்வழங்கும்; இது புறத்தே யுள்ள அகழியினின்றும் கோயிலக ழிக்கு நீர்வருதற்காகச் செய்யப்பட் டுள்ளகால்வாய்; வீதியிற்செல்லும் யா னைகள் தன்னுள்வீழாதிருத்தற்பொரு ட்டு இது மேலேமூடப்பட்டிருக்கும்; (சிலப். ஊர்காண். கூசு - ரு; மணி. உ௮ - ரு; கம்ப. ஊர்தேடு. கசரு.)

144. சூலம் - இடிதாங்கி.

146. பவணம்-நாகலோகம்; இது பலவகைப்பட்டபோகங்களிற் சிறப் புற்றதென்பர், "பவணத் தொருபாங் கினதால்" (2853); இது, "நாகநீ ணகரொடு நாகநா டதனொடு, போக நீள் புகழ்மன்னும் புகார்நகர்" (சில. மங்கல) என்பதனாலும் அதனுரையா லும் அறியப்படும்.

147. கமுகமரம் மகளிர் ஊசலாடு தற்குரியதென்பது, திருவாரூர் நான் மணிமாலை, உ0-ம்செய்யுள் முதலிய வற்றாலுமறியலாகும்.

148. மான் பிணைமுதலியவைகள் சித்திரமாக எழுதப்படுதலை, 596-ம் செய்யுளாலுணர்க.

149. ஊழ்-முறை. பிண்டி-அசோ கு. நாகம் - சுரபுன்னை; நாகமரமென் றே ஒருமரமுமுண்டு. காளம் - ஒரு வகைவாத்தியம்.

150. இளையர்-மங்கையர். பந்தாட லின்விகற்பங்கள் இந்நூல், 1953-ம் செய்யுள்முதலியவற்றாலும், பெருங் கதையில், 'பந்தடிகண்டது' என்னும் பகுதியாலும் நன்குவிளங்கும்.

153. கௌவை-முழக்கம். சூழ்ந்து- ஆராய்ந்து. மௌவல் - முல்லை. வல ந்த - சொல்லப்பட்ட.

154. காவன்மகளிர்-பகைவர்மனை யோராய்ப் பிடித்துவரப்பட்டமகளிர்; கொல்லப்படாராகலின், இவர்களைக் கொண்டு கோயிற்காரியங்கள்செய்

வித்தல் மரபு; இதனைப் பட்டினப் பாலை, உசசு - ம் அடிமுதலியவற்றுலும் அவற்றின் உரையாலும் உணர்க. ஸ்ரீகோயில் - ஜினாலயம்.

155. கை - கைம்மரம்: உரிமை - மனைவி; "உரிமைமுன் போக்கி யல்லால்" என்பர்பின்; 272.

156. ஒக்கடித்து-சேரக்கொட்டி.

157. அழல்-விடம். அணங்கு-தெய்வம். சச்சந்தன் - ஸத்யந்தரன்.

158. கலி - வறுமை. நுண்கலையென்க. கடி-வரைவு; "கண்ணுடி யன்ன கடிமார்பன்" என்பதன்பொருளைப் பார்க்க; 2327.

159. கோதை - மாலை.

157-9. சீற்றத்தனென்றதனாற்றிறலும், அமிர்தன்னவனென்றதனால் அளியும், கடிமார்பனென்றதனால் அழ [illegible] காடையும், [illegible] தனால்வீரமும், கலைக்கிடனென்றதனாற் கல்வியும், ஒப்பரிழற்றலானென்றதனால் முறைசெய்தலுங்கூறினார்.

160. உவமையும் உருபும் விரித்தலாவது தருமனைப்போல்வான், வருணனைப்போல்வானெனவிரித்தல். வாமன் - அருகக்கடவுள்; "வாமன்கோயில்" என்பர்; 2738. இச்செய்யுளைப் பலபடப்புனைவணிக்கு உதாரணமாகக் காட்டினர், திருத்தணிகைச்சரவணப் பெருமாளையர்; அவருடைய அணியதிகாரம்பார்க்க.

162. விதையம்-விதேகநாடு; விதையத்தரசன்பெயர் அரிமர்த்தனனென்பர். அல்லிசேரணங்கு - திருமகள்; அல்லி - அகவிதழ்.

163. காரிகை - பேரழகு.

164. மயிரின்வகை ஐந்தை, இந்நூல் 2437 - ம்செய்யுளின் விசேடவுரையாலுணர்க. நானம் - கஸ்தூரி. இவையிற்றிலே - இவற்றிலே; இற்று, சாரியை. குழன்ற - குழற்சிபெற்ற. நெறி-நெளிவு. இக்கவிமுதல், 179-ம்கவியளவும் விசயையின்கேசாதிபாதவருணனை; தெய்வமகளிரைப் பாதாதிகேசாந்தமாகவும் மானிடமகளிரைக் கேசாதிபாதாந்தமாகவும் வருணித்தல்மரபு; வேறுபட்டுவருதலுமுண்டு.

166. தகிலிகை - எழுதுகோல்.

167. அரியவாய் - இரேகைகளையுடையனவாய். கருமணி'யன்றது-இருமாலை. கற்புடையமங்கையர் பிறர்க்கு மயக்கத்தையுண்டுபண்ணுர்; தம்மைநினைத்த பிறர்நெஞ்சையும் சுடுவரென்பர்; இதனை, "கிறையுடைப் பெண்டிர் தம்மே போலப், பிறர்நெஞ்சுசுடூஉம் பெற்றிய மில்லை" (மணி-உஉ. சசு-சஎ.) என்பதனாலும், "இதிலவடமீன்" (சிலப். மங்கல.) என்பதன் உரையாலும் விளங்கும். இதுபற்றியே, 'கன்னியாதலின்மாலுறப்ப வென்றார்' என்று பொருள்கூறினர்; இதிலுள்ள, 'கருமணியும், பாலகத்துப்பதித்தன்ன' என்பதற்குச் செய்திருக்கும் பொருளை, இந்நூல், 1325 - ம்செய்யுள் வலியுறுத்தும்.

168. வாடினைவள்ளைக்கொடி, 'வள்ளைவாடு' எனவும்வழங்கும்.

169. கோட்புகாதகன்னிக்கமுகு - குலைவைக்கத்தொடங்காத இளங்கமுகு. செய்ப்பு-பளபளப்பு. கள்-களவு.

170. மகரம்-ஒருவகைத்தோளணி; அது முத்துவடங்களைத் தன்வாயிற் பெற்றிருப்பது; இந்நூல், 231, 351-ம்பாடல்களைப்பார்க்க.

171. பிறைவடம் - சந்திரஹாரம். வீற்றுத்தெய்வம் - வேறொன்றற்கில்லாத அழகைச்செய்வதோர்தெய்வம்; இந்நூல், 411, 606 - ம்பாடல்களையும் அவற்றினுரைகளையும்பார்க்க.

172. வலஞ்சுழி-நந்தியாவட்டமலர்.

173. ஆலவட்டம் - விசிறி.

174. வெருட்டி - வெருட்டுதலையுடையதுடைகள். குறங்குசெறி-ஓராபரணம்; "குறங்கு செறிதிரள் குறங்கினிற் செறித்து" (சிலப்.கடலாடு.அசு); "கிழன்மணிமகரவாய்செறித்து" (திருவாலை. அங்கயற்கண். திரு)

176. காம்பு - மூங்கில்.

177. அரி - பரல்.

178. அகவிதழ்-உள்ளிதழ்; உகிர்-நகம். தேன்-வண்டுகள்.

179. தம்பால்வந்து மீளும்பெரியோர்களுடன் ஏழடியளவு சென்றுவருவோர், ஸப்தபயத்யுனின் பரிங்கி, ஸப்தபரமஸ்தானத்தைப் பெறுவரென்பது சைனநூற்கொள்கை; "எழுமேழடியூக்கிடைக்குச்செலா" என்பர்பின்னும்; 1384.

180. நயனமோக்கம்பண்ணி-கண்ணைத்திறந்து; கண்ணைத்திறத்தல்,சிற்பிகளாற்செய்யப்படும் ஒருவகைக்கிரியை

183. இமவான் - இமயமலை; ஹிமவான், மஹாஹிமவான், நிஷதம், நீலி, ருக்மி, சிகரியென மலைகள் ஆறு உண்டென்பதும் அவற்றில் முறையே பத்மை, மஹாபத்மை, திங்கச்சை, கேசரி, புண்டரீகை, மஹாபுண்டரீகையென ஆறுபொய்கைகளுள்ளனவென்பதும் அப்பொய்கைகளில் முறையே ஸ்ரீ, ஹ்ரீ, த்ருதி, கீர்த்தி, புத்தி,லக்ஷ்மியென ஆறுதெய்வமங்கையர் தோற்றினரென்பதும் சைனநூல்வழக்கு; ஸ்ரீ-திருமகள்; இதனை, 1001, 2863-ம் கவிகளாலுமுணர்க.

184. ஐவகைத்தாயர் இன்னரென்பதை, இந்நூல், 363 - ம் கவியின் உரையாலுணர்க; இங்கே, 'தாயர்தவ்வையர்' என்றதுபோல, "தாயர்தவ்வையர்" (கம்ப. மிதிலைக்காட்சி. ருக) என்றார்கம்பரும். அடிபரவ-அடிபோற்ற; "தன்னே ரில்லா மங்கையர் செங்கைத் தளிர்மானே, யன்னே தேனே யாரமு தேயென் றடிபோற்ற" (கம்ப. மிதிலைக்காட்சி. ௩0). சலஞ்சலம், ஆயிரம் வலம்புரிச்சங்குகளாற் சூழப்படுவதோர்சங்கு; சூடாமணிநிகண்டு, ௩ - ம்தொகுதி, எ௩ - ம்செய்யுளைப்பார்க்க.

187. இளவியாக்கமென்பது, தொல்காப்பியத்தில் ஓரியலின்பெயர்; இதற்குப்பொருள், சொற்களையமைத்துக் கோடலென்பது. கோவிந்தன் - விசையையின் சகோதரன். தந்தையுந்தாயும் - விசையையின் தந்தையுந்தாயும். விசையையின்தந்தை சச்சந்தனுக்குமாமன். பெரும்பொருள், பெரும்பொருள்விளக்கமென்னும் நூலாக இருத்தல்கூடுமோவென்பது ஊகிக்கப்படும்

188. பொனங்கொடி - பொற்கொடி. செல்வி - உமை.

189. இங்கே மாசுணமகிழ்ச்சியென்றதற்கேற்ப,"நாகரிளையனரே"என்பர்பின்; 217. போகபூமியின்வரலாற்றை, இந்நூல், 2829 - ம்செய்யுள்முதலியவற்றாலுணர்க; "துணைபுணை யன்னத் தூநிறத் தூவி" (நெடுநல். கஙஉ.) என்பதும அதனுரையும், 'அன்பிலனன்ன மொத்தும்' என்பதை வலியுறுத்தும். ஆமான்-காட்டுப்பசு: அதனுடையநக்குதல், முதலில் இன்பத்தைத்தந்து பின்னர் உயிரைநீக்கும்; "ஆமாபோ னக்கி யவர்கைப் பொருள்கொண்டு" (நாலடி.பொதுமகளிர்;எ), "நாவின் புறநக்கிக் கொல்லுங் கவயமா போல்" (நீதிநெறிவிளக்கம். எரு.) என்பவற்றாலுணர்க.

191. "மாதர் தாமரைப் பூவதாக" என்றதற்கேற்ப, "நாகிளந்தாமரைவாய்" என்பர் பின்னும்; 218.

193. அறுசுவையாவன - கைப்பு, புளிப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, கார்ப்பு, இனிப்பென்பன. ஆறுகாலமாவன - கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனிலென்பன.

194. ஏலம்-மயிர்ச்சாந்து.

195. பூஞ்சிகை-பூவையணிந்த மயிர்முடி.

196. இடி-இடிக்கப்படும்மா. நூழிற்கொடி - பிணங்கியகொடி.

197. கப்புரம் - கர்ப்பூரமென்னும் வடமொழிச்சிதைவு; பச்சைக்கருப்பூரம்.

198. கழிகண்ணோட்டம் - அளவிறந்த உவகை; சஙஉ - ம்திருக்குறளின் விசேடவுரையில், 'அளவிறந்தவுவகையாவது, கழிகண்ணோட்டம்' என்பர்,

பரிமேலழகர்; பதிற்றுப்பத்து, உஉ-ம் செய்யுளாலும் இது விளங்கும்.

199 ஒழுக-நீள. அங்கமாகியவுருவணிகள் - நாட்டுவளம், நகரவளம், கோயிற்சிறப்பு முதலியன. சீவகன் முற்பிறப்பில் அன்னப்பார்ப்பைப் பிரித்தவரலாற்றை இந்நூல், 2851 - ம் கவிமுதலியவற்றாலும் சீவகன்சரித்திரச்சுருக்கத்தாலும் அறிந்துகொள்க. குரவர் - தாய்தந்தையர்.

200. கட்டியங்காரன் - காஷ்டாங்காரகன். வெளிறு - அறிவின்மை. தோட்டி - அங்குசம், நீவுதல் - நீக்குதல்.

201. அரிஞ்சயன் மிகப் புகழ்பெற்றவனென்பதை, இந்நூல், 1412-ம் கவியின் விசேடவுரையாலுமுணர்க.

203. பரிதிமார்பு: காஞ்சிப்புராணம், விநாயகர்காப்பு, ௪.

204. வலம்புரி - சங்கரேகை; "சங்க லேகையுஞ் சக்கர லேகையு, மங்கை யுள்ளன" (சூளா. குமார. ௪௫) என்பதனாலுணர்க. மதவலி-அரசன். உலம் - உருண்டகல்.

205. மனக்கின்னா - பொறாமை.

206. உலகியலாற்கூறல் - பொதுவாகக்கூறல்; 245 - ம் கவியுரையைப் பார்க்க.

207. திலோத்தமை-தேவகணிகைகளுள் ஒருத்தி; நான்குமுகமென்றது, இயற்கையாயுள்ள ஒருமுகத்தையன்றி வேறு நான்குமுகங்களை. அந்நான்குமுகமுண்டானகதை வருமாறு:— பிரமதேவர், முன்னொருகாலத்தில் காமமிகுதியால் தேவலோகஞ்சென்று ஆண்டுள்ள தேவமகளிரை அடைதற்கு முயன்று, தம்மை அவர்கள் மதியாமைகண்டு, அவர்களை எளிதிற்பெற்று அனுபவித்தற்குஉரிய இந்திரபதவியையடையவேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டு மீண்டுவந்து ஓரிடத்திலிருந்து மூன்றரைக்கோடிவருடம் குரூரமான தவஞ்செய்தார்; அதனையறிந்து, நமது பதவிக்குக் கேடுவருமோவென்று கவலையுற்ற இந்திரன், தேவகுருவின்பால் முறையிட்டு அவர் கட்டளையால் இவருடைய தவத்தை யழித்தற்காகத் திலோத்தமையை உண்டுபண்ணியனுப்ப, அவள்வந்து முன்னின்று, வேட்கையை விளைவித்தற்குரிய ஆடல்பாடல்களைச்செய்தனள்; உடனே இவர் விழித்துப்பார்க்கத்தொடங்குகையில், அவள் வலப்புறத்தே சென்று அவற்றைச்செய்தனள்; இவர் திரும்பிப்பார்த்தாற் கூடவிருக்கும் முனிவர்கள் பழிப்பார்களேயென்று நினைத்துத் தாம்புரிந்துவந்த தவங்களுள் ஒருகோடிவருடத்தவத்தால் அத்தப்பக்கத்தே ஒருமுகத்தை யுண்டாக்கிக்கொண்டுபார்க்க, அவள் பின்புறத்தேசென்று அவற்றைச்செய்ய, இவர் மற்றொருகோடி வருடத்தவத்தால் அந்தப்பக்கத்தும் ஒருமுகத்தை உண்டாக்கிக்கொண்டுபார்க்க, உடனே அவள் இடப்பக்கத்தேசென்று அவற்றைச்செய்தனள்; இவர் வேறொருகோடி வருடத்தவத்தால் அந்தப்பக்கத்தும் ஒருமுகத்தையுண்டாக்கிக்கொண்டு பார்க்க, அவள் உடனே ஆகாயத்தேசென்று அவ்வாடல்பாடல்களைச்செய்ய இவர் எஞ்சிய அரைக்கோடிவருடத்தவத்தால் மேலேயும், ஒருமுகத்தையுண்டாக்கிக்கொண்டு பார்த்தபொழுது அவள்மறைந்துபோயினள். அப்பால் இவர் காமபரவசராகி ஆகாயவழியேசெல்லும் தெய்வமங்கையர் பலரையும்வலிந்திழுத்துத் துன்புறுத்துவாராயினர்; அதையறிந்த தேவர்களுடைய வேண்டுகோளால்வந்த சதாசிவமூர்த்தி, இவர் அந்தீச்செய்கையை நிகழ்த்தாதிருத்தற்பொருட்டு இவருடைய மேற்றலையைக் கிள்ளியெறிய, அப்பால் இவர் எல்லாராலும் அவமதித்துப்பழிக்கப்பட்டுத் தம்பதவியையுமிழந்தாரென்பது, தர்மபரீக்ஷையென்னும் ஜைனநூலில் மூன்றாம்படலத்திற்கூறப்பட்டிருக்கிறது.

208. கங்காதேவியை மணந்தது ˚ந்து ஊடிய உமாதேவியை மகிழ்

வித்தற்பொருட்டுச் சிவபெருமான் உமாதேவியார்க்குத் தமது திருமேனியிற் பாதியைக் கொடுத்தருளினரென்று ஷை தருமபரீக்ஷை தெரிவிக்கின்றது.

209. பால்நிறவண்ணன்-பலராமர். தொழுனை - யமுனையாறு. குருந்து - குருந்தமரம். கண்ணபிரான் குருந்தொசித்தகதை: — ஒருநாள் யமுனையாற்றிலே நீர்விளையாடிக்கொண்டிருந்த கோவியருடைய துகில்களையெல்லாம விளையாட்டுநிமித்தம கவர்ந்துகொண்டு கரையிலுள்ள குருந்தமரத்திலேறிநின்ற கண்ணபிரான், தம்முடையமுன்னோராகிய பலராமர் அங்குவருதலையறிந்து, தமதுசெய்கையை அவர்காணின் தமக்குமிக்கபழியுண்டாகுமென்றுநினைந்து அக்குருந்தமரத்தைமுறித்து யமுனையாற்றில்வீழச்செய்து தாம்கவர்ந்ததுகில்களை நீரினின்ற அக்கோவியர் எளிதிற்பெறும் வண்ணம்செய்ததன்றித் தாமும்நீங்கி வேறிடம்சென்றாரென்று வைணவர்கூறுவர்; 'ஓசித்தது' என்பதற்கு ஒளித்துக்கொண்டதென்றும் அவர்களில் ஒருசாரார் பொருள்கூறுவதுண்டு.

210. புத்தன் இச்செய்கையால் பழித்தப்பட்டதை, புத்தவாதச்சருக்கத்தில், "இரிவே தனைகளுந் தீரா துமக்குள வாதலன்றே, கரிவே தனையவர் காமுறு காமங் கடிந்ததுதான்" என்னும் ௪௫-ம்செய்யுளாலும், [கரி-பெட்டைக்கழுதை] 'மூன்றுவேதனைகளும் நுமக்கு உண்மையினன்றே பெட்டைக்கழுதையைப்பெறாது வேதனைப்படுகின்ற கழுதைகளோடு சங்கமிப்பீராயினது' என்னும் அதனுரையாலும், ஷை நூல், மொக்கலவாதச்சருக்கத்துள்ள, "கல்லாது நீயுங் கழுதைக்கருள் செய்தியென்றாள்" (௧௪௦) என்பதனாலும் தெளிக.

211. பஞ்சவர் - பாண்டவர்கள்.

213. உருத்திரதத்தன்கூறிய யாக்கைநிலையாமை, 212 - ம்செய்யுளிலுள்ள, 'அவலம்' என்பது.

214. உட்கோள் - எண்ணம்.

215. தேவரது - பிரமன்முதலிய தேவரது.

216. திருவின் உலையா அமிர்து.

217. தெய்வஉத்தி - திருமகள்வடிவாகச்செய்யப்பட்டதோராபரணம்; "தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின்வைத்து" (திருமு. ௨௩.).

218. பிள்ளையாரவதரிக்க - பிள்ளைதங்க. சீவகனைப் பிள்ளையாரென்று சிற்சிலஇடத்து வழங்குவர்.

219. துவர்-சிவப்பு. கனாமூன்றும் கடையாமத்திற்காணப்பட்டனவாதலாற் கடிதிற்பயக்குமாறாயினவென்றார்; இதனை, "படைத்தமுற் சாமத் தொராண்டிற் பலிக்கும் பகரிரண்டாய்க், கிடைத்தபிற் சாமத்திற் றிங்களெட் டாவதிற் கிட்டுமென்ப, ரிடைப்பட்ட சாமத்து மூன்றினிற் றிங்களொன் மூன்றென்பராற், கடைப்பட்ட சாமத்து நாட்பத்தி லேபலன் கைப்பெற்றதே" (௨) என்னுங் கனாநூற் செய்யுளாலுணர்க.

220. விண்-தேவர். அறவாழி-தருமசக்கரம். "நாளந்திகோறின்று கண்கழீஇத் தெய்வத்தைத், தானறியு மாற்றாற் றொழுதெழுக" (ஆசார. ௧௦) என்பதை இச்செய்யுள் தழுவிவந்தது; இந்நூல், 1943-ம்செய்யுளும் இதுவும் ஒத்திருத்தல்காண்க. "கண்கழூஉச்செய்து" என்பதை இடக்கரடக்கலென்பர்; கற்புடையமங்கையர், தெய்வத்தைத்தொழுதற்கு உரியரல்லராயினும் கணவனுடையகுலதெய்வத்தை அவனுணர்த்தவுணர்ந்து வணங்கலாமென்பது விதி.

222. தேவர் நோக்கத்தானுகர்வரென்பது, இந்நூல், 352-ம்செய்யுளிலும் கூறப்பெற்றுள்ளது.

223. முளை - அசோகங்கன்று.

224. பார் - பெருமை.

228. பண்ணுணா - உபசாரவார்த

229. அகில் - அகிற்புகை.

230. பழுக்கக்கேட்டு - முற்றக்கேட்டு.

231. வயா - கருப்பந்தங்கியபின் வருத்தமுற்று நுகரப்படும்பொருள் கண்மேற்செல்லும்வேட்கை.

232. 'அறிவெனுமமைச்சன்சொன்னான்' என்பதற்குத தன்னைப்பாதுகாத்தற்குரிய ஓரறிவு சச்சந்தனுக்கு உண்டாயிற்றென்பதுபொருள்; அஃது உண்டானதற்குக்காரணம், விசயையின்கனுக்காட்சியைக்கேட்டதே.

233. பொறி, நல்வினைக்கும் யந்திரத்திற்கும்பெயர் - ஒருபொறிசெய்விக்கவேண்டுமென்று சச்சந்தன் நிச்சயித்துக்கொண்டான்.

234. தமநூல் - தம்முடையகுலத்துக்குரியசிற்பநூல்; அவை, மயமதமுதலியன.

237. வெய்யோன்-விரும்பியவன்.

238. பாடலின் - ஒருஸ்தானத்திலிருந்து மற்றொருஸ்தானத்திற்குச்சென்று அங்கே ஆலாபனஞ்செய்யப்பட்டு அதிலிருந்து மற்றொருஸ்தானத்திற்கு மெல்லச்செல்லும் இசைப்பாட்டைப்போலே; 730-ம்பாடலின் உரையைப்பார்க்க.

239. பண் - பண்ணையுடையயாழ் நரம்பு. போழ்ந்து - பிளந்து.

240. பயனில்லாதகூறுகளைக் கோதென்றல்மரபு; சக்கை; "கோதென்று கொள்ளாதாங் கூற்று" (நாலடி. பழ. ௬)

242. அழுங்க - அழிய; (புறநா. ௬அ.) காழ்த்தமை-வயிரம்பற்றினமை.

244. பெண் நின் இன்பம்.

245. உலகியலாற்கூறல் - பொதுவாகக்கூறல்.

247. மருளி - மயங்கி.

249. பால்வரை தெய்வம் - இன்பதுன்பத்திற்குக் காரணமாகிய நல்வினைதீவினைகளை வகுக்குந்தெய்வம். உவமைகூறுமிடத்துக்கூறல் - "பகல் வெல்லுங்கூகையை" (திருக். ௬௮௧) என்றாற்போல்வன.

250. 2344 - ம்கவியுரையைப்பார்க்க. செற்றம் - தணியாக்கோபம்.

251. வாலிது-தூயது. ஞமன்-யமன். ஆற்றல்-நடத்துதல்.

252. குழற்சிகை - ஒருவகைமயிர் முடி. புறந்தரல்-வெளிப்படுத்தல். இடும்பை-துன்பம்.

253. வரையாயவன்-மணம்புரியாதவன். கைக்கிளை-ஒருதலைக்காமம். இராக்கதம்-வலிந்துகொள்ளுதல். தப்புதலாயது, இங்கே மணஞ்செய்யாமை.

256. குவளை - செங்குவளை. பொன்னொளியர்த்தென்பது, "பொன்னொளவாங்கேபுரப்போரார்" (திருக். ௬அஎ) என்றதைத்தழுவியது.

257. முன்னிலைப்புறமொழி-முன்னேநிற்பாரைநோக்கப் பிறரைக்கூறுமாறுபோலக் கூறுதல்; இங்கே, 'கருணையாற் குழைகின்ற கைகள், வானமர் நீந்தும் போழ்தின் வழுவழுத்தொழியும்' என்றது அது.

261. கருவுற்றிருக்கும் விசயையையும் கொல்லநினைத்தமையின், 'குலத்தொடுங் கோறலெண்ணி' என்றார்; மேலே, "குலத்தொடு முடிக்கக்கோன்" என்பர்; 477.

264. போற்றி - பாதுகாத்தருளுக; வணங்குந்தோறுங்கூறினமையின், போற்றி, பலவாயிற்று; சிலப்பதிகாரம், வழக்குரைகாதை, ௬௰-வது அடி முதலியவற்றின் அரும்பதவுரையைப் பார்க்க.

265. இராசதம் - இரசோகுணசம்பந்தம்.

266. புலிப்பொறிப்போர்வை, "புலித்தோற்கவசம் பூம்பொறிசிதைய" (புறநா. ௧௩) என்பதனாலும் அறியத் [illegible] இகழுதல். வாகனங்களிலேறுதலும், கவசம்பூணுதல் மரபென்றென்பர்.

267. விசையை வயிற்றிலடித்துக் கொண்டமையின், 'திருமகள் கவலுஞ் செய்தாள்' என்றார்.

268. மல் அலைத்து. தலைப்பிரியாதன - நீங்காதவை.

269. "தீது நன்றும் பிறர்தர வாரா, நோதலுந் தணிதலு மவற்றோரன்ன, சாதலும் புதுவ தன்றே" (புற

கா. ௧௯௨) என்பது இங்கே அறியற்பாலது.

270. உறை - இலக்கக்குறிப்புக்களுள் ஒன்று; தானியங்களை அளக்குங்கால், ஐந்துகலத்தானியம் அளக்கப்பட்டவுடன் அவற்றை ஒன்றென்று எண்ணி, தானியத்திலிருந்து எடுத்து வைக்கும் ஒருபிடிக்குப்பெயராக வழங்கப்படுகின்றது; இதனை, "உறையிடத்தேய்ந்திடு மிவ்வந்தி வானத் துடுக்குலமே" என்பதனாலும் உணர்க; (திருவேங்கடத்தந்தாதி, ௯௭)

271. வண்டுமொய்த்தாற்றும்பிண்டி=957. "பாடல்வண்டாற்றும்பிண்டி"

273. அநந்தசுகம் - எண்குணங்களுள் ஒன்று. ஓம்ணமோ அரஹந்தாணமென்பது, பஞ்சநமஸ்காரமந்திரங்களுளொன்று. இம்மந்திரம் வழுத்துவோராலுங்கொள்ளக் கூறப்படுவதுமுண்டு; "மொழிப்பொருட் டெய்வம் வழித்துணை யாக" (சிலப். நாடுகாண். ௧௦௦)

274. வண்ணம் - சந்தம். நெருப்பிலிருந்து நீருண்டாயிற்றென்பர். மடங்கற்றீ - ஊழித்தீ.

275. குழைமுகப்புரிசை - மகளிர் காக்குமதில்; அந்தப்புரம்; "அரசருரிமையி லாடவ ரணுகார்" (மணி. ௨௩. ௬௫) என்பதனாலுமுணர்க. செண்டுவெளி - யானைச்செண்டு என்னும் விளையாடலைச்செய்யும் வெளியிடம்; குதிரைச்செண்டென்றும் ஒருவிளையாட்டுண்டு; கம்பராமாயணம், நகரப்படலம், ௬௮-ம்பாடலாலுணர்க.

279. வென்மிடைந்தவேலி - வேற்படைவீரரின்சூழ்ச்சி. வாள்வலை - வாள்வீரரின்சூழ்ச்சி.

281. கதிர்வட்டம் - சூரியமண்டலம். மிகை - மீதூர்ந்தநடை.

286. குன்றம் - கிரௌஞ்சகிரி.

288. வெம்படைகள்வீழவிமையாமையை, "விழித்தகண் வேல்கொண்டெறிய வழித்திமைப்பின், ஒட்டன்றோ வன்க ணவர்க்கு" (திருக். ௭௭ என்பதனாலுணர்க.

289. முகநோக்கிவீழ்தல் வீரக்குறிப்பு; இந்நூல், 2322-ம்கவியின் விசேடவுரை இங்கே அறிதற்பாலது. பிள்ளையார் - சீவகன். இங்கே, 'நிலமா மகடன் வெம்முலை நெருமுங்க' என்றது போல, 609 - ம்கவியில், "மண்ணக மடந்தையாக மார்புற முயங்கி நின்ற, வண்ணல்" என்றார்.

290. இக்ஷ்வாகுகுலம், ஹரிகுலம், குருகுலம், நாதகுலம், உக்கிரகுலமென்னுங்குலங்கள் ஐந்தனுள், குருகுலத்

ன் சச்சந்தன. இந்நூல், 2324-ம்செய்யுளும் அதனுரையும் இதன் இறுதியடிக்கு இன்றியமையாதன.

291. சுக்கிலத்தியானம் - பரிசுத்தமானதியானம்; அது பிரமத்வவிதர்க்கவிசாரம், ஏகத்வவிதர்க்கவிசாரம், சூக்ஷமக்கிரியாப்பிரதிபாதி, வ்யுபரதக்கிரியாநிவிர்த்தியென நான்குவகைப்படும்; இதன் இலக்கணத்தை, அருமபதவுரையாலுணர்க; ௩௭௮ - ம் திருக்குறளுரையிற் பரிமேலழகர் இப்பெயரை எழுதியிருக்கின்றார். போர்செய்தற்குச்சென்ற சச்சந்தன் சிறிதுநேரம்போர்செய்து ஜீவஹிம்ஸையாகிய பாவத்துக்கஞ்சிச் சும்மாவிருந்து வைராக்கியம்வந்து உதவ அப்பாற்செய்த பாவனைவிசேடத்தால், மேலுலகம்பெற்றானென்று வடநூல்கள் கூறும்.

292. அநுகரணம் - ஒன்றைப்போலே ஒலித்தல்செய்வது. அகப்பரிவாரம் - அகச்சுற்றம்.

293. அரங்கி - அழுந்தி; தைத்து.

294. நூறு - பற்பல.

296. அணல் - கீழ்வாய்.

297. பூமகளென்றது, செல்வத்தை; பூமகளிலம்பகமென்னும் இலம்பகப்பெயராலுமறியற்பாலது.

298. எருத்து - பிடர். வளிமுகச்சுடரின் - காற்றின்முன்னுள்ள தீபம்போல.

302. அன்புமிகுதியால், மூர்ச்சை முந்துமென்பதை, 389 - ம்கவியுரையாலுமுணர்க. மகன்றில்.

வைகளுளொருசாதி; 1250-ம்பாடலைப்பார்க்க.

305. இங்கே,'குரிசிறந்தபுதல்வன்' என்றதுபோல, "உரவோன்சிறுவன்" என்பர்மேலும்; 353.

306. பாலக்கிரகாரிட்டம் - பாலர்களைப்பிடித்துவருத்தும் பேய்களாலுண்டாகுந்தீங்கு. தனிசு-கடன். கோட்டம்-சிறைவைத்தற்குரிய அறை.

308. கணிகள்-சோதிடர்கள்.

310. தூங்கிருள் - செறிந்த இருள்; 321 - ம் பாடலினுரையைப்பார்க்க. உசாவுதல் -

311, புறந்தந்து-பாதுகாத்து. 'சீயும், அடிகளருளியபேரறமும்' என்று சைனர் பொருள்கூறுவர்.

312. அகங்கை புறங்கையாளுற்போலென்றது விளைவுகுறித்துநின்றது. கடுமை-விரைவு. கண்ணீர், சிலேடையுமாம்.

314. தெய்வம் - யக்ஷிதேவதை; யக்ஷர், வியந்தரலோகவாஸிகள் எண்மருள் ஒருவகையார்.

316. பூ-தாமரைமலர். முருகக்கடவுள் தாமரையிற்பிறந்தமை கந்தபுராணத்தாலறியப்படும்.

317. 'நன்மணி யீன்று முந்நீர்ச் சலஞ்சலம் புகுவ தொத்தாள்' என்று இங்கேகூறியதுபோலவே, "வலம்புரி யுலகம் விற்கு மாமணி யீன்ற தென்ன, விலங்கிழை சிறுவன் றன்னைப் பயந்து" என்பர்பின்னும்; 386.

318. அறிந்து-சச்சந்தனுடையமகனென்றறிந்து.

320 கந்துக்கடன் சக்கரவர்த்தி வணிகனென்று வடநூல்களிற் கூறப்படுவன்.

323. 'சீவ' என்பதற்குச் சீவித்திரு என்றுபொருள். தும்மியவுடன், ஜீவ, நூறும்புக்க என்றல்மரபு. ஜீவ, நந்த, வர்த்தஸ்வ என்று ஆசிகூறல் சைனமுனிவர்களுடைய வழக்கமென்பர். இப்பிள்ளைக்குச் சீவகனென்றுபெயர்வந்ததற்குக்காரணம் இதுவே.

324. றுன், கண்ணடை பாலைதயில் வ

325. பொன்றுடம்பு-தேவசரீரம்; தேவருயிர் பொன்றுயிரெனப்படும்.

326. சிறைகோடல் - கட்டியங்காரன் சிறைகொள்ளல்.

329. இக்கவியாற் கந்துக்கடனுடையவீட்டிற் சென்றமை கோற்சவம் கொண்டாடப்பட்டமைகூறப்பட்டது.

337. தாபதப்பள்ளி - தவஞ்செய்வோருறையுமிடம்.

340. சிலம்பி - சிலம்பிநூல்.

341. செருக்கு-செழுமை; "செருக்கற்ற பஞ்சிமலர்" என்பர்பின்; 2339.

344. மஞ்சு - வெண்மேகம்.

349. தகரம்-ஒருவகைவாசனைமரம். தாது வூதாமையின் - தாதுக்களை உண்ணுமையால், வூதல் - உண்ணல்; (கலி. கூ - ம்பாடல்பார்க்க.)

352. இரண்டன்மருங்கின்-இரண்டாம்வேற்றுமைக்கண்.

353. கற்சேருய் நுண்கலிங்கம் - காஷாயவஸ்திரம்; இது கல்லாடையெனவும்வழங்கும்.

354. கார்தட்டுவெப்பு - கார்தட்பூவி

355. குளசெல்லை நீவாரமென்பர் வடநூலார்; இது குளச்செந்நெலெனவுங்கூறப்படும். அல்லி-அல்லியரிசி; இஃது அல்லிப்பூவின் உட்கொட்டையிலுள்ளது. ஆம்பலல்லி - இருபெயரொட்டு. அணில் - அணிற்பிள்ளை.

356. மாது: "மாதுகுமயிலினல்லார்" என்பர்பின்; 463.

357. வம்மெனை-வாருமென்று; "வம்மெனக்கூஉய்" (பொருந. சுoக)

359. ஆனியம் - நாள்.

360. கட்டழலெவ்வம் - இளைமெரிதோய்வன்ன இன்னு.

362. 'புண்ணியன்' என்பதற்கு இங்கே எழுதியபொருளையத்தைப் பார்க்கையில், "போரார் புரங்கள் புரள நூறும் புண்ணியனே" என்பது ஞாபகத்திவ்வருகின்றது; (திருவா.

திருவாரூர், திருமணிமாலை. க0). கண்ணன்சரிதம், உஉ-ம் தீர்த்தங்கரராகிய நேமீசுவரர் புராணத்துள்ளது.

363. ஆட்டுவாள் - பாராட்டுபவள்; ஊட்டுவாள் - உண்பிப்பவள்; ஓலுறுத்துவாள் - தாலாட்டுபவள்; நொடிபயிற்றுவாள் - வார்த்தைகற்பிப்பவள்; கைத்தாய் - கையிலேந்திவளர்க்குந் தாய்.

364. ஒழிந்தோரென்றது, ஐஞ்ஞூற்றுநால்வரை. வாலசிகிற்சை - குழந்தைகளுக்குவரும் அரிஷ்டத்தினீக்கத்தைக் கூறுவதோர்நூலென்பர். தெய்வப்பகை - வாலக்கிரகங்களாகியபகை.

365. சௌளம் - குடுமிவைத்தல்; சூடாகர்மம்.

366. போதி-ஞானம்; அநுப்பிரேக்ஷை பன்னிரண்டனுள் ஒன்றற்குப் போதிதுர்லபமென்று பெயருண்மையாலுமுணர்க. ஆதிக்காலம் - அறுவகைக்காலத்துள், நன்னற்காலமென்று கூறப்படும். அந்தணன் - பிரமதேவர். இயல்பான அறிவு - இயறகையறிவு. ரிஷபர், ஆதிதீர்த்தங்கரரென்றுங் கூறப்படுவர். பரதராசசக்கரவர்த்தியின் வரலாற்றை, 32-ம் கவிக்குறிப்பாலுணர்க.

369. "குறுணியொவ்வொன்ற தாகக் கொள்கலம் பிரப்ப தாமே" என்பது, சூடாமணிநிகண்டு; "சில்பலிச் செய்து பல்பிரப் பிரீஇ" என்பது, திருமுருகாற்றுப்படை, உ௩௪. செல்வி - நாமகள். நாமகளைச் செல்வியென்றார், "செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வம்" எனவும், "கேடில் விழுச்செல்வங் கல்வி" எனவுங் கூறப்படுங் கல்விச்செல்வத்தைக் கொடுப்பவளாதலின்; (திருக்.௪கக, ௪00); (நாலடி. அறிவின்மை, க-பார்க்க.)

372. கலையின்பகுதிகளை, 2107-ம் கவியின் விசேடவுரையாலுணர்க. இற்பரத்தையர்-ஒருவனுக்கே உரிமை பூண்டவர்; காமக்கிழத்தியர். சேரிப்பரத்தையர்-ஒருவனுக்கு உரிமைபூணுமல் யாரையும் விரும்புவோர், இவர், வரைவின்மகளிரென்றும், காதற்பரத்தையரென்றுங் கூறப்படுவர்.

374. பரிதியங்கடவுளன்னகோன்-அருகன்; "வெம்புஞ் சுடரிற் சுடருந் திருமூர்த்தி" (2) என்றும் வருதல் காண்க. பவ்வியஜீவன் - முத்தியில்விருப்பமுள்ள ஆன்மா; பக்குவமுள்ள ஆன்மா. நன்ஞானமாவது - பொருள்களின் தன்மைகளை உள்ளவாறே உணர்தல்; "பொருணின்ற பெற்றியைப் பொய்யின் றுணர்தல், மருளறு நன்ஞான மாண்பு" (அருங்கல. ௫௭); நற்காட்சியாவது-ஐயமின்மை, அவாவின்மை, உவர்ப்பின்மை, மயக்கமின்மை, அறப்பழிநீக்கல், அழிந்தாரைத்தாங்கல், அறத்துக்கு அளவளவு, அறத்தை விளக்கலென்னும் எட்டுறுப்பினையுடையது; "எட்டுவகையுறுப்பிற் றாகி யியன்றது, கட்டிய நற்காட்சி காண்" (௸ க௫). நல்லொழுக்கம், அணுவிரதம், மஹாவிரதமென இருவகைப்படும்; இவற்றுள், முன்னையது இல்லறத்தார்க்கும் ஏனையது துறவறத்தார்க்குமுரியனவாமென்றும் ஒவ்வொன்றும் மிகப்பலவாமென்றும் கூறுவர்; இரத்தினத்திரயம், பரத்திரயமெனவும் வழங்கும்; "பரத்திர யங்கள் பணித்தபிரான்" (திருநூற். உ௪).

375. பொறியெனும் பெயரவை வாய்ப் பொங்கழ லரவு: "ஐவாயவேட்கையவா" (நாலடி. துறவு. ௯)

376. நுகர்ச்சியிலுலகம் - வீட்டுலகம்; "ஆட்சியிலுலகம்" (381), "பண்டுகண் டேயறி யாப்பொருள்" (திருநூற். உ) எனவழங்கப்படும். ஐ-சிலேட்டுமம். ஆயுக்கன்மம் - வாழ்நாளைக்

377. ஆக்கத்திற்குக்காரணமானமையின், மக்கள்யாக்கை, 'அமிர்து' எனப்பட்டது.

378. தரிசனமோகனீயப்பிரகிருதி-பார்வையைமறைப்பதாகிய கன்மம்; அவ்வ அநந்தாநுபந்திக்குரோதமுத

லியன; இப்புத்தகம் அகூஉ - ம்பக்கம் பார்க்க.

379. குழவிப்பருவமாகியகாற்று. காளைப்பருவமாகிய கதிர்.

380. கலை, சிலைவடை. பொன்னெயில்வட்டம்-சமவசரணம். இதனிலக்கணத்தை, திருநூற்றந்தாதி, கஅ - ம் பாடலாலுணர்க. பிரபுலிங்கலீலை, வசவண்ணர்கதி, கரு-ம்செய்யுளின் கற்பனை இங்கே அறிதற்பாலது. சாது-ஆசிரியன். இதன் ௩-ம்அடி, "தவமுந் தவமுடையார்க் காகும்" என்னுந் திருக்குறளைத்தழுவியது; உசஉ.

381. பூட்சி-பூணுதல். இரத்தினத்திரயங்கள், முறையே இதில் நிலைமுதலியனவாக உருவகிக்கப்பெற்றன.

382. சரணம் - ரக்ஷணை.

383. தம்பிமார்-நபுலவிபுலரும் நந்தட்டனும். தோழன்மார் - ஐந்நூற்று நால்வர். இவர்கள், சீவகனுடன் கல்வி பயின்றவர்கள்.

384. ஒற்று-ஒன்றிஒன்றி அறிவனவாகியபறவை. அசோகமரத்தின் கீழேயிட்ட பீடத்திலிருத்தல், சாரணபரமேஷ்டிகளுக்குரியவிதியென்பர்.

385. தேர்ந்து-ஆராய்ந்து; "ஆம்புடை தெரிந்து வேந்தற் கறிவெனு மமைச்சன் சொன்னான்" என்றார் முன்னும்; 232.

389. கண்ணபிரான் கன்னனுக்குப்பிறப்புணர்த்தியது, பாரதம், கண்ணன்றூதுச்சருக்கம், உகஅ-ம் பாடல் முதலியவற்றாலும் ஸ்ரீபுராணத்தில், உஉ-வதனாலும அறியலாகும்.

390. கூட்டு - பலபொருள்கூடியது.

391. நினைவு - சென்றதைத்தெறநினைதல்.

392. அவனுயிர்பருகலுற்று - அவனைக்கொல்லத்தொடங்கி; யுத்தஸந்நத்தனாய். இளம்பிராயத்திற் பகையை வெல்லத்தொடங்கினமையின், சீவகனுக்குச் சிங்கக்குட்டி உவமமாயிற்று; 364, 404-ம்பாடல்களைப்பார்க்க. பொருநராற்றுப்படையில், கங-ம் அடிமுதலியனவை இங்கே அறியற்பாலன.

393. தன்பகைகளைக்கொல்ல ஒருவன் சேறலையிலக்குறித்து அரசகுலத் திற்பிறந்தவர் அங்கவர்; 'ஒருவருடம் பொறுத்திருக்கக்கூலக்குருத்துமிழினையாக எனக்குக்கொடு' என்று ஆசிரியன் சீவகனை இரந்தானென்பர், வடநூலார். முற்பிறப்பில், அன்னக்குஞ்சைத் தாய்தன்னையயினின்றும் பிரித்தனாள், ககூ - ஆதலின், சீவகன், தாய் முதலியவர்களை, கஙூ - வருடம்பிரியும்படி நேர்ந்ததென்றுதெரிகின்றது.

394. நெருப்பிற் பழுக்கக்காய்ந்த இரும்புஉண்டநீர் அவ்விரும்புள் அடங்கியிருப்பதுபோல இரத்தினத்திரயங்கள் சீவகனிடம் அடங்கியிருந்தலையறிந்து.

395. வெள்ளிமலை - வித்தியாதரர்களுக்கு இருப்பிடமென்றுகூறப்படும் வெள்ளிமலை; அதில், தக்ஷிணசேணி, உத்தரசேணியென இரண்டுள்ளன; முதலாவதில் ரு௦ - பட்டணங்களும், உ-வதில் ௬௦-பட்டணங்களுமுள்ளனவாம்; மேருமந்தரபுராணம் பார்க்க.

396. யானைத்தீ - பஸ்மகவியாதி; இது, 'தணியாப்பசி', 'விளிவில்லெரிப்பசி' என்று மணிமேகலையிற்கூறப்படும். மாடம் ஈடு (ஈதிரன்) அகமெனப் பிரிக்க.

398. தீம்பாலமிர்தம்: "தீம்பாலடிசில்" என்பர்பின்; 928. பாத்தரும் பசும்பொன் - பகுத்துணர்தற்கரிய பசும்பொன்; "பாத்தரும் பசும்பொனின் மாடம்" என்றார்முன்னும்; 87.

399. இடைகழி - 'சேழி'; "புழைவாயிற் போகிடைகழி" (பட். கசஅ)

400. கன்னல் - சருக்கரை.

402. கன்றொல்லிருக்கிடையில், "பூமலி யசோகின்", "மூச்சக நிழற்றும்" என்னும் படையுள்வாழ்த்துக்களின் விசேடவுரைகள் இங்கே அறிதற்பாலன. கர்மங்கெட்டபின்பு அருகனுக்கு உண்டாகும் அதிசயங்களுள், சதுராநனத்துவம் ஒன்றென்பர்.

403. பொன்றக்கெட்டது-முற்றக் கெட்டது.

404. கோடு-பிறையின் இருபக்கத்துமுள்ள முனை.

405. 'தந்தையோகி' என்றான், ஞானபிதாவாதலின்.

406. மணிவண்ணன் - திருமால்.

407. கை-ஒழுக்கம். தீக்கை-தீக்ஷை; அஃது இங்கே ஞானதீக்ஷையென்று கூறப்படும்.

409. ஆசை பிறவிக்குவேரென்பதை, "அவாவென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றுந், தவாஅப் பிறப்பீனும் வித்து" (திருக். ௩௬௧.) என்பதனாலுமுணர்க. ஆரியநந்தி - சீவகனுடைய ஆசிரியன். வீரன் - ஸ்ரீவர்த்தமானர்; "வீரன்பிண்டியே" என்பர் பின்; 3012. சமவசரணம், அவருடையதாள் நிழலாகக்கூறப்படும்; "அறிவனடிக்கீழ்" (27) என்பதனாலுமுணர்க. அதிசயமாகை - கண்ணிற்குத் தோற்றமற்போதல். கொள்கை - தவம்.

410. நம்பன்-நமக்குச்சிறந்தவன்; சீவகன். நாகம்-பவணலோகம். வெம்புதல் - விரும்புதல்; "வெம்புஞ் சுடர்சுடருந் திருமூர்த்தி", 2.

411. சீவகன் வீணையில் மிக்க பயிற்சியுள்ளவனென்பதை, "வீணைக்கிழவன்" (28), "வீணைவித்தகன்" (1002), "வீணைவேந்து" (2598) என்பனவற்றாலுணர்க. வீற்றுத்தெய்வம்-அழகைத்தருவதொருதெய்வம். வீரமகள்-வீரலக்ஷ்மி. மாதங்கி-ஸங்கீதத்தின் அதிதேவதை.

413. தேசிகம்-ஒருவகைவண்டின்சாதி. முல்லை, கார்காலத்திற்குரியது. கன்று உள்ளி.

415. ஆயுள் - அப்பொழுது. புள்-ஈண்டு ஆந்தை; 450-ம்கவியுரையைப் பார்க்க.

416-7. நிமித்திகன்-சகுனம்சொல்லுபவன்.

418. மூசுதல் மொய்த்தல். ஆகோட்பறை - பசுக்களைக்கொள்வோர் அதற்கு ...யாக அடிக்கும் வாத்தியம். முருகக்கடவுள், குறிஞ்சிநிலத்திற்குத் தெய்வம்.

419. கோங்கமலர்கள், பொன்னிறமுடையவை. ஆதீண்டு குற்றி - தினவைப் போக்கிக் கொள்ளுதற் பொருட்டுப் பசுக்கள் உரிஞ்சிக்கொள்ளுதற்கு நாட்டப்பட்டுள்ள கட்டை.

420. பிள்ளை - கரிக்குருவி. முள்குதல் - முயங்குதல், "செவ்வாய் பயந்த தேன் பருகிமுள்குஞ், சிலைவலாய்" (687), "கண்ணின் னெழுதி முள்கு மொய்ம்பன்" (1413), "முள்கப் பூம் பட் டழித்து" (1986) என்பவற்றாலுணர்க. புதுமணவாளப்பிள்ளைகள்போருக்குச் செல்லுதல் மரபன்றென்பர்.

422. நவியம் - கோடாரி. உழலை-தடைமரம். பள்ளி - இங்கே இடைச்சேரி; "பள்ளி யாகுல மாக", 426.

423. மத்தம் - மத்து. புளி - புள்ளி.

424. பிணங்க - பின்னிக்கொள்ள.

425. 'எம்மனைமார்' என்றது, கன்றுகளை நோக்கி; அண்மை விளி.

426. ஆய் - இடைச்சாதி; வேடு - வேட்டுவச்சாதி; 446 - ம் பாடலாலுமுணர்க.

427. 'இறையணிசேட்க' என்றதனால், வாயிலோனுக்குச்சொன்னமை பெறப்பட்டது.

428. பித்தை - தலைமயிர்.

429. அரசர் கையிற் செங்கழுநீர்ப் பூவைப்பிடித்திருத்தல் மரபு.

430. பூசல் - பெரும்போர்.

431. மிலேச்சர்கள் வாயில் காப்பதுண்டென்று பழைய நூல்களால் தெரிகின்றது. நிகழ்ந்தசெய்திகூறிய வாயிலோனைக்கோபித்தல் இராஜதர்மமன்றென்பர்.

432. மீட்க என.

433. உலா-பவனி. பரிசை - கேடகம்.

434. 'முன்' என்றது, 5-ம் கவியின் உரையை. துத்தரிக்கொம்பு - ஒருவகை ஊதுகொம்பு; "கொம்பு துத்தரி கொட்டு முறைமையன்" (கம்ப. கங்கை. ௩௦)

435. உரையிலுள்ள, 'வீட்டிறோர்' என்பது, அடுத்தசெய்யுளிலுள்ளது.

436. கோள் - கொலை.

437. குஞ்சிபிச்சம்: "கோலக் குஞ்சி நிழற்குளிர் பிச்சமும்" (2170.) சிறறுணுக்கன் - ஒருவகைவிருது; இது மிகவும் அருகிற்பிடித்தற்குரியது. பிச்சம் - பீலிக்குடை. இக்கவியின்பொருளோடு, 450 - ங்கவிப்பொருள் ஒற்றுமையுடையது.

438. இடையர்க்கு முல்லைமாலை உரித்து.

441. வெதிர் - மூங்கில்.

444. கொண்மூ=கொண்மூ - மேகம்; "கொண்மூ மாடங்கள்" (திருவால. ௩௨ - ௧௩) கலி-முழக்கம்.

445. இழுது - நெய். புள்மொழிந்தான்-நிமித்தங்கூறியவன்.

446. நீரினிடத்தில் முதலைமிக்க வலியுடையதென்பதை, ௪௯௫-ம் திருக்குறளானுணர்க. 'ஓடிப்போங்கோள்' என்பது, 'ஓடிப்போங்கள்' என்பதன் மரூஉ; தொல்காப்பியம், வினையியல், உ௯-ம் சூத்திரத்திற்குக் கல்லாடரெழுதிய விசேடவுரையாலும் இது துணியப்படும். நாற்றெட்டுத்திருப்பதியந்தாதி, ௯௮:—"புறப்பற்றுத், தன்றுங் கோறூரரவிற் றுமோ தரன்பள்ளி, கொள்ளுங்கோ றூர்மருவுங் கோள்" என்பதனாலும் அறிக, இங்ஙனம் பின்வரும் சொற்களையும், இப்படியே அமைத்துக்கொள்க.

447. கொக்கரிப்பு - கர்ச்சிப்பு. சீழ்க்கையை, 120 - ம் கவிக்குறிப்பாலுணர்க.

448. தேர்சுற்றுதல், சக்கரகதியெனப்படும்.

450. புறுத்தலையென்பது, குறிப்பால் புறுவின்தலைபோலும் சிறியதலையென்னும் பொருளைத்தந்தது; இப்ப[illegible] ...யை, "முனித்தலை" என்பர் பின்னும்; 2541. இதன்வழி [illegible] ...ம் வாயங்களையும் பெரும்பாலும் பெற்று வந்ததுமாகிய சிந்தாமணிமாலையென்பதில், இங்கேகூறியவேடன், "புறுத்தலைவேடன்" என்றே கூறப்பட்டுள்ளான்.

451. மணிநிறம்-கரியநிறம். கோல்-அம்பு.

453. 'பொங்குழு' என்பதில், குழு, பலவென்னும்பொருள் பயப்பது.

454. பாம்பின்வாய்ப்பட்டமதியத்தைத் திருமால் சிறைவிடுத்தமை, "தேம்பல்லிளந் திங்கள் சிறைவிடுத்தைவாய்ப், பாம்பின்னணைப் பள்ளிகொண் டாய்பாஞ்சோதீ" (பெரிய திருமொழி, ௧௧-ப. அ-தி. மாற்றமுள. எ.) என்பதனாலும் அறியப்படுகின்றது. 'மேல்' என்றது, கார்தருவதத்தையாரிலம்பகத்தை. அரசர்-கட்டியங்காரன்கட்டளையால் அழுக்காறுற்றுப்போர்செய்தற்குவந்தவர்கள். பொன்றூற் பண்ணைவளருவமாக்கியது முதலியவற்றை, இந்நூல் 820-ம்பாடல் முதலியவற்றானுணர்க.

455. அற்றம்-அறுதல். கோவன்-இடையன்; பசுக்களைக்காப்பவன். காறூற்றுலர்தான்-கட்டியங்காரன்.

456. விராடபுரத்திலிருந்தபொழுது அருச்சுனன்நிரைமீட்டமை இங்கே அறியற்பாலது.

457. விடலை, ௧௬ - பிராயத்திற்கு மேல், ௩௦-வரையுங்கூறப்படும் ஆண்பாற்பருவப்பெயர்; பன்னிருபாட்டியல், உ௩௨-ம் சூத்திரம்பார்க்க.

458. சில்அரி-சிலவரிகளையபருக்கை.

460. நாகருலகம்-பவணலோகம்.

462. அத்தவாளம்-மேற்போர்வை.

464. பயம் - பிரயோசனம்.

466. காட்டி-காட்டுக; வியங்கோள், மணி=மணு - மாணிக்கம்.

469. தொடி, வளையல்களுக்குக் காவலாக இடப்படுவது.

470. மகளிர்க்குரிய குணம் நான்கனுள்ளே, நாண் முதலாவது.

471. வார்க்கு-வார்த்து; தேரினைவழிபடுதல் மரபு; கம்பராமாயணம், தேரேறுபடலம், உ௪-ம் பாடலைப்பார்க்க.

476. 'கோவிழுக்குற்ற றூன்று'

என்றது, சச்சந்தனுடையமரணகாலத்தைக் குறித்துநின்றது. மால்வழி - சச்சந்தனுடை யசந்தது.

477. தொறு - இடைச்சாதி.

479. 'இலக்கணப் பாவையேழுங் கொடுத்தனன்' என்பர் பின்னும்; 490.

480. ஊறு - ஸ்பர்சம். மேம் = மேவும் - விரும்பும்.

481. அடிச்சி - அடியாள்.

482. நப்பின்னை - நப்பின்னைப் பிராட்டியார்; இவர், கண்ணனுடைய தேவியார்களுள் ஒருவர்; இவரை நீளாதேவியின் கூறென்பர்; இப்பெயர், பின்னையெனவும் வழங்கும். நச்செள்ளை - காக்கைபாடினியார் நச்செள்ளையார்; இவர், தமிழ்ப்புலமைவாய்ந்த பெண்பாலார்; பதிற்றுப்பத்தில், ௬-ம் பத்துப்பாடியவர் இவரே; இப்பெயர், செள்ளையாரெனவும் செள்ளையெனவும் வழங்கும். நப்பாலத்தன், நக்கீரனென்பன, சங்கப்புலவரிருவர் பெயர்.

484. பதுமுகன் வணிகர்குலத்திற் பிறந்தவன்; 1791-ம்பாடலானுணர்க; குட்டி, மகளிர்க்குறித்தது, (624).

487. ஆழை - அகப்பை.

489. ஏறங்கோள் - ஏறுகோட்பறை; இப்பறை முல்லைத்திணைக்குரியது. சாறு - விழா.

493. சங்கம் - திரளவு; சூடாமணி நிகண்டு, ௧௨ - ம்தொகுதி, ௧௯ - ம் பாடலைப்பார்க்க.

494. பூண் - ஆபரணம். அசும்பு - ஊற்று; "அசும்புபொன்", (533) என்பர். குளிர்தல் - தங்குதல்; "குளிருமரப்பலகை", "குளிர்சாகரதத்தனென்பான்" எனப் பின்னும்வரும்; 1782, 1973.

495. இம்மியரிசி - மத்தங்காய்ப் புல்லரிசி; அது, மிகவும் சிறியது; "இம்மி யரிசித் துணையானும்" (நாலடி. ஈகை, ௮)

499. தார்கெழிய - மாலைபொருந்திய.

501. கப்பல் களிறுபோல ஓடுதலை, 2793-ம் பாடலானுணர்க.

503. துப்புரவு - நுகர்தற்குரிய பொருள்.

506. துளை - இரண்டுநாழிகைப்பொழுது.

515. ஞாழல் - புலிநகக்கொன்றை.

519. மதவலி - மிக்கவலியையுடையான்.

குடங்கை - உள்ளங்கை.

532. சந்திரமண்டலம் சூரியமண்டலத்திற்குக்கீழேயுள்ளதென்பது சோதிடநூலாருடையகொள்கை.

535. தானவர் - வித்தியாதரர்; "சாமமார்ந் திலங்கு மேனித் தானவ னொருவன்", "விச்சா தரவேந்தன்" (மேரு. சஞ்சயந்தர். ௬, ௭)

537. மாடியமென்பதற்குத் தலைச்சீராவென்று பொருள்கூறுவர், சைனர்.

546. வேதண்டம் - வெள்ளிமலை.

547. அரசமுல்லை - அரசனுடைய இயல்பின்மிகுதி; காவன்முல்லை - அரசன் உலகத்தைக்காத்தலின் மிகுதி, [பு - வெ. வாகை. ௧௭, ௨௪]; இவ்விரண்டுக்கும் அறிகுறியாக முல்லைமாலைசூடுதல் மரபு.

549. காந்தருவதத்தை பளிக்குமாடத்திருத்தல்: 594.

555. விடைத்தல் - வேறுபடுத்தல்.

558. கைச்சுரிகை - கைக்கத்தி; கட்டிலினுடையமேற்கால்களில் உட்டுளையமைத்து அவற்றிற் கத்தியைச் செருகிவைத்திருத்தல் மரபு. இது பெரும்பாலும் அரசர்க்குரியவழக்கம்.

561. பிச்சம் - பீலிக்குடை.

565. உறுதிச்சுற்றங்களுள் ஒன்றாதலின், படையைச் சுற்றமென்றார்.

567. குதிரை, தன்வேகத்தால் அம்பை விலக்கல்: 701.

568. பாறு - பருந்து.

579. 'துன்பமுற்றவர்க்கலாலின்பமில்லை' என்பதை, நால்வர்நான்மணிமாலை, ௩௪-ம்செய்யுளும் இனிது புலப்படுத்தும்.

580. அம்பி - கப்பல். கடைப்படுதல் - முற்றுப்பெறல்.

583. கதிய=கதுவிய - பற்றிய.

585. இதன் இரண்டாமடிமுதலிய வற்றை, 593 - ஞ்செய்யுள் ஒத்துள் ளது.

588. நீலமணியின் நன்மை பாலால் ஆராய்ந்துகொள்ளப்படுமென்பது, 1325 - ஞ்செய்யுளாலும் விளங்குகின்

589. இதன் ௩-ம் அடியின் கருத்து, நைடதம், அன்னத்தைத்தூதுவிட்ட படலத்தின் முதற்செய்யுளின் முதற் பாகத்திற்காணப்

590. வான் நக்கவிடம்.

591. பட்டினொடுபைஞ்சுதுகில்: (திரு விளை. திருநகர. ௬௩). சைனர் இரவி லுண்ணாராதலின், 'வல்சி' என்பதற் குப் பகற்சோறென்று இங்கே பொருள் கூறினர்; 1939-ம்பாடலாலும் இது விளங்கும்.

598.
பொருள், நைடதம், நகரப்படலம், ?-ம்
மாளிகையின்மேற்பாகத்துள்ள ஒருறு ப்பு; "தொடுகுடுமி நாசிதொறுந் தொ டுத்தகொடி" (பெரிய. திருஞான. ௯௨)

600. சோதிடர்=ஜ்யோதிஷ்கர்- சந்திரன், சூரியன், கிரகங்கள், நக்ஷத் திரங்கள், தாரகைகள்; அகக-ம்பக்கத் துக் கீழ்க்குறிப்பைப்பார்க்க. கற்பம்- கல்பலோகம்.

601. வியம் - ஏவல்.

603. கோடணை - முழக்கம்; என் றது, யாழ்வாசித்தலை.

604. தலைப்பட்டு - எதிர்ப்பட்டு.

606. அல்லி - பூவின் உள்ளிதழ்.

611. வட்டு - விளையாட்டிற்குரிய ஒருவகையுருண்டை; "வல்லா ருடைய மணிவட் டேய்ப்ப" என்பர்பின்னும்; 983; (திருக். ௪0௧; நற். ௩)

614. பிறந்தநாளில் மங்கலமாகிய ... மரபாதலின், 'வெ ள்ளணியணிந்தநான்று' என்பது, பிற ந்தநாளைப் புலப்படுத்திநின்றது; இத னை அகப்பொருளிலக்கணத்தாலுமு ணர்க; வெள்ளணியணிந்தோரை, "மங் கலவணியினர்" என்றோர் முன்னும்; 603.

615. பாவாற்றி - நெய்வோர்க்குரிய ஒருகருவி.

616. ஒருவியர் - பிரிந்தோர்; இத் தனையும்பெயர்விகற்பம் சைனநூல் களிற் பரக்கக்காணலாம்.

621. பசுங்கதிர்க்கடவுள் - சந்தி ரன்; யோகம் - நாள்; நாளே யோக மென்றல் சைனநூன்மரபு.

622. இங்கே வெள்ளிவேத்திரத் தின் பூம்பொருக்கைத்தழைப்பு குவ ளைப்பூவின் அகவிதழ்த்தடிப்பினைவு பூசப்பெற்றதென்றதுபோலப் பின்பு, சந்தனக்குழம்பு தாமரையிதழ்த்தடிப் பினைவு பூசப்பெற்றதென்பர்; 2423.

623. தமாலிலை - தமாலிகாதிர வியமெனவழங்கும்.

626. சான்று - சாக்ஷி.

632. பனிச்சை - இருவகைமயிர்க் கட்டு; 'ஆறை' என்பதற்குச் சல்லட மென்று பொருள்கூறுவர், சைனரில் ஒருசாரார்.

633. சொய்ம்மை - விரைவு.

634. பிளிச்ச, 'பிளாச்ச' என இக் காலத்து வழங்குகின்றது.

647 அவைப் பரிசாரத்தை விரயப் பிரசாரமென்றும் பொறப்தவமென் றுங்கூறுவர், வடநூலார்.

654. இடை: (திருச்சிற். ௩.)

658. சிரத்தை விலையாகக்கூறு வர், இசைநூலார்; சிலப்பதிகாரம், அரங்கேற்றுகாதை, ௨௯-ம் அடியில், "மிடறும்" என்பதனுரையைப்பார்க்க.

665. அறுபகல் கழிந்தபின்னை: "அறுபகல் கழிந்தபின்றுன்" 1917.

667. கல்லேயுந்தீச்சியதை, 690-ம் பாடலாலுணர்க.

672 - 5. இவற்றின்விசேடவுரையி லுள்ளவை, சிலப்பதிகாரம், அரங்கே ற்றுகாதையின் உரையால்விளங்கும்.

674. 'அரங்கன்' என்பதற்கு அரு பியாகிய சித்தனென்றும் பொருள் கூறுவதுண்டென்பர், சைனர்.

678. 'ஒருதாய்க்கு ஒருபிள்ளை' என்பது ஒருபழமொழி.

712. கரும்பெருத்திலுள்ள தீந்தேன்: "அரைபுரை கரும்பி னணிமடற் றொடுத்த, நிறைபுரை தீந்தே னெய்த் தொடை முதிர்வை" (பெருங்கதை, மருதநிலங்கடந்தது, கஎக - எ)

727. சித்தர் - இருடிகள்.

737. 'குன்று' என்றது, முன்கவியிலுள்ளதனை.

739. இக்கவியின்பொருளை, 1327-ம்கவியிலும் காணலாகும்.

741. இக்கவிமுதலியவற்றின்பொருள்நயம், நாடகம், போர்புரிபடலத்தின் முதற்செய்யுள்முதலியவற்றிற்காணப்படும்.

754. 'கழுமினார்க்கு', 'கெழுவினார்க்கு' என்றும்பாடம்.

758. ஒன்பதுசுவைகளுள், ஒன்று அதிகரித்தபொழுது மற்றொன்று கெடுமாதலின், இங்கே, 'வீரத்தாற்காமங்கெட்டது' என்றார்; இப்படியே ஒன்று மற்றொன்றைக்கெடுத்ததாகக் கூறுவர், கம்பரும்; (கம்ப. பாசப். உந).

778. பொற்றகடுகளைத் தம்வாயுள் இட்டுக்கொண்டு தலைவனைவாழ்த்துதல்முதலியவற்றை, 'லோகாபிஸாரம்' என்பர் வடநூலார். பாடுகுறித்து - இறத்தல்குறித்து; 2303-ம்பாடலைப்பார்க்க.

779. இயமரம்-ஒருவகைவாத்தியம்.

790. தம்முடம்பில் வேல்குழாத்தைக்கப்பெற்றுத் தோன்றும்வீரர்க்கு ஆர்கள்மட்டும் வைக்கப்பெற்ற தேர்க்குறட்டை உவமைகூறியதுபோல, "அடல்வன் போர்த்தையி னிற்குமோர்க்கே" (புறநா. உகஎ) எனவும், "எய் போற் கிடந்தா னென்னேறு" (பு-வெ. வாகை.உஉ) எனவும் பெரியோர் ஏற்ற உவமைகள் கூறியிருத்தல்கா

814. "சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடையா, னூக்க மழிந்து விடும்" (திருக். சகஅ) என்பதன்சொல்லும்பொருளும் இதில் அமைந்துள்ளன.

820. இங்ஙனம் பரிகாரம்செய்தல், ஸ்ராவகாசாரநூல்விதியென்பர்.

821. பாதபீடம் - பாதோதகம். வலம்புரி - வலம்புரிவடிவமாக உலோகத்தாற்செய்யப்பெற்ற ஒருபாத்திரம்; சங்கமென்றென்பர்; "ஆழியந்துன்னடிவாரப் புனல்" (திருக்கலம்பகம், கூ)

833. விரற்சரடு - விரற்புட்டில்; விரற்கவசம்.

834. பலாசு - புரசமரம். சுக்கிரன்க மனத்தில் விவாஹம்செய்யலாகாதென்பது விதி.

836. மந்திரம் - மந்திரங்கள்.

852. சேடர் - கூடினமகளிரை நாயகரோடுசேர்க்கும் ஆற்றலுடையவர்; இது, பிரதாபருத்திரீயத்திலுள்ளதென்பர்.

857. "பெருமையுஞ்சிறுமையும்" (தொல். உவம. கo-ம் சூ. ந.) என்பதனுரையிற் காட்டப்பெற்றுள்ள, "வள்ளத்தி னீர்கொண்டுமிழ்க்க ......சாந்து மறுகிற்பார், தள்ளல்யானையெல்லா மடிவழுக்கினவே" என்பதும் இச்செய்யுளின்கருத்தும் ஒத்துள்ளன.

862. சீலமென்பதன்பொருளை, "சீலக் கஞ்சிகற் போதகஞ் செல்வன" (2392) என்பது வலியுறுத்தும்.

869. மாத்தொடு-மாமரத்துடனே.

872. இது, "கயம்புக் கன்ன, பயம்படு தண்ணிழல்" (மலை. சுஎ) என்பது அமையப்பெற்றுள்ளது.

876. ஏறட்டுக்கொண்டு - சுமந்துகொண்டு.

878. வென்றான் - பிரகிருதியின் ஒருவகையாகிய கார்த்திகன்மங்களைவென்றவன்; இங்கே அருகன்.

879. சூதாட்டத்தை ஜயமென்பது வடமொழிவழக்காதலின், 'சூது' என்பதற்குப்பொருள் வெற்றியென்றனர்.

880. இட்டிடை - சிற்றிடை: "ஆகாறளவிட்டி தாயினும்" (திருக். சஎஅ).

888. இதிலுள்ள, 'வாரம் பட்டுநிற்றியவு நலலவாம்' என்பதை, "நெறிகெட வாரம்பட்டு நீதிமன் சொல்ல" (திருவால. தின.—௯௫) என்பது தழுவிவந்தது.

892. வண்டும் தேனும் ஒருகுணைத்தனவென்பதை, "என்றனை தேனினமிரங்கு வண்டொடு, சென்றன" (3034) என்பதனுலுமுணர்க.

911. பொன்னிலேபிறத்தல், ஹிரணியகர்ப்பமெனப்படும்; அஃதாவது பொன்னாற்செய்யப்பெற்ற பசுவின் வாயினுள்ளே ஒருவன்புகுந்து பின்பு வெளிப்பட்டு, அப்பொன்னை யெல்லாம் தானஞ்செய்துவிடுதல். இஃது அரசர்க்குரியவிதி; இது, தானஹேமாத்திரியென்னும் வடநூலிற் கூறப்பெற்றுள்ளதென்பர்.

912. நேமியென்பவர், உஉ-ம் தீர்த்தங்கரர்; இதனால், இராசமாபுரத்தில் நேமிதீர்த்தங்கரருக்குக் கோயிலிருந்ததென்று தெரிகின்றது.

924. பரிகரிக்கின்ற - காக்கின்ற; இச்சொல், 'பரிக்கிரகிக்கின்ற' என்பதோவென்று கருதப்படுகின்றது.

928. அக்காரடலே - அக்காரவடிசில்; "நூறுதடாவில் நிறைந்த வக்காரவடிசில்சொன்னேன்" (நாய்ச்சியார்திருமொழி, ௯. சிந்தூர. ௬). அக்காரை - ஒருவகைச்சிற்றுண்டி; அஃது உக்காரையென இக்காலத்து வழங்கும்.

930. காரன்னமுண்மையை, "யவனர், ஓதிம விளக்கு" (பெரும்பா. ௩௧௬ - எ) என்பதனாலுமுணர்க.

933. பஞ்சநமஸ்காரமந்திரத்தை, 14-ம் செய்யுளின் குறிப்பாலுணர்க.

939. திம்பூ - ஒருவகைமரம்; 1267 - ம் பாடலைப்பார்க்க.

942. தருமத்தை விடைவடிவமுடையதென்பர்.

947. இங்கே பாவத்தை நீனிறவினையென்றதுபோல, "கருவினை" என்பர் பின்னும்; 951.

948. பாமாகமம் - இங்கே ஜிநாகமம்; உயிர்போமக்கதிப்பலவகை; ஸித்தருடைய உயிர்போமக்கதி, அவிச்சிரகதி; அதற்குஸமயம், க; ஸம்ஸாரஜீவனுடைய உயிர்போமக்கதி விச்சிரகதி; அது மூன்றுவகைப்படும்; அவற்றுள், முதலாவது பாணிமுக்தாகதி; அஃது (ட) இதுபோல் ஒருவளைவுடையது; அதற்குஸமயம், உ; இது, தேவருக்கும் மனிதருக்கு முரியது; இரண்டாவது லாங்கலிகாகதி; அஃது, (ப) இதுபோல் இரண்டுவளைவுடையது; அதற்கு ஸமயம், ங; அது விலங்குகளுக்குரியது; மூன்றாவது கோமூத்ரிகாகதி; அது, மூன்றுவளைவுடையது; அதற்கு ஸமயம், ச; அது நரகருக்குரியது; இது, தத்துவார்த்த ஸூத்ரமென்னும் நூலிற்கூறப்பட்டுள்ளதென்பர்.

949. பரிகாரம் - சூழ்ந்திருப்பது.

951. தேவர் வானவில்லைப்போல் தோற்றுவர்: "அமரனாயமர்நதைறயுங்கா, விந்திரவில் லெனவெளிப்பட்டு" (சூளா. துறவு. உ௦௯)

952. நரகருயிரை இரும்புயிரென்றும் தேவருயிரைப் பொன்னுயிரென்றுங்கூறுவர்; 3107-ம் பாடல் முதலியவற்றைப்பார்க்க.

954. தேவர்க்கும் நரகர்க்குமுள்ள சரீரம் வைக்ரீகசரீரம்; அதற்குத்தடையும் ஆயுதச்சேதமுமில்லை; இமையாமை, நிழலின்மை, மாலைவாடாமை, கால்நிலந்தோயாமை உண்டென்றும், மனிதர்க்கும் விலங்குகளுக்குமுள்ளசரீரம் ஔதாரிகசரீரமென்றும் அவற்றிற்கு ஆயுதச்சேதமுதலியன உண்டென்றும் சொல்லுவர்.

956. வென்றவர் - பிரகிருதிகளாகிய காதி, அகாதியென்னும் இருவகைக்கன்மங்களையும்வென்ற ஸித்தர்; 962-ம்பாடலைப்பார்க்க; "என்வினையுமகற்றியின்பக் கடலாக்கித், தருமால்" (961) என்பதனாலுமுணர்க. ஸித்தபரமேஷ்டிகள் - ஸித்தர்.

957. பிண்டிப்பகவன் - அருகன்.

958. கோளுடைக்கிழமை - ஞாயிறுமுதலியவை; எழுகோளுக்கும் அவற்றிற்குரிய பக்கநிலைமையுண்டென்பர்; கிழமையெனப்படுவன்பொருளே அதனை நன்குபுலப்படுத்தும்.

960. நாய் தேவரானமை: "தேவனு நாயாருந் தீக்காட்சியாளும், தேவனு நற்காட்சியால்" (அருங்கல. ௩௮)

961. எண்ணியினை, ருதாருவையணிய முதலியன. திருமால் இரணியனைக் கொன்றமை, அகளங்காஷ்டகத்தில் வந்துள்ளதென்பர்.

962. சாரித்திராம்-நல்லொழுக்கம்.

966. உவறுநீர்-உவர்நீர்: "உவறுநீருயரெக்கர்" (கலி. ௧௩௩)

980. இறைஞ்சல் - குனிதல்.

983. யானையோடுபொருது அதனை அடக்கிய வீரச்செயன்முறை, இப்படியே, சிலப்பதிகாரம், அடைக்கலக் காதை, ௬௮ - ம் அடிமுதலியவற்றிற் காணலாகும்.

984. கஞ்சனுக்குப் பிரியமானதெய்வம் ஏழு; அவை பூதனை, கழுதை, குதிரை, மருதமரம், பனை, யானை, சகடமென்று கூறப்படும்; கண்ணபிரானைக் கொல்லவந்தது, யானையாகிய தெய்வம்; அந்தயானையைக்கொல்லாமல் விட்டு விட்டமையின், கண்ணபிரான், கரிவராதனாயினனென்பர்; இச்சரிதம், ஸ்ரீ புராணத்தில், 22 - ம் தீர்த்தங்கரர் புராணத்துள்ளது.

985. இக்கவியின்பின், "ஆடவர்க் கூட" என்றுமுதலையுடையபாடலொன்று மிக்கபிழையுடன் பிரதிகளிற்காணப்படுகின்றது.

990. நியாயங்களுள், கதம்பகோரக நியாயமென, ஒன்றுண்டு; அது, கடம்பின் அரும்புகளின் சேர்க்கையாலுண்டாயது போலும்; இந் நியாயம், கதம்பமுகுளநியாயமெனவும் வழங்கும்.

995. கற்பவர், இலக்கத்திற் படைக்கலத்தையெய்து கற்றல்: "இளம்பல் கோசர் விளங்குபடை கன்மார், இகலினர் எறிந்த அகலிலை முருக்கு", (புறநா. ௧௬௯)

999. காலவேல்: "காலன் வடிவாய வேலான்" (நள. கலிதொடர். ௧௦௫)

1001. 'சயம் - பத்மை, மஹாபத்மையென்னுங்கயங்கள்' என்றும பிரதிபேதமுண்டு.

1009. "மரபேதானும்" (தொல். செய். ௮௦.) என்பதனுரையில், இதன் முதலிரண்டடியை எடுத்துக் காட்டி, இதிற் கூறிய கோலமும் அணியும் இக்காலத்திற்கு ஆகாவாயின வென்றார், நச்சினார்க்கினியர்.

1011. இப்படியே மயிர்முடிக்குக் குயிலின்முகத்தை உவமைகூறினர், பிரபுலிங்கலீலையுடையார்; (பிரபுதேவர் வந்தகதி, ௭.).

1015. ஆடையுடன்பிறத்தலும் மயிர் பிறந்தகாலத்திலிருந்தபடியே யிருத்தலும் இயக்கர்க்கு இயல்பென்பர.

1016. கழுநீருரும்பு, நீர்க்கீழரும்பென்றும் வழங்கப்பெறும்: (திருமு. ௨௯.)

1017. இதில், 'பாவியேற், காவியொன்றியவுடம்பு' என்பது, "காகத்திரு கண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவ, ராகத்து ளோருயிர் கண்டனம்" (திருச்சிற். ௭௧) என்பதன்கருத்தைக் கொண்டுள்ளது.

1021. சுவாகதம்: (திருவிளை. இரதவாதம். ௧௫.)

1027. உயிரைக்காத்தவருத்தமென்றது, சீவகன் யானையை அடக்கியதை.

1031. இக்கவியை, 1042-ம் செய்யுளின் முற்பகுதி ஒத்திருக்கின்றது.

1035. என்பிள்ளையென்றது, கிளியை.

1047. பரியம் - பரிசம்.

1049. 'அடிச்சேருப் பாவதல்லால்' என்றும்பாடம். 'கொண்டுய்யப்போமின்' என்றது, 981 - ம் கவியிலுள்ளது.

1066. ஆளத்தி = ஆலப்தி - ஆலாபனம். இதன் இலக்கணத்தை, சிலப்பதிகாரம், ௮௫-ம் பக்கத்திற்காண்க.

1079. வாசினை - வாசித்தல்.

1087. சிவபெருமான் திரிபுரதகனஞ்செய்தது கதாகோசமென்னும் புத்தகத்திற் கூறப்பெற்றுள்ளதென்பர். வெள்ளிவிலங்கு, காலிற்கிடந்த கதை: — தன்னுடையமுற்பிறப்பில், ஒருமுனிவர் அன்னப்பறவை வடிவங்கொண்டிருந்தபொழுது அவர்காலைத் தாமரைநூலாற் கட்டியபாவத்தால், மகததேசத்தரசன்குமாரனாகிய இராசவாகனனென்பவன், மாளவதேசத்தரசனுடையகுமாரியாகிய அவந்திசுந்தரியென்பவளோடு சேர்ந்திருக்கையில் வெள்ளிவிலங்கைப் பூண்டானென்பது. கந்தியார் - ஓர் ஆரியாங்கனை. இவர் தமிழ்ப்புலமை வாய்ந்தவர்; இப்பெயர் ஆரியாங்கனைகளுக்குப் பொதுப்பெயராகவும்வழங்கும்.

1095. இல்லுறைதெய்வம் - வீட்டுத்தெய்வம்.

1097. பிறப்பிறப்பு: (திருக். ௩௩௧)

1098. நல்லிளம்படியார்: (சூளா. துறவு. 213.)

1099. முற்றில்:(கம்ப. நாட்டு. ௨௩; திருவேங்கடத்தந்தாதி, ௧௭.)

1107. வட்டிகைப்பலகை-சித்திரமெழுதும்பலகை; வர்த்திகை - எழுதுகோல்.

1116. 'சிலம்பி நூலாற் சிமிழ்ப்புண்ட சிங்க மொத்தான்' என்றது, "மானிட மடங்கல் பைம்பொற், றளதா மரைநுண் ணூலிற் சிமிழ்ப்புண்ட தன்மைத் தன்றே" (கூர்ம. கண்ணன்மணம். ௧௩௩) என்பதில் ஒருவகையாக அமைந்திருக்கின்றது.

1125. நவபுண்ணியக்கிரமம் இன்னதென்பதை, 2828-ம் கவியுரையாலுணர்க. பறவைதாதுண்டவண்ணம் பட்டினிப்பசிதீர்த்தலை, மாதுகரவிருத்தியென்பர்; மதுகரம் - வண்டு.

1136. 'முளைத்தண்டு' என்றும் பாடபேதமுண்டு.

1139. புத்திசேனன் - சச்சந்தனுடைய ஆசிரியன்பிள்ளை.

1156. படிவம் - வடிவம்.

1162. நடைவிளக்கெரித்தல் - தலையில்விளக்குவைத்து நடக்கச்செய்தல்.

1190. தாபதர் - தவமுடையோர்.

1191. மாத்தவ-பாபமாத்துமுடைய.

1213. சிலாவட்டம் - வட்டப்பாறை.

1221. சாறு - அருகனுக்குச்செய்யும் விழா.

1229. கூந்தலை எரிமைகூறுவது ஒருவகைமரபு; இந்நூல், ௨௦௭-ம் பாடலையும், புறநானூறு, ௩௩௩-ம் பாடலையும் பார்க்க.

1230. 'வெறுவாய்க்கிலைகெட்டவன்' என்பது, ஒரு பழமொழி.

1231. தழை - உடைவிசேடம்.

1232. இக்கா: (கந்த. வள்ளி. ௩௫)

1240. காதி - காதிகர்மங்கள்; அவை தரிசனுவரணீயமுதல் நால்வகைப்படும்; ஆன்மகுணத்தைக்கெடுத்தலால், இஃது இப்பெயர்பெற்றதென்பர்; 2713-ம் பாடலைப்பார்க்க. இத்தக்கர்மங்களைவென்றவன், அருகன்.

1242. காட்சி, தரிசனமெனவும்வழங்கும். பகை யாப்பு.

1243. உலகம் நித்தியமென்பது தம்கொள்கையாதலின், மன்னுவுலகம் என்பதற்கு நிலையாதலையுடைய சுவர்க்கமென்று பொருள்கூறுவர், ஜைனர். பொன்னெறிநூல் - சமயசாதனம். வினை - அஷ்டகர்மம்.

1246. அங்கம் முதலியன, ஜைனாகமங்கள். இவற்றின்விரிவை இப்புத்தகம், ௮௬-ம்பக்கத்தால் அறிக.

1247. தீர்த்தம் - ஜைனாகமம். இங்கேசாரணனென்றது, மேற்கூறிய ஆலயத்திற்குவந்திருந்த ஸஞ்சாரணராகிய முனிவனையென்பர்.

1248. விஷ்ணுவின்க்ருஹம், விண்ணகரமெனவும் இராஜக்ருகம், இராஜகரமெனவும் ஆனதுபோல, ஜினக்ருஹம் ஜினகரமென்றாயிற்றுப்போலும்.

1252. கரியபிள்ளை, கொடி - காக்கை. காக்கைவலமாதல் நல்லசகுனம்.

1257. வட்டனை - வர்த்தனை.

1260. 'பதிவிரதையைக்கெடுக்கப் பதினைந்துபொன்' என்பது ஒருபழமொழி.

1268. "எயிறிறுந் தகையவோ ......மலை" என்பர், பின்; 1331.

1268 - 1269. தாம்வளர்த்த முல்லைக்கொடி முதலின் அரும்பியபொழுது, மகளிர் அதற்கு விழாச்செய்தல் மரபு; நைடதம், நாட்டுப்படலம், அ-ம் செய்யுளைப்பார்க்க.

1283. இறை - இரேகையையுடையகை; "இறைக்குவளையும்" (பழமலையந்தாதி. உ.)

1287. சித்தராரூடம் - ஒருநூல்; 'சித்தராரூடச்சிந்து' என்ற விஷவைத்தியநூல் ஒன்று தமிழில் இக்காலத்தில் வழங்குகின்றது.

1299. மரவடி - பாதக்குறடு.

1302. இச்செய்யுளின்பொருள், கந்தபுராணம், வில்வலன் வாதாவி வதைப்படலம், உ௯-ம் செய்யுள்முதலியவற்றில் ஒருவாறு அமைந்திருத்தல்காண்க.

1311. பிணித்தற்பொருளில் பிணைத்தல், பிணர்த்தலிரண்டும் வழங்குகின்றன.

1353. இக்கவி, "காணு மரபினை துயிரெனமொழிவோர், நாணிலர் மன்ற பொய்ம்மொழிந் தனரே, யாஅங் காண்டுமெம் மரும்பெற லுயிரே, சொல்லு மாடு மென்மெல வியலுங், கணைக்கா ணுணுகிய நுசுப்பின், மழைக்கண் மாதர் பணைப்பெருந் தோட்டே" (இல. வி. சஙகஉ, சூ. உதா) என்னும் பழைய செய்யுளின் பொருளைப்

1417. நனை - தேன்.

1418. அசோகமரம், மனிதர்கட்டிய மாலையால் அலங்கரிக்கப்படுமென்பர்.

1419. உண்டு - ஒருவகையாகவுண்டு; ஸ்யாதஸ்தி. இல்லை - ஒருவகையாகஇல்லை; ஸ்யாந்நாஸ்தி.

1420. எண்வினை - காதிகர்மம் ச, அகாதிகர்மம் ச.

1426. தொடர்ப்பாடு: (திருக். ருசுகூ.)

1429. உறியிற்கிடந்து தவஞ்செய்வோர், உறித்தாபதரென வழங்கப்படுவர்.

1436. இதன்பொருளே, இந்நூல், 2845-ம் கவியிலும் வந்துள்ளது; அருங்கலச்செப்பு, உ-ம் பாடல்முதலியனவும், மேருமந்தரபுராணம், முதலாவது சருக்கத்துள்ள, "உரைத்தவிப்பொருளின்" என்னும்பாடலும் இரத்தி

1440. இக்கவி சிலபிரதிகளிற் காணப்படவில்லை.

1459. 'நமோ அரஹந்தாணம்' என்றதை மந்திரத்தியானமென்பர்.

1494. கடலளவாகிய ஆயுளையுடையவராதலின், தேவர்கள், 'சாதலும் பிறப்பு மில்லாத் தன்மைபெற்றவர்கள்' என்று கூறப்பட்டார்; உபசாரம்.

1526. இகக்வியும் இதன்பொருளும் மிக இன்புறற்பாலன.

1544. 'மனைவியுமற் மக்க, ளொவ்வாதார் தாமில்லை யொப்பாரே நால்வரென வுரைத்தான் சான்றோன்' என்றும்பாடம்.

1547. "உவாவட் டமியின்க ணுல் லைகை யூணு, மவாவறுத்தல் போத்தமெனல்" (அருங்கல. ககஞ); 'உவவு' என்பதற்குச் சதுர்த்தசியென்று பொருள்கூறி, சதுர்த்தசியிலும் அஷ்டமியிலும்பட்டினியிருத்தலின்பயன்கள், முறையே, சுச - வதாகிய அயோகிகுணஸ்தானத்தை அடைதலும் எண்வினைகளைக் கெடுத்தலுமென்று சொல்லுவர்.

1548. அதிதரவஸ்தை, அருகந்தாவஸ்தையென்றும் வழங்கும்.

1561. கைத்தளம் - ஒருவகைக்கேடகம்; 1606-ம் கவியுரையைப் பார்க்க; "அதள்புனை யரணம்" (சில. ஊர்காண். கஎo) என்பதற்கு த் தோற்கைத்தளமென்று பொருளெழுதியிருக்கின்றனர். அது தேன்கூட்டிற்கு

வெண்பாவாலுணர்க. சிவசம்போதனை, ஆறுவது, உலோகாதிகாரம், ௬௨ "இப்பர் கவிப்பர் பெருங்குடி வாணிகம்பன், ஒறுப்புடைய பூவ ருனைக் குங்காற் - றப்பின், மிதியடியே றூனை மிசை நோக்கினர்கள் காணே, நிதியுடைய ராவர் நிலத்து." ; இஃது எதிர் நிரனிறை.

1787. 'அடிகள்' என்பது பெண்பாலிற்கும்வருதலை, இந்நூல், 1792, 1884, 1909 - ம் கவிகளாலுமுணர்க.

1818. இன்னநாளிற்பிறந்த இன்ம

1836. புலிமுகப்பு - அரண்மனைவாயில்; "உஞ்சேனைதன், புலிமுகவாயில்", "கொடிப்புலிமுகத்துவாயிற்கோட்டை" (உதயணகுமாரகாவ்யம், உஞ்சைக்காண்டம், ௭௨, ௧௦௦)

1843. தோணோக்கல், மகிழ்ச்சியின்மிகுதியைப் புலப்படுத்தும் ஒருகுறிப்பு; பல்வரிக்கூத்தினுளொன்றாகிய தோள்வீச்சென்பது தோணோக்கமெனவழங்கும்; (சிலப். ௭௧-ம் பக்கம் பார்க்க.)

1864. சீவகன் தாத்திற்குத்தக்க வண்ணம் சிறப்புச்செய்ததுபோன்ற முறை, பாகவதம், கண்ணபிரான் துவரையடைந்த அத்தியாயம், ௬௨ - ம் செய்யுளிலும், திருவிளையாடல், மணப்படலம், ௬௫ - ம் செய்யுளிலும் அமைந்திருத்தல்காண்க.

1873. காப்பென்பது, மஞ்சட்காப்பு, மாக்காப்பு, எண்ணெய்க்காப்பு, மிளகுகாப்பு என்று இக்காலத்தும் [illegible]கவழக்கிலும்வழங்கும்.

1879. 'அணிமைத்தோ பெரிதுஞ் சேய்த்தோ' என்பது, "அணித்தோ சேய்த்தோ கூறுமி னெமக்கே" (புறநா. ௧௭௩.) என்பதைத் தழுவி வந்தது.

1880. போற்றியென்பதை வியங்கோளாகவைத்து இங்கே பொருள் செய்திருத்தல் அறிதற்பாலது; 264.

1891. தேவர் - திருவள்ளுவர்.

1906. கோய் - பரணி; "கோய் வாயிற்கீழ்" (சிறுபஞ்சமூலம், ௧௭.)

1939. சைனர் பகலிலேயே உண்பவராதலின் பகலுணு இக்கவியிற் கூறப்பட்டமை கருதற்பாலது. இதனாலே தான் இந்நூல் 591-ம் கவியிலுள்ள வல்சியென்பதற்குப் பகற்சோறென்று பொருள்கூறினர்.

1982. நிலவுவெண்கதிர் நீர்மைய பூந்துகில்: (நைடதம், நகர. ௨௮).

1991. மருதயாழ்: (புறநா. ௧௪௯).

2009 - 2010: மூப்புவடிவம்: (பெரிய. தடுத்தாட்கொண்ட. ௨௯ - ௩௨; பேரூர்ப். கௌரிதவம். ௫௩-௯.)

2026. தமிழ்தழியசாயல்: "தமிழினு மினிய மென்மைய வாகி" (கூர்ம. வானவர். ௧௩.)

2037. காண - கேட்க; "பேச்சைக்கண்டு" (திருவால. ௧௬: ௨௮)

2038. இடங்கழிகாமம்: "இடங்கழி காமமொ டடங்கானாய்" (மணி. ௧௦: ௨௨.)

2043. நூறும்புருகவென்றல் மரபு.

2045. அடித்தியார் - தலைவியார். முகவியர் - ஏற்றுக்கொள்ளுவோர்.

2061. மேகலையிலழுத்தின நீலமணியின் ஒற்றைக்கதிர்போலும் உரோமாவலி:—"மேகலைமணியினொருசுடர் செல்வனின்றதுவோ.......அணிமயிரொழுங்கே" (நைடத. அன்னத்தைத்தூது. ௧௧.)

2087. அஃகம் - முறைமை; "அஃகஞ்சுருக்கேல்" (ஆத்திசூடி)

2088. 'சிறியவர் செய்தபிழை, புலம்பலர் பொறுப்ப ரன்றே பெரியவர்:'— "பொறுப்பரன் றேபெரி யோர்சிறு நாய்கடம் பொய்யினையே" (திருவாசகம், நீத்தல். ௬.)

2097. நாயனுரென்றது, கந்துக்கடனுடையதந்தையை.

2105. கங்கைக்குத்தலைப்பில், 'கங்காகூடம்' என்று ஒரு சிறுமலையுண்டென்பர்.

2106. முல்லையுங்குறிஞ்சியுஞ்சேர்

ந்த இடம் பாலையாதல், "முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து, நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப், பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்" (சிலப். காடு. ௬௪ - ௬௬.) என்பதனாலுமறியப்படும்.

2107. 'இன்கனித் தொண்டையங் துவர்வா, யரங்கக்கூத்திகள்' என்றார் முன்னும்; 1557.

2108. பீலிக்கணை குராலனா:—"கானா,........பீலித்தகைத ரப்பினிறுமன்றே"(திருவானைக்கா.திருநாட்டு.௮௪.)

2138. விலாவணை-அழுகை; பிராகிருதம்; பின்பு, அந்தப்புரவிலாவணை, கோயில்விலாவணை, நகரவிலாவணை யென வருவனவற்றாலுமறிக.

2145. இடுகொடியணிந்துமார்பர்: 2264—"கொடிமார்பினர்", 2477—"இடுகொடியகலம்", 2483— "ஆடுகொடி யணிந்தவுய ரலங்கல்வரை மார்பன்".

2167. ஏறுதி: "சோழிகவேறுதி" (மணி. 22. 205.)

2168. நிமித்தம்-புள்ளொழிந்தவை.

2177. திரிபன்றியெய்தல்:—'அசரமாவது, கொல்லேறுகோடல், திரிபன்றியெய்தல், வில்லேற்றுதல் முதலியனசெய்துகோடல்' (தொல். கள. ௧. சூ. ௩.)

2202. விரற்சாடு - விரற்கவசம்; கைச்சரடென்றும் பிரதிபேதமுண்டு.

2231. யானைக்குக்கப்பல் உவமையாக இங்கேகூறப்பட்டமை, — நோன்கயிறு" (மது. ௩௭௧) என்பது முதலியவற்றை நினைப்பிக்கின்றது.

2236. காலாசு-காற்கவசம்; "காலாசோடற்ற கழற்கால்" (களவழி. ௯).

2240. செஞ்சோற்றுக்கடன்தீங்கல் - உணவளித்தவன்பொருட்டு உயிர்போனமை: "செஞ்சோற்றுக் கடனின்றே கழியே னுயிற் றின்போன்கள் வளர்த்ததனாற் செயல்வே றுண்டோ" (பாரத. ௧௭-ம்போர். ௨௦.)

2276. கோடுபுய்க்கலாது - கொம்பைவாங்கமாட்டாமல்; "மதயானை, .........கோடுபுய்க்கல்லாதுழக்கும்" (கலி. ௩௮); "புய்ந்து கால் போழ்" (களா. ௩௧). புய்த்தலென்பது புயத்தலெனவும் வழங்குகின்றது.

2283. கள்மாயம் - கள்கட்டுவித்தை; "கண்டுங் கண்டுமெ னென்ன கள்மாயமே" (திருவாசகம், திருச்சதகம், ௪௨.)

2302. கல் - வீரக்கல்; அஃதாவது, போரில்இறந்த வீரன்பொருட்டு அவனுடைய உற்றார்முதலியோரால் அவன்பெயரும், பெருமையும் எழுதிநட்டுத் தெய்வமாகப்பாவித்து வழிபடப்பெற்ற கல். இதனை, செந்தமிழ், தொகுதி ௩-ல், ௬௪, ௮௭-ம் பக்கங்கண்முதலியவற்றால் உணர்க.

2303. பொற்கின்னம் - வெட்டப்பட்டபொற்றுகடு.

2326. வீராபிஷேகம் - பகைவரை வென்ற வீரர்க்குச்செய்யப்படும் அபிஷேகம். இது விஜயாபிஷேகமெனவும் வழங்கும்; "திருமகள் மருவிய செங்கோல் வேந்தன்" என்னும் மெய்க்கீர்த்தியில், 'திசையது கிழ வீராபிஷேகம்பண்ணி' எனவும், "திருமாதர் புவியெனும் பெருமாதர்" என்னும் மெய்க்கீர்த்தியில், 'விசயாபிஷேகஞ் செய்து' எனவும் வருதல்காண்க. இவை சிலாசாஸனத்திற்கண்டவை.

2327. 'கன்னடியன்னகடி மார்பன்' என்பதும், "ஆடியுட் பாவையன்றோன்" (தஞ்சைவாணன்கோவை, ௩௮௧) என்பதும் பொருள் நயத்தால் தம்முள் ஒத்துவிளங்குதல்காண்க.

2343-4. துன்பச்செய் திலையப் பொறுக்கும்படிகூறுதல், "எர்குழை யாமலெடுத்துலாக் கின்றான்" (224) என்பதனாலும் விளங்குகின்றது.

2353. 'எண்கொண்டுகாட்டு'என்னும் மூலமும், இதற்கு 'தேவாசுரம் இராமாயணம் மாபாரதம் என்கின்ற போர்' என்றெழுதிய உரையும், "உயிர்த்தொகை யுண்ட வொன்பதிற் றிரட்டியென், றியாண்டு மதியு நாளுங் கடிகையு, மீண்டுநீர் ஞாலங் கூட்டி

யெண்கொள" (சில. நீர்ப்படை. அ - கo) என்பதனாலும், 'தேவாசுரயுத்தம் பதினெட்டாண்டிலும் இராமராவண யுத்தம் பதினெட்டுமாதத்திலும் துரியோதன பாண்டவர்யுத்தம் பதினெட்டுநாளிலும் செங்குட்டுவனுமனகவிசயருஞ்செய்தயுத்தம் பதினெட்டு நாழிகையிலும் முடிந்தவென்று எண்ண' என்னும் அதனரும்பதவுரையாலும், "தேவாசுர ராமாயண மாபாரதமுளவென், றோவாவுரை யோயும்படியுளதப்பொரு களமே" (களம்பாடியது, க) என்னுங் கலிங்கத்துப்பரணியாலும் அழகுற்றுப் பொருட்டொடர்புபெற்று விளங்குதல்காண்க.

2355. 'விழுப்புண் - முகத்திலும் மார்பிலும்பட்டபுண்' என்பர் பரிமேலழகர்; (திருக். எஎசு). "மலர்மார்பின், வெண்வேன்முகந்தபுண் வெய்துயிர்ப்ப" என்றார், வெண்பாமாலையுடையார்; (காஞ்சி. உ). குழை - மங்கலஅணி; "இட்டபொன் றேலையின் வாசியே" (ஆனந்தலகரி, உஅ), "காதோலை பாலித்த தயவாளர்" (மதுரைக் கலம்பகம், உஅ) என்பவற்றால் துணியப்படும்.

2388. வெண்டுகில்முதலியன மங்கலஅணி; 'மங்கலவணியினர்' (603) என்பதனுரையைப்பார்க்க.

2391. அகிற்குடம்: 'தூமக்குடமாயிரமாய்' என்பர்பின்னும்; 2455.

2413. இங்கே தூயகுலத்திற்குப் பாற்கடலை உவமைகூறியதுபோல, "சங்குறைடீ தனையவெண்டாமரை மலர்த் தடங்கள் போலு, நங்குடி" என்றார் முன்னும்; 547. இங்கே, மயிர்வினைக்கல்யாணமென்றது, புருவமொதுக்குதலையென்பர்.

2417. சக்கரவாள சக்கரவர்த்திகளென்னும்பெயர், புறநானூற்றின் கஎ௫-ம்பாடலின் விசேடவுரையிலும் வந்துள்ளது.

2446. இச்செய்யுளை எடுத்துக்காட்டி, அடிமுதலியவற்றில் அலத்தகமெழுதுங்கோலம் பண்டைக்காலத்ததென்றும் பிற்காலத்துக்காகாதென்றுங்கூறினர், நச்சினார்க்கினியர்; (தொல். செய். அo - ம் சூத்திரவுரையைப் பார்க்க).

2461. இக்கவியிற்கூறிய உவமையைத்தழுவியே, முகத்தைமறைத்துக்கொண்ட இலக்கணையின்கையை சீவகன்விடுத்தானென்று பின்னர்க் கூறுவர்; 2468.

2463. பரிதி - நீளமான சமிதை. சமிதை, கஉ - அங்குலமுள்ளதாக இருத்தல்வேண்டுமென்பர்.

2491. "உளமையாடி" என்றும்பாடம்.

2496. 'பூவைநிறுத்தியிட்டு' என்பது, 'பூவுதிரத்தீட்டி' என்று சிலபிரதிகளிற்காணப்படுகின்றது.

2503 இச்செய்யுளில் மகளிர்மேனியின் நறுமணத்திற்குக்கூறியவுவமை, ஸ்ரீ காளிதாசராலுங் கூறப்பெற்றுள்ளதென்பர்.

2527 சூலம் - இடிதாங்கி.

2529. வேட்கைபிறவாப்பருவத்தாரும் வேட்கைபிறக்கின்றபருவத்தாரும் வேட்கைபிறந்தபருவத்தாருமென, இங்கேகூறியதுபோல் மகளிரை மூன்றுகூறாக்கி வழங்குவர், வடநூலார்.

2535. நுசுப்புமிடித்தார் - இடைவறுமையுற்றார்; "இடைமிடித்தார் தமை" (வெங்கைக்கோவை, ௩க)

2541. முனித்தலைக்கண்ணிநெற்றிச்சிறார்: "முனித்தலைப்புதல்வர்தந்தை" (புறநா. உ௫o)

2544. 'காதநான்ககன்ற' என்றதனால், இராசமாபுரம் நாற்காத அகலமுடையதென்பது பெறப்பட்டது; "காத நான்குங் கடுங்குர லெடுப்பி" (சில. இந்திர. க௩௩) என்பதனால், காவிரிப்பூம்பட்டினத்தின் எல்லை நாற்காதமுடையதென்பது பெறப்படுகின்றது. இவ்விரண்டையு முற்றுநோக்குமிடத்து, பெரியநகரத்தின் எல்லை நாலுகாதமாக இருத்தல்வேண்டுமென்று வெளியாதலுடன், காதம் என்ற

ராய பைந்தார்பூட்டி'' (பதிற். சஉ.) என்பதுமுதலியவற்றையும் அவற்றி னுரையையும்பார்க்க.

2708. மகளிர்க்குக்கொடுக்கப்படு ம்காணிக்கை, யௌதகமெனப்படுமெ ன்பர்.

2713. இடபதீர்த்தங்கரர் அவதரி க்குமுன்பு இவ்விடமெல்லாம் போக பூமியாகவேயிருந்தனவென்றும் அப் பாற் கருமபூமியாயினவென்றும் கூறு வதுண்டு.

2717. 'தயிர்க்குரலவேங்கை' என் பதை, ''இரும்புலிக் கிரிந்த கருங்கட் செந் நாகு, நாட்டயிர் கடைகுரல் கேட்டொறும் வெரூஉம்'' (தொல். அகத்திணை. சக, சூ. ந. உதா) என்ற தனுல்தெளிக.

2718. மரச்செவி:— ''தோளாமர ச்செவித் தூரா வயிற்றுச் சுமடர்'' திருநூற். கo)

2726. ''வாணுர் நுதலார் வலைப் பட் டடியேன் பலவின் கனியீந் தது போல் வதன்முன், ஆணுேடு பெண் ணு முருவாகி நின்ற யடியே னுயப் போவதொர் சூழல்சொல்லே'' (சுந்தர. திருநெல்வாயில் திருவரத்துறை, கூ) என்னுந்திருவாக்கு இதன்பொருளே ஆராய்தற்கு இன்றியமையாதது.

2733. அரசனுக்குக் கழிந்தநாழி கையைக் கணிகள்கூறுதல், ''பூமென் கணையும் பொருசிலேயுங் கைக்கொ ண்டு, காமன் றிரியுங் கருவூரா - யா மங்க, ளொன்றுபோ யொன்றுபோ யொன்றுபோய் நாழிகையு, மொன்று போ யொன்றுபோ யொன்று'' (சில. இந்திர.சகூ. உரை,உதா) என்பதனுல் விளங்குகின்றது. நாழிகை கூறுங் கணிகள், நா

கடிகையாரென்றுங்கூறப்படுவர்.

2736. உறுவர் - எல்லாத்தேவரினு மிக்கவர்; ''உறற்பால நீக்க லுறுவர்க் கு மாகா'' (நாலடி. பழவினை. ச.)

2743. சாரணர் - சமணமுனிவர்; அவர் தலசாரணர், ஜலசாரணர், பல சாரணர், புஷ்பசாரணர், தந்துசார ணர், சதுரங்குலசாரணர், சங்கசார ணர், ஆகாசசாரணரென எண்வகை யர்; இவ்விருவராகச்சென்று தருமோ பதேசஞ்செய்தல் அவர்கட்கு இயல் பென்பர். 'மேல்' என்றது, 2893-ம் கவியை.

2746. மேற்கூறிய சாரணரிருவரு ள், உபதேசிப்போர் மூத்தோராதலி ன், 'நூற்கடன்மாதவன்' என ஒரு மையாற்கூறினர்; இது, சிலப்பதிகா ரம், நாடுகாண்காதை, கசுாரு-ம் அடி முதலியவற்றுலும் பெறப்படும்.

2756. பொய்கையுண்மலர் - தாம ரைமலர்; ''அடைமறை யாயிதழ்ப் போதுபோற் கொண்ட கொடைநிழற் றோன்றுநின் செம்மலே'' (கலி. அசு.) என்பதிற் புதல்வற்குத் தாமரைப்பூ உவமையாதலறிக.

2802. மார்பிற்கோதை - மார்பின் மாலை; ''கோதைமார்பிற் கோதையா னும்.'' (புறநா. சஅ)

2806. 'புருவமு முருவஞ் செய்ய' என்றும்பாடபேதமுண்டு; உரு-அச்ச மாதலின், உருவமென்பதை அதன் திரிபாகக்கொள்க.

2808. தேவர்கள் ஜினபூஜைசெய் வதுண்டென்றும் தேவலோகத்தில், அசு - லக்ஷத்துத் தொண்ணூற்றேழா யிரத்திருபத்துமூன்று ஜினலயங்களு ள்ளனவென்றும் கூறுவர்; இதனை, ''பாரிடையீரிருநூற்றைம்பத் தெட்டு ப்பத்தாம் பவணத், தோரெழுகோடி யெண்ணெண்பானிலக்க முயர்ந்தகற் பத், தோரியல்யோனிதொள்ளேழாயி ரச்சின்னமெண்ணவொண்ணுச், சீரிய வந்தரர்சோதிடத்தீசர்நற்சேதியமே '' (திருநூற். கூஉ) என்பதனுலுணர்க.

2813. சகசாதிசயம் பத்துவகை; கர்மக்ஷயாதிசயம் பத்துவகை; தெய் வீகாதிசயம் பதினன்குவகைப்படுமெ னபா.

2815. புண்ணியமிகுதிக்கு இந்திர னையும் பாவமிகுதிக்குக்குரங்கினை யும் எடுத்துக்காட்டினர்.

2816. தெளிவு - சம்யக்தரிசனம்.

பிடர்மண் டலவணை பிண்டிவெண் சாமரை பெய்மலரி, னடர்மண் டலமழை யம்பொற் குடைமும்மை யாமடியோ, மிடர்மண் டலங்கெடுப் பாற் றிமை யோர்செயு மெண்சிறப்பே” (திருநூற். ௮௦.) என்பதனாலுணர்க.

3024. கணைதாரிருக்குமிடம், கணைதரசோட்டமெனவழங்கும்.

3038. சுருதஞானம் - நூலுணர்ச்சி; அஃது அக்ஷராத்மகம், அநக்ஷராத்மகமென இருவகைப்படுமென்பர்.

3039. ‘பாம்புரிபோன்முற்றத்துறந்து’ என்பது, 1546 - ம்கவியாலும் அதன் உரைமுதலியவற்றாலும் விளங்கும்.

3046. பட்டத்தியானையை அயிராவணம் எனவழங்கல் மூவருலாமுதலியவற்றிலுங்காணப்படும்.

3116. கர்ப்பாவதரணம், ஜன்மாபிஷேகம், பரிநிஷ்க்ரமணம், கேவலஞானம், பரிநிர்வாணம் என்னும் பஞ்சகலியாணங்களுள், பரிநிர்வாணம் ஐந்தாவதாதலின், கலியாணமெனப்பட்டது; பரிநிர்வாணம் - முத்தி.

3121. ஐயமின்மை - நற்காட்சியிற் சங்கையின்மை.

## இந்நூலை எடுத்தாண்ட உரையாசிரியர்கள் :

அடியார்க்குநல்லார் ... ... ... ... ... ... ... ... ... *

உரையாசிரியர் ... ... ... ... ... ... ... ... ... *

குன்றத்தூர், அட்டாவதானம் சொக்கநாத முதலியார் ... ... *

சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர் ... ... ... ... ... *

தக்கயாகப்பரணிஉரையாசிரியர் ... ... ... ... ... ... *

திருக்குருகூர்ச் சுப்பிரமணிய தீக்ஷிதர் ... ... ... ... ... *

திருநூற்றந்தாதி யுரையாசிரியர் ... ... ... ... ... ... *

திருநெல்வேலிச் சங்கரநமச்சிவாயர் ... ... ... ... ... *

திருநெல்வேலி - மயிலேறும்பெருமாள்பிள்ளை ... ... ... ... *

திருவரங்கத்தந்தாதியின் பழையவுரையாசிரியர் ... ... ... *

திருவாரூர் வைத்தியநாத நாவலர் ... ... ... ... ... ... *

திருவாவடுதுறைச் சாமிநாததேசிகர் ... ... ... ... ... *

திருவாவடுதுறைச் சிவஞானமுனிவர் ... ... ... ... ... *

நச்சினார்க்கினியர் ... ... ... ... ... ... ... ... ... *

நன்னூற் பழையவுரையாசிரியர் ... ... ... ... ... ... *

நாற்கவிராசநம்பியகப்பொருள் உரையாசிரியர் ... ... ... *

நீலகேசிவிருத்தியுரையாசிரியர் ... ... ... ... ... ... ... *

நேமிநாதவுரையாசிரியர் ... ... ... ... ... ... ... *

பரிமேலழகர் ... ... ... ... ... ... ... ... ... ... *

புறநானூற்றுரையாசிரியர் ... ... ... ... ... ... ... *

யாப்பருங்கலக்காரிகையுரையாசிரியர் ... ... ... ... ... *

யாப்பருங்கலவிருத்தியுரையாசிரியர் ... ... ... ... ... *

பரமபதி துணை.

# சீவகசிந்தாமணி.

## நச்சினார்க்கினியருரை.



### கடவுள்வாழ்த்து.

1. மூவாமுதலாவுலகம்மொருமூன்றுமேத்தத்
தாவாதவின்பந்தலையாயதுதன்னினெய்தி
யோவாதுநின்றகுணத்தொண்ணிதிச்செல்வனென்ப
தேவாதிதேவனவன்சேவடிசேர்துமன்றே.

என்பது. இத்தொடர்நிலைச்செய்யுள் தேவர் செய்கின்றகாலத்திற்கு நூல் அகத்தியமும் தொல்காப்பியமு மாதலானும், "மூந்துநூல்கண்டு முறைப்பட வெண்ணி" (தொல். சிறப்.) என்றதனால், அகத்தியத்தின்வழிநூல் தொல்காப்பியமாதலானும், பிறர்கூறியநூல்கள் நிரம்பிய இலக்கணத்தன அன்மையானும், அந்நூலிற் கூறியவிலக்கணமே இதற்கிலக்கணமென்றுணர்க.

அவ்விலக்கணங்களிற் செய்யுளியலின்கண்ணே ஆசிரியர் பா நான்கென்றும், அவற்றை அறம்பொருளின்பத்தாற் கூறுகவென்றுங்கூறிப் பின்பு அம்மைமுதலிய எட்டும் தொடர்நிலைச்செய்யுட்குஇலக்கணமென்று கூறுகின்றுழி, "இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்" (தொல். பொரு. செய். உ௩அ.) என்பதனால், "மெல்லென்றசொல்லான் அறம்பொருளின்பம் வீடென்னும் விழுமியபொருள்பயப்பப் பழையதோர்கதைமேற் கொச்சகத்தாற்கூறின், அது தோல்" என்று கூறினமையின், இச்செய்யுள் அங்ஙனங் கூறியதோலாமென்றுணர்க.

இச்செய்யுள் முன்னோர்கூறிய குறிப்பின்கண்வந்த செந்துறைப்பாடாண் பகுதியாம். இதனானே, "யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடையது" (தொல். பொரு. செய். க௯௧.) என்பதற்குத் தேவபாணியும் காமமுமேயன்றி வீடும் பொருளாமென்பது ஆசிரியர் கருத்தாயிற்று.

மூந்துநூல்களிற் காப்பியமென்னும்வடமொழியால் தொடர்நிலைச்செய்யுட்குப் பெயரின்மையும் இதற்குப்பின்புகூறிய நூல்கள் இதற்கு விதியன்மையு முணர்க.

இனி, இத்தொடர்நிலைச் செய்யுளை இனமென்ப. அந்நூல்கள் இனமென்றுகாட்டிய வுதாரணங்கடாம் அவர்சேர்த்த அவ்வப்பாக்கட்கே இனமா

னெய்தியென்ற இன், காரகவேதுப் பொருட்கண்வந்த ஐந்தாமுருபு. தன்னிலெய்தியென்று பாடமாயின், மணியினதுஒளியும் மலரினதுநாற்றமும் போலத் தன்னுள்ளேபெற்றென்க. எய்தியெனநின்ற செய்தெனெச்சம், காரணகாரியப்பொருட்டாய் நின்றவென்னும் பெயரெச்சவினையொடு முடிந்து, அது குணமென்னும் பொருட்பெயரொடுமுடிந்தது. ஓவாதென்னும் எதிர்மறையெச்சமும் நின்றவென்பதனொடு முடியும். குணமாவன, தாவாதவின்பமென்பதனாற்பெற்ற அநந்தசுகமொழிந்த எழுகுணங்களும். அவை, அநந்தஞானம், அநந்தவீரியம், அந ்நதரிசனம், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, அழியாவியல்பு என்பன. அத்து இரண்டாமுருபின்கண்வந்த சாரியை; "அத்தே வற்றே யாயிரு மொழிமே, லொற்றுமெய் கெடுத றெற்றென் றற்றே" (தொல். எழுத். புண. ௩௧.) என்பதனான், மகரங்கெட்டு "அத்தி னகர மகரமுனை யில்லை" (தொல். எழுத். புண. ௨௩.) என்பதனான், அகரம் கெட்டுமுடிந்தது. "குற்றிய லுகரமு மற்று" (தொல். எழுத். புண. ௩.) என்பதனான் வருமொழியில் ஒகரமேறிற்று. ஒண்ணிதி - பண்புத்தொகை. ஒண்ணிதிச்செல்வன் - வீடாகிய விளங்கிய நிதியையுடைய செல்வன்; இகரவீற்று வேற்றுமைச்சொல்லாதலின், வல்லெழுத்துமிக்கது. செல்வனென்றார், அழியாதவின்பத்தை நுகர்தலின். என்பவென்னுமுற்றுச்சொல், சாதுக்களென்னும்பெயர் தொக்குநின்றதனொடுமுடியும்; தோன்றாவெழுவாயுமாம். தேவும் தெய்வத்துக்கு ஒருபெயர்; நான்கனுருபு விரிக்க. ஆதியாகியவென்க. சேவடி, பண்புமாத்திரையாய்க்குறைந்த சொல்லாதலின், மருவின் பாத்தியதாய்நின்றது. சேவடிசேர்துமென ஒற்று இரட்டாதுநின்றது, இரண்டாவதற்கோதிய திரிபில்லன பிறவால்; (தொல். எழுத். தொகை. கரு). சேர்தும் - பன்மைத்தன்மை. ஈண்டு ஒருவரைக்கூறும் பன்மை. அன்று - அசை. ஏகாரம் - ஈற்றசை.

(இதன்பொருள்.) தேவர்களுக்கு ஆதியாகிய தேவனுவான், கெடாத இன்பம் தனக்கு ஒப்பற்றதனை அந்தமுமாதியுமில்லாத மூன்றுலகுமேத்தத் தன்னாற்பெறுகையினாலே தன்னை விட்டுநீங்காத குணங்களையுடையனாகிய ஒண்ணிதிச்செல்வனென்பர் சாதுக்கள்; ஆதலின், யாமும் இவ்விலக்கியம் இனிதுமுடிதற்பொருட்டு அவன் திருவடிகளை வணங்குவேமென்றாரென்க.

இஃது, அருகசரணம் சித்தசரணம் சாதுசரணம் தன்மசரணமென்னு நான்கினுள், சித்தசரணம்.

இனி, தான் மூவாமுதலாக வேண்டியென்றும், நாம் மூவாமுதலாக வேண்டியென்றும் வினையெச்சமாக்குவாருமுளர். அதற்கு எய்தி யென்பதனொடு முடிக்க.

மேல்வருஞ்செய்யுட்கும் இவ்வாறுரைப்பின் உரைபெருகுமாதலின், இனி நல்லறிவுடையோர் உய்த்துணருமாறு சுருங்கவுரைக்கின்றாம்.

# அவையடக்கம்.



4. கற்பாலுமிழ்ந்தமணியுங்கழுவாதுவிட்டா
னற்பாலழியுநகைவெண்மதிபோனிறைந்த
சொற்பாலுமிழ்ந்தமறுவும்மதியாற்கழூஉவிப்
பொற்பாவிழைத்துக்கொளற்பாலர்புலமைமிக்கார்.

இ - ள். கல்லின்பகுதியீன்றமணியும் நிறைமதிபோற் கலைகணிறைந்த சொல்லின்பகுதியீன்றமறுவும் கழுவாதொழிந்தால் நன்மைகெடும்; ஆதலிற் சான்றோர் தமது அறிவாலே கழுவி அழகாக அமைத்துக்கொளற்பாலராயிருந்தாரென்க.

எனவே யான் அத்தன்மையனல்லனென்பது சொல்லெச்சம்; "சொல்லொடுங் குறிப்பொடு முடிவுகொ ளியற்கை, புல்லிய கிளவி யெச்ச மாகும்." (தொல். பொரு. செய். ௨௦௭.) என்றாராதலின். மறுவில்லாமதிக்கு மறுவடுத்தாற்போலக் கலைநிறைந்தசொற்கு அடுத்த மறுவாவது வழுவமைக்குஞ் சொல்; அதனைச் சங்கத்தார் ஆராய்ந்தமைகூறவே அவையடக்க முணர்த்தியதாயிற்று. மதிபோல் நிறைந்த மதியுமாம். (௧)

5. முந்நீர்ப்பிறந்தபவழத்தொடுசங்குமுத்து
மந்நீருவர்க்கு மெனின்யாரவைநீக்குகிற்பா
ரிந்நீரவென்சொற்பழுதாயினுங்கொள்பவன்றே
பொய்ந்நீரவல்லாப்பொருளால்விண்புகுதுமென்பார்.

நிலத்தைப் படைத்தலும் காத்தலும் அழித்தலுமாகிய மூன்று தொழிலு முடைமையின், முந்நீர் - ஆகுபெயர்.

இ - ள். பவழமும் சங்கும் முத்தும் கடலிலேபிறந்தன, அவை பிறந்த அக்கடல் உவர்க்குமென்று கூறினும் அவற்றைக் கைவிடுவாரில்லை. அது போல மெய்யாகிய புராணப்பொருளாலே வீடுபெறுவே மென்பார், எனது இவ்வாறு உவர்க்குந் தன்மையையுடைய சொல் தீதாயினும், அச்சொற்பொதிந்தபொருளாலே அச்சொல்லைக் கொள்வரெனத் துணிந்து கூறினாரென்க.

# பதிகம்.

6. மீனேறுயர்த்துக்கொடிவேந்தனைவென்றபொற்பிற்
றானேறனையானுளன்சீவகசாமியென்பான்
வானேறநின்றபுகழான்சரிதஞ்செவிமண்டோர்க்
தேனூறநின்றுதெருண்டாரவைசெப்பலுற்றேன்.

ஏறுயர்த்த - ஏற்றைமேம்படுத்தின; "கடல்வாழ் சுறவு மேறெனப் படுமே" (தொல். பொரு. மர. ௪௦.) என்றார். சாமி, பாகதம்.

இ-ள். காமனைவென்ற பொற்பினையுடைய ஏறனையானான் ஒருவ னுளன்; அவன் யாரெனிற் சீவகசாமியென்பான்; அவனதொழுக்கம் கேட்டோர் நெஞ்சிடத்தேநின்று இனிமைமிகும்படி, தெளிந்தோர் அவையிலே இத்தொடர்நிலைச் செய்யுளைக் கூறலுற்றேனென்க.

புகழானென்னும் பெயர் சொல்லுவான்குறிப்பான் அவனொருவனுக் கட்டுப்பெயர் மாத்திரையாயிற்று; "நாணிலஞ்சேரன்" (அகநா. ௬௬.) என்றும், "அணங்கருங் கடவு ளன்னோள்" (அகநா. ௬௨.) என்புழியும் அகத்தியற் கூறினாற் போல. இது, "பொருளொடு புணராச் சுட்டுப்பெயர் ஆயினும்" (தொல். சொல். கிள. ௩௭.) என்னுஞ்சூத்திரவிதி. மேல் இங்ஙனம் வருவனவற்றிற் கெல்லாமொக்கும். சீவகனை முற்கூறினார், கதைக்கு நாயகனாதலின். (௬)

7. கோடாதசெங்கோற்குளிர்வெண்குடைக்கோதைவெள்வே
லோடாததானையுருமுக்குரலோடையானை
வாடாதவென்றிமிகுசச்சந்தனென்பமன்னன்
வீடாதகற்பினவன்றேவிவிசயையென்பாள்.

செங்கோல் - பிறிதினியைபு நீக்கிய விசேடணமாயினும் கோடாத வென்று அடையடுத்ததிற் கோலென்னுந் தன்மையாயிற்று. வெண்குடை - இயைபின்மை மாத்திரை நீக்கிய விசேடணம். உருமுக்குரலோடை யுடையயானை. வீடாத - விகாரம்.

இ-ள். செங்கோன்முதலியவற்றையுடைய மன்னன் வாடாதவெ ன்றிமிகு சச்சந்தனென்பான்; அவன்றேவி விசயையென்று பெயர்கூறப்படு வாளென்க. (எ)

8. சேக்கொத்தலர்ந்தசெழுந்தாமரையன்னவாட்கட்
பூக்கொத்தலர்ந்தபசம்பொற்கொடியன்னபொற்பிற்
றேங்கொத்தலர்ந்தமுலையின்னுயிர்தன்னசாயல்
வேந்தற்கமுதாய்விளையாடுதற்கேதுவாமே.

ள்) - ள். சிவந்து தம்மிலிணையொத்து அலர்ந்த தாமரையன்னகண்ணி ணையும் பொற்பினையும் தம்மிலொத்து அடிபரந்த எந்துமுலையிணையுமுடைய சாயலாள், வேந்தனுக்கு அமுதமாய்ப் புணர்ச்சிக்குக் காரணமாமென்க.

அமிர்தம் கட்கினிதாகிய மென்மையும் தன்னை நுகர்ந்தார் பிறிதுநுகராமற் றடுக்குமென்மையு முடைமையின், 'அமிர்தன்னசாயல்' என்றார்; "சாயன் மென்மை" (தொல். சொல். உரி. உசு.) என்று பொதுப்படச்சூத்திரஞ் செய்தது ஐம்பொறியால் நுகரு மென்மையெல்லாமடங்குதற்கு; "மயிலன்னசாயல்" (எலா. உஅ.), "சாயன்மார்பு" (கலித். சுடு.) என ஒளிக்கும் ஊற்றிற்கும் வந்தன; பிறவுங் காண்க. சாயல் - ஆகுபெயர். மறுமையிற்சென்று பெறும் அமுதமும் இவளெனக்கொண்டு மயங்கினமைதோன்ற மீட்டும் அமுதாயென்றார். (ஙு).

9\. கல்லார்மணிப்பூணவன்காமங்கனேந்துகன்றிச்
சொல்லாறுகேளானனிசூழ்ச்சியிற்றோற்றவாறும்
புல்லார்புகலப்பொறிமஞ்ஞையிற்றேவிபோகிச்
செல்லாறிழுக்கிச்சுடுகாடவள்சேர்ந்தவாறும்.

நனி - விசேடித்த உரிச்சொல். பொறி - எந்திரம். செல்லாறிழுக்குதல் - வெற்றிமுரசுகேட்டுக் கலங்குதல். தேவி போகி இழுக்கிச் சேர்ந்தவாறுமென முடிவுழி, அவளென வேண்டாமையின், அது தேவியைச்சுட்டாது, அங்ஙனம் அமுதாயவள் இங்ஙனமாயினாளெனத் தேவரிரங்குதலின், முன்னிற்கவியை நோக்கித் தகுதிபற்றிவந்தது. இனிச் சாத்தியவள்வந்தா ளென்றாற்போலத் தேவியவளென வினைக்கொருங்கியன்றதென்பாருமுளர்; அது வழக்கிற்கென்று மறுக்க.

இ - ள். பூணவன் வேட்கைசெறிந்து அதிலே அடிப்பட்டு அமைச்சர் சொல்வழியைக் கேளானாய்ப் பகைவர் மனமகிழ எண்ணத்திலே மிகத்தோற்றபடியும், தேவி போகி இழுக்கி அவள் சுடுகாட்டைச் சேர்ந்தபடியுமென்க.

10\. நாளுற்றுநம்பிபிறந்தான்றிசைபத்துநந்தத்
தோளுற்றொர்தெய்வந்துணையாய்த்துயர்தீர்த்தவாறுங்
கோளுற்றகோன்போலவன்கொண்டுவளர்த்தவாறும்
வாளுற்றகண்ணாண்மகன்வாழ்கெனநோற்றவாறும்.

தோள் - கை. உற்று - உவமவாசகம்; "செப்புற்ற கொங்கை" (திருச்சிற். ஙுகூ.) என்றார் பிறரும். "ஒழியாது" (தொல். எழுத். தொகை. கஙு.) என்னுமிலேசாற் கோனையென்னுமுருபு தொக்கது. அவனென்று கந்துக்கடனைச் சுட்டிற்று, கதையை உட்கொண்டு. அரசன் இறத்தற்கு ஏதுவாகலின், ஈண்டும் வாளுற்றகண்ணென்றார். வாழ்க - வியங்கோள்; விகாரம். நோன்பு, வேட்கையுள்ளது.

இ - ள். நம்பி, ஒன்பதுதிங்களும் நிறைந்து, திசைகளிற் பல்லுயிர்களும் வளர்தல்காரணமாகப் பிறந்தானாக, ஒருதெய்வம் கூனியாது உருவாய்த் தன்கைதனக்கு உதவுமாறுபோலத் தேவிக்கு உதவித் துயர்தீர்த்தபடியும், கொலையுண்டசச்சந்தன் வளர்க்குமாறுபோலக் கந்துக்கடன் உட்கொண்டு வளர்த்தபடியும், கண்ணுள் தோற்றபடியுமென்க.

நல்ல நாளுற்றென்றுமாம். (௫)

11. நெஞ்சம்புணையாக்கலைமாக்கடனீந்தியாங்கே
வஞ்சமறவர்நிரைவவ்வல்விடுத்தவாறும்
விஞ்சைக்கிறைவன்மகள்வீணையிற்றோற்றவாறு
நஞ்சுற்றகாமநனிநாகரிற்றுய்த்தவாறும்.

இ - ள். வள்ளல், தனதுநெஞ்சு தெப்பமாகக் கலையாகிய கடலைக் கடந்து கரையேறி அப்பொழுதே மறவர்கொண்டநிரையை மீட்டபடியும், தத்தை யாழ்ப்பாடலிலே தோற்றபடியும், இருகலையுமொத்தகாமத்தை நாகரைப்போல நுகர்ந்தபடியுமென்க.

கற்றபொழுதே பயன்கோடலருமையின், 'ஆங்கே' என்றார். மறவரைக் கொல்லாது உயிரைவழங்குதலின், வள்ளலென்றார். விஞ்சை, குணப்பண்பு; பண்புடைப்பொருண்மேனின்ற ஆகுபெயர். ஒருமகளை வென்றானென்றல் இவன் தலைமைக்கு இழிவென்று அவள்செய்தியாகக் கூறினார். நாகரோ டுவமை, ஒருடம்பாதலும் நீங்கல்வன்மையும்பற்றி. (௬)

12. முந்நீர்ப்படுசங்கலறம்முரசார்ப்பமூதூர்ச்
செந்நீர்க்கடியின் விழவாட்டினுட்டேங்கொள்சுண்ண
மைந்நீர்நெடுங்கணிருமங்கையர்தம்முண்மாறு
யிந்நீர்ப்படியேயிவைதோற்றனவென்றவாறும்.

அலற ஆர்ப்ப விளையாடும்விளையாட்டென்க. கடி - மிகுதி. தேங்கொள் சுண்ணம் - ஒளியும் நாற்றமும் ஊறும் இனிமைகொண்ட சுண்ணம். தோற்றனம், "மேயின ளுயிர்த்த காலை" (அகநா. ௫.) என்றாற்போல, வினையெச்சம் முற்றாய்த்திரிந்தது.

இ - ள். மூதூரிற் புதுநீராலுண்டான விழவெடுத்தாடும் ஆட்டிலே இருவராகிய மங்கையர் சுண்ணத்தாலே மாறாய் இச்சுண்ணங்களைத் தோற்று இந்நீரிற்படியேமென்றபடியுமென்க. (௭)

13. சுண்ணம்முடைந்துசுரமஞ்சரிசோர்ந்துதோற்றி
வண்ணக்நெடுங்கட்குணமாலையைவைதுமாறிப்
புண்வேற்புடையிற்புகைத்தானுருவியாதுநோக்காள்
கண்ணேறுக்குடைந்துகடிமாடமடைந்தவாறும்.

2125. ௩. மடநடைபெண்மைவனப்பென்பதோராய்
கடுநடைகற்றாய்கணவனிழப்பாய்
பிடியலைபாவியெனப்பூண்பிறழ்ந்து
புடைமுலைவிம்மப்புலந்தனர்நிற்பார்.

பெண்மைக்கழகு மென்னடையென்பதோராயாய்க் கடியநடையைக் கற்ற நீ கணவனையிழக்கக்கடவை ; பாவி, நீதான் பிடியல்லைகாணென்றுகூறி, அதுபோனவழியை மெய்யைச் சாய்த்துப் பார்த்தலிற் பூணும்பிறழ்ந்து முலையுமொருபக்கத்தேவிம்ம வெறுத்துநிற்பார்.

இது, பிடிக்குப்பின்னின்றமகளிர்கூற்று. (௨௪)

2126. ௪. மயிர்வாய்ச்சிறுகட்பெருஞ்செவிமாத்தாட்
செயிர்தீர்திரள்கைச்சிறுபிடிகேள்வ
னயிராவணத்தொடுசூளுறுமைய
னுயிர்காவலற்கொண்டுதவநில்லென்பார்.

மயிரையுடைய வாய் முதலியவற்றையுடைய சிறுபிடி, நின்கேள்வனாகிய ஐராவணத்தோடே சூளுறுவேம் ; இனிச் சூளுறாதபடி ஐயனாகிய உயிர்காவலனைக்கொண்டு அவன் எமக்குதவும்படி நில்லென்பார்.

சூளுறு மென்பது, சேறு மென்றாற்போலப் பன்மையுரைக்குந் தன்மைச்சொல். (௨௫)

2127. ௫. [illegible]
ரருமையழகிற்கரசனைநாளைத்
திருமலிவீதியெஞ்சேரிக்கொணர்மோ
வெரிமணிமாலையிளம்பிடியென்பார்.

இளம்பிடியே, பெறுதற்கரிய அழகிற்கு அரசனானவனை எம்சேரியில் வீதியிலே நாளைக் கொணர்வாயாக ; கொணர்ந்தாற் கருணையையுடைய கவளத்தைத்தருவேமென்பார். (௨௬)

2128. ௬. என்னோர்மருங்கினுமேத்தியெரிமணிப்
பொன்னார்கலையினர்பொற்பூஞ்சிலம்பினர்
மின்னார்குழையினர்கோதையர்வீதியுண்
மன்னகுமரனைவாழ்த்திமகிழ்ந்தார்.

இ - ள். அந்நகரில் வீதியிலே சிலமகளிர் வாழ்த்துபுநிற்பார், நடமோ வென்பார், புலந்தனர்நிற்பார், நில்லென்பார், தருதுமென்பாராய்க் கலையினராய்ச் சிலம்பினராய்க் குழையினராய்க் கோதையராய் மருங்கில்நின்றவெல்லோரும் அரசகுமரனை யேத்தி வாழ்த்தி மகிழ்ந்தாரென்க.

ஏத்துதல் - புகழ்தல். வாழ்த்துதல் - பல்லாண்டுமுதலியனகூறல். (௨௭)

வேறு.

2129. விளங்குபாற்கடலிற்பொங்கிவெண்டிரையெழுவவேபோற்
றுளங்கொளிமாடத்துச்சித்துகிற்கொடிநுடங்கும்வீதி
யுளங்கழிந்துருவப்பைந்தார்மன்னவன்கோயில்சேர்ந்தா
னிளங்கதிர்ப்பரிதிபௌவத்திறுவரையிருந்ததொத்தான்.

இ - ள். இளங்கதிர்ஞாயிறு கடலிடத்து உதயகிரியிலேயிருந்த தன்மையையொத்தவன், பாற்கடலில் வெண்டிரைபொங்கி யெழுவனபோல மாடத்துச்சியிற் கொடிநுடங்கும் வீதியினடுவேபோய் மன்னவன்கோயிலைச் சேர்ந்தானென்க. (௨௮)

2130. இழையொளிபரந்தகோயிலினமலர்க்குவளைப்பொற்பூ
விழைதருகமலவட்டத்திடைவிராய்ப்பூத்ததேபோற்
குழையொளிமுகமுங்கோலக்கொழுங்கயற்கண்ணுந்தோன்ற
மழைமின்னுக்குழாத்தின்மாலைமங்கையர்மயங்கிநின்றார்.

இ - ள். கோயின்மங்கையர், கமலப்பூவின்வட்டத்திடையே குவளை விராய்ப்பூத்ததுபோலே முகமும் கண்ணுந்தோன்ற மெய்ம்மறைந்து மின்றிரள்போலே கலந்துநின்றாரென்க. (௨௯)

2131. எரிக்குழாஞ்சுடரும்வைவேலேந்தலைக்கண்டுகோயிற்
றிருக்குழாமனையபட்டத்தேவியர்மகிழ்ந்துசெய்ய
வரிக்குழாநெடுங்கணாரக்கொப்புளித்துமிழவம்பூ
விரைக்குழாமாலைத்தேனும்வண்டுமுண்டொழுகநின்றார்.

இ - ள். பட்டத்தேவியர், ஏந்தலை நெடுங்கண்ணாலேகண்டு இங்ஙனம் ஒரு மகனைப்பெற்றேமேயென்று மகிழ்ந்து மாலையிடத்தேமறைந்துநின்றாரென்க.

பூவில்விரையொழுகுதலாலே தேனும்வண்டும் முதற் கொப்புளித்துப் பின் ஆரவுண்டு உமிழும்படி திரளுதலையுடைத்தாகியமாலையென்க. உமிழத் திரளுமென்க. (௩௦)

2132. அலங்கருதவிழ்ந்துசோரவல்குற்பொற்றோரைமின்னச்
சிலம்பின்மேற்பஞ்சியார்ந்தசீறடிவலத்ததூன்றி
நலந்துறைபோயநங்கைதோழியைப்புல்லிநின்று [ப்பாள்.
ளிலங்கொளிமணித்தொத்தீன்றவேந்துபொற்கொடியொடொ

அவிழ்ந்து, அவிழ.

இ - ள். மாணிக்கக்கொத்தையீன்ற பொற்கொடியோடொப்பாளாகிய அழகின் கூறெல்லாநிரம்பியநங்கை தாதுசோர, அலங்கலவிழ, அல்குற் பொன்வடமின்ன இடக்காலிற்சிலம்பின்மேலே வலத்ததாகிய சீறடியையூன்றித் தோழியைச் சார்ந்துநின்றாளென்க. (௩௧)

2133. தாமரைப்போதிற்பூத்ததண்ணறுங்குவளைப்பூப்போற்
காமருமுகத்திற்பூத்தகருமழைத்தடங்கண்டம்மாற்
றேமலர்மார்பினுனைநோக்கினுள்செல்வன்மற்றப்
பூமலர்க்கோதைநெஞ்சமூழ்கிப்புக்கொளித்திட்டானே.

இ - ள். அவள், தாமரைப்பூவிலே பூத்த குவளைப்பூப்போலே முகத்திலேபொலிவுபெற்றகண்களாலே மார்பினுனைநோக்கினுள் ; அவனும் அவள் நெஞ்சிலேமறைந்து புக்கு அவ்விடத்தினின்றும்போந்து கட்புலனுகாமையாயினுனென்க.

மூழ்கவெனத்திரித்து, நெஞ்சிலேபுக்குமூழ்க வொளித்தானென்றுமாம்.

வேறு.

2134. விண்ணுறுசெல்வார்மனம்பேதுறப்போந்துவீங்கிப்
பண்ணுறுசொல்லாண்முலைபாரித்தவென்றுநோக்கக்
கண்ணுறுசென்றகளியையங்கணைக்காமனன்ன
புண்ணுறுவேலான்மனமூழ்கினள்பொன்னனுளே.

தேவருலகிலே * சாசாரனென்னுந் தேவர்கோவாயிருந்து போதுகின்ற பொழுது அத்தேவர் இவன் ஈண்டுப் போகின்முனென்று மனம்வருந்துமபடிபோந்து, இவ்வுலகிலே கண்ணுக்குப்புலனுதலைப் பொருந்தினுனொருகாமனையொத்த சீவகனென்று தேவர் இவனைவியந்துகூறினுர். புண்டோற்று

இ - ள். வேலான், பண்டோற்றுஞ்சொல்லாண்முலை வீங்கிப்பாரித்த வென்று நோக்கினுக, அவன்மனத்தே அவள்மறைந்தாளென்க.

இனி அமிர்தகலசம்போந்தென்முல், முலையைக்கண்டு தேவர்வருந்தினு ரென்றே பொருட்குதலிற் குற்றமாம். (௩௩)

2135. மைதோய்வரையினிழியும்புலிபோலமைந்தன்
பெய்தாமமாலைப்பிடியின்னிழிந்தேகிமன்னர்
கொய்தாமமாலைக்கொழும்பொன்முடிதேய்த்திலங்குஞ்
செய்பூங்கழலைத்தொழுதான்சென்னிசேர்த்தினுனே.

* சீவகன், முற்பிறப்பில், பதினுறுகற்பலோகத்துள் ஒன்முகிய ஸஹஸ்ரார கற்பத்தில் இந்திரனுக இருந்தவனுதலால் இங்ஙனங்கூறினர், பதினுறு கற்பங்களாவன : (க) சௌதர்மம், (உ) ஈசானம், (௩) சனற்குமாரம், (௪) மாகேந்திரம், (௫) பிரமம், (௬) பிரமோத்தரம், (எ) இலாந்தவம், (அ) காபிஷ்டம், (௯) சுக்கிரம், (க௦) மகாசுக்கிரம், (கக) சதாரம், (கஉ) ஸஹஸ்ராரம், (க௩) ஆநதம், (க௪) பிராணதம், (க௫) ஆரணம், (க௬) அச்சுதம் என்பனவாம். இவை ஸ்ரீபுராணத்திலும், மேருமந்தர புராணத்திலும் சொல்லப்பட்டன.

இ - ள். மைந்தன் வரையினின்றிழியும் புலிபோலே பிடியினின்றிழி ந்துபோய் மாமனை முதற் கையாற்றொழுதான்; தொழுது மன்னர்முடி தேய்த்தலாலே இலங்கும் அவனடியைத் தன்சென்னியிலே சேர்த்தினு னென்க.

கொய்த ஒழுங்குபட்ட மாலையினையுடையமன்னர். கழல் - ஆகுபெயர்.

2136. பொன்னங்குவட்டிற்பொலிவெய்தித்திரண்டதிண்டோண்
மன்னன்மகிழ்ந்துமருமானைவிடாதுபுல்லித்
தன்னன்புகூரத்தடந்தாமரைச்செங்கண்முத்த
மின்னும்மணிப்பூண்வரைமார்பநனைப்பநின்றான்.

குவட்டின் - குவடுபோல.

இ - ள். மன்னன் மருமானை விடாமற் றோளாற்புல்லி அன்புமிகுத லின், தான் அழுதகண்ணீர் அவன்மார்பைநனைக்கும்படி நின்றானென்க. ()

2137. ஆனதுவேந்தன்கலுழ்ந்தானெனக்கோயிலெல்லாந்
தானியாதுமின்றிமயங்கித்தடங்கண்பெய்மாரி
தேனார்மலரீர்த்தொழுகச்சிலம்பிற்சிலம்புங்
கானார்மயிலின்கணம்போற்கலுழ்வுற்றதன்றே.

இ - ள். வேந்தன் றானென்கின்றதன்மை யாதுமின்றி மயங்கி ஆனு தழுதானென்றுகருதிக் கோயிலெல்லாம் மலையிலழுகின்ற மயிற்றிரள்போ லே கண்பெய்தமாரி மலரீர்த்து ஒழுகும்படி அழுதனுற்றவென்க.

உற்றது, ஒருமைப்பன்மைமயக்கம். கானார்சிலம்பு. (௩௬)

வேறு.

2138. பகைநரம்பிசையுங்கேளாப்பைங்கதிர்ப்பசும்பொற்கோயில்
வகைநலம்வாடியெங்குமழுகுரன்மயங்கிமுந்நீ
ரகமடைதிறந்ததேபோலலறக்கோக்கிளையநங்கை
மிகைநலத்தேவிதானேவிலாவணைநீக்கினாளே.

இ - ள். நரம்பிசையிற்பகையும் கேட்டறியாத கோயிலுள்ளார் சச்ச ந்தன்றன்மையைக் கேட்டலின், அழகுவாடி அழுகுரலெங்குங்கலந்து கடலி டத்துக் கரையைத்திறந்தாற்போல அலறுதலிற் கோவுக்கிளையநங்கையாகிய விசயை தானேவந்து அழுகையைநீக்கினாளென்க.

மிகையாகிய குணத்தையுடைய தேவி. (௩௭)

2139. பல்கதிர்மணியும்பொன்னும்பவழமுங்குயிற்றிச்செய்த
செல்வப்பொற்கிடுகுசூழ்ந்தசித்திரகூடமெங்கு
மல்குபூந்தாமந்தாழ்ந்துமணிப்புகைகமழவேந்தன்
வெல்புகழ்பரவமாதோவிதியுளியெய்தினானே.

இ - ள். மணிமுதலியவற்றை
சித்திரகூடமெங்கும் தாமந்தாழப்பட்டுப் புகைகமழாநிற்க, ஏத்தாளிகள் புகழைப்பரவ, வேந்தன் முறையாலே அதனைச்சேர்ந்தானென்க. (௩௮)

2140. எரிமணியடைப்பைசெம்பொற்படியகமிலங்குபொன்வாள்
கருமணிமுகடுவேய்ந்தகஞ்சனைகவரிகொண்ட
வருமுலைமகளிர்வைத்துவான்றவிசடுத்துநீங்கப்
பெருமகனெண்ணங்கொள்வானமைச்சரோடேறினானே.

படியகம் - படிக்கம். கஞ்சனை - கலசப்பானை. காஞ்சனக்கவரி பாடமாயின், பொற்காம்பிட்ட கவரியென்க.

இ - ள். அவனெய்தினபின்பு, அடைப்பைமுதலியவற்றைக் கொண்ட மகளிர் அவற்றை ஆசனத்தருகேவைத்து நீங்க, சீவகன், மாமனுடனே காரியம்விசாரித்தற்கு அவனமைச்சருடனே சென்றேறினானென்க. (௩௯)

2141. உலந்தநாளவர்க்குத்தோன்றாதொளிக்குமீன்குளிக்குங்கற்பிற்
புலந்தவேனெடுங்கட்செவ்வாய்ப்புதவிநாட்பயந்தநம்பி
சிலம்புநீர்க்கடலந்தானைச்சீதத்தற்கரசுநாட்டிக்
குலந்தருகொற்றவேலான்கொடிநகர்காக்கவென்றான்.

இ - ள். அவ்வளவிலே கோவிந்தன், நாளற்றவர்க்குத் தோன்றாதே மறையும் அருந்ததிதோற்குங் கற்பினையும், வேலைப்புலந்த கண்ணினையும், வாயினையுமுடைய புதவியென்னுந்தேவிபயந்த நம்பியாகிய சீதத்தனுக்கு நல்லநாளிலே அரசைநாட்டி நீ இந்நகரைக் காப்பாயாகவென்றானென்க.

குலந்தருதல் - புதல்வற்பயந்து மேலுங் குலத்தைவளர்த்தல். தான் அக்கடன் கழித்துப் பொருதுபடக்கருதுதலின், அதற்கு அமைச்சர் உடன்படாரென்று அவரை வினவாது தானேயரசளித்தான்; "வீறுசால் புதல்வற் பெற்றனை யிவணர்க், கருங்கட னிறுத்த செருப்புகன் முன்ப" (பதிற். ௭௪.) என்றாற்போல. (௪௦)

2142. மாற்றவனொற்றரொற்றாவகையினின்மறையநம்பிக்
காற்றினதோழர்க்கெல்லாமணிகலமடிசிலாடை
வேற்றுமையின்றிவேண்டேட்டமைத்தனனருளியிப்பா
லேற்றுரிமுரசநாணவெறிதிரைமுழக்கிற்சொன்னான்.

இ - ள். பகைவனொற்றர் ஆராயாத கூற்றாலே மறையும்படி சீவகற்குதவியாகிய தோழர்க்கெல்லாம் அணிகலமுதலியவற்றைச் சீவகற்கமைத்தாற்போல அமைத்தனனாய்த் தலையளிசெய்துவிட்டு இப்பால் வென்றஏற்றினுரி போர்த்த முரசநாணத் திரை முழக்குப்போல் ஒருமொழிகூறினானென்க.

வேண்டேட்டடிசில் - தாந்தாம் விரும்பப்படுகின்ற பொருள்களையுடைய அடிசில். இன்றி - இன்றாக. "வென்றதன் பச்சை சீவாது போர்த்த -

திண்பிணி முரசம்" (புறநா. உஅஅ.) என்றார்பிறரும். நீகொன்றசீவகன்றோ ழர்க்குக் கோவிந்தன் சிறப்புச்செய்தானென்று ஒற்றர் கட்டியங்காரற்குக் கூறினல் மேலுறவாகி யாம்கொலைசூழ்கின்றது தவறுமென்றுகருதி மறையக் கொடுத்தான். சீவகன் வேறோர் வேடமாதலின், அவனை ஒற்றலாகாதாம்.

2143. கட்டியங்காரனம்மைக்காண்பதேகருமமாக
வொட்டித்தான்விடுத்தவோலையுளபொருளுரைமினென்னத்
தொட்டுமேற்பொறியைநீக்கிமன்னனைத்தொழுதுதோன்ற
விட்டலர்நாகப்பைந்தார்விரிசிகன்கூறுமன்றே.

இ - ள். தன் மைத்துனன் அரசவுரிமையைக் கோவிந்தனேயெய்தக் கருத்துடையனென்று தான்கருதிக் கட்டியங்காரன்றன் கருத்தறிதலே காரியமாகத் துணிந்து வரவிட்ட வோலையி லுள்ள காரியத்தை நீருரைமினென்ன, விரிசிகன் அவவோலையையெடுத்து மேலிலிட்ட இலச்சினையைவாங்கி அரசனைத்தொழுது தோன்றக் கூறுகின்றனென்க. (௬௨)

2144. விதையத்தார்வேந்தன்காண்ககட்டியங்காரனோலை [மேற்
புதையவிப்பொழிலைப்போர்த்தோர்பொய்ப்பழிபரந்ததென்
கதையெனக்கருதல்செய்யான்மெய்யெனத்தானுங்கொண்டான்
சிதையவென்னெஞ்சம்போழ்ந்துதெளிப்பினுந்தெளிகர்யாரே.

இ - ள். கட்டியங்காரனோலையை விதையத்தார்வேந்தன் காண்பானாக, ஓர்பொய்ப்பழி உலகிலுள்ளோரறிவைக்கெடுத்து என்மேலே கிடந்ததனைத் தானுமுட்படப் பொய்வார்த்தையென்று கருதுதலைச்செய்யானாய் மெய்யென்றுகொண்டான்; இனி என்னுயிர்கெடும்படி என்மனத்தைப்பிளந்துகாட்டித் தெளித்தாலும் வேறுதெளிவாரில்லை; ஆயினும் தானுதலிற் றெளிவிக்கின்றேனென்றானென்க. (௬௩)

2145. க. படுமணிப்பைம்பொற்சூழிப்பகட்டினமிரியப்பாய்ந்து
கொடிநெடுந்தேர்களூறிக்கொய்யுளைமாக்கள்குத்தி
யிடுகொடியணிந்தமார்பரிருவிசும்பேறச்சீறி
யடுகளிற்றசனிவேகமலமர வதனைநோனான்.

2146. உ. நூற்றுவர்பாகர்தம்மைப்பிளந்துயிருண்டதென்னு
மாற்றத்தைக்கேட்டுச்சென்றுமதக்களிறடக்கிமேற்கொண்
டாற்றலங்கந்துசேர்த்தியாப்புறவீக்குமபோழ்திற்
கூற்றெனமுழங்கிவீழ்த்துக்கொல்லக்கோவிளகிற்றன்றே.

இவையிரண்டும் ஒருதொடர்.

க. எழுதுகொடியணிதற்குக் காரணமானமார்பையுடைய ஆடவர்; வீரத்திற்குக் கொடியெடுத்தன் மரபு.

இ - ள். அசனிவேகம் பாய்ந்து நூறிக் குத்திச் சீறிச் சுழல, அதனைப் பொறானாய்ப் பாகரை யேவினனாக, அது பாகர்நூற்றுவரைக் கொன்றதென்

கின்ற வார்த்தையைக்கேட்டுச் சென்று தான் அதனை அடக்கி யேறிக் கந்திலேசேர்த்திக் கட்டுகின்றவளவிலே, வீழ்த்துக் கூற்றெனக்கோறலின், அரசன்பட்டானென்க.

கோலிளகிற்று - மங்கலமரபு. (௪௪ - ௫)

2147. தனக்கியானுயிருமீவேன்றான்வரப்பழியுநீங்கு
மெனக்கினியிறைவன்றானேயிருநிலக்கிழமைவேண்டி
நினைத்துதானெடித்தல்செல்லாதென்சொலேதெளிந்துநொ
சினக்களியானைமன்னன் வருகெனச்செப்பினானே. [ய்தாச்

இ - ள். மன்னன் உலகங்கூறும்பொய்யைநினைத்துத் தான்தாழாதே யான்தெளித்தசொல்லையேதெளிந்து தான்வந்துதெளியப் பழியுநீங்கும்; தனக்கு யான் உயிரையுமுட்படத்தருவேன் ; இனி எனக்கிறைவன் தானேயாதலின், இந்நிலக்கிழமையை விரும்பிக் கடுகவருகவென்று விரிசிகன்வாசித்தானென்க.

‘வருக’ என்னுமளவும் ஓலைப்பாசுரம். நெடித்தல், விகாரம். உயிருமீவேனென்றது ஊழ்கூறுவித்தது. (௪௬)

2148. ஓலையுட்பொருளைக்கேட்டேயொள்ளெயிறிலங்கநக்குக்
காலனையளியன்றானேகையினால்விளிக்குமென்னா
நூல்வலீரிவனைக்கொல்லுநுண்மதிச்சூழ்ச்சியீதே [னான்.
போல்வதொன்றில்லையென்றான்புனைமணிப்பொன்செய்பூ

இ - ள். அவ்வோலையிற்காரியத்தைச் சீவகன்கேட்டு நக்குத் தானே காலனைக் கையால்விளிக்குமென்று தன்னிலேகருதி, நூல்வலீர், இவனைக் கொல்லுதற்குக் காரணமான சூழ்ச்சி யிதுவேபோல்வது வேறில்லையென்றானென்க.

மதியாற்சூழுஞ்சூழ்ச்சியீதென்றது - நட்பாய்ப் போதுகின்றதனை. (௪௭)

2149. கள்ளத்தானம்மைக்கொல்லக்கருதினானாமுந்தன்னைக்
கள்ளத்தாலுயிரையுண்ணக்கருதினேமிதனையாரு
முள்ளத்தாலுமிழவேண்டாவுறுபடைவந்துகூட
வள்ளுவார்முரசமூதூரறைகெனவருளினானே.

இஃது, அதுகேட்ட கோவிந்தன்கூற்று. வள்ளுவார், பெயர்த்திரிசொல்.

இ - ள். யாவர்சிலரும் உள்ளத்தினின்றுந் தோற்றுவிக்கவேண்டா ; கள்ளத்தால் நம்மைக் கொல்லக் கருதினான் ; நாமும் அவனை அங்ஙனங்கருதினேமாதலின், இந்நட்பை முதற்சாற்றிப் பின்பு படைகூடும்படி சாற்றியூரிலே முரசறைவிக்கவென்று கோவிந்தனருளிச்செய்தானென்க. (௪௮)

2150. கட்டியங்காரனேடுகாவலனொருவனானான்
விட்டுநீர்நெல்லும்பொன்னும்வழங்குமின்விளைவகூறி

ஞெட்டலனிறைவன்சொன்னீர்நாநுமவல்லவென்னக்
கொட்டிஞன்றடங்கண்வள் வார்க்குளிறிடி முரசமன்றே.

மேல்விளையுங்காரியங்களைச் சொல்லுநீர்மையையுடைய நாக்கள் அவற்றைக்கூறின், அந்நா நும்முடையனவல்லவென்று அறிவுடையோர் அறிவில்லார்க்குக் கூறும்படியாகச் சாற்றினனென்க. இது முரசறைவான்கூற்றெனின், பகைமைகூறிற்றேயாமாதலின், அவன்கூற்றன்று.

இ - ள். காவலன் பகையைவிட்டுக் கட்டியங்காரனோடு உறவானன்; இனி அவ்விறைவன் நெல்லும்பொன்னும் வழங்காதிருத்தற்கு உடம்படானாதலின், நீர் அவற்றை யிரண்டுநாட்டிலும் ஒக்கவழங்குமினென்று உறவுதோன்ற முதற்சாற்றினனென்க. (௪௯)

2151. விண்டவருடலங்கீறிச்சுவைத்துநின்றழலும்வேழ
மொண்கொடியுருவத்திண்டேரொளிமயிர்ப்புரவிபண்ணி
வண்கழலணிந்துமள்ளர்வாள்வலம்பிடித்துநாளைத்
தெண்டிரைப்பரப்புநாணத்திருநகர்த்தொகுகவென்றான்.

இ - ள். மள்ளர் வேழமுதலியவற்றைப்பண்ணி யணிந்து பிடித்து நாணநாளை நகரிலே தொகுவாராகவென்று பின்பு சாற்றினனென்க. (௫௦)

2152. ஏற்றுரிபோர்த்தவள்வாரிடிமுரசறைந்தபின்னாட்
காற்றெறிகடலிற்சங்குமுழவுமுரசுமார்ப்பக்
கூற்றுடன்றனையதானைகொழுநிலநெளியவீண்டிப்
பாற்கடற்பரப்பின்வெள்வாட்சுடரொளிபரந்ததன்றே.

ஈண்டி-, ஈண்ட.

இ - ள். அங்ஙனஞ்சாற்றின மற்றைநாட் கடல்போல் சங்குமுதலியன ஆர்ப்பத் தானையீண்டுதலிற் பாற்கடல்போலே வாளொளி நகரிலேபரந்ததென்க. (௫௧)

2153. புதையிருளிரியப்பொங்கிக்குங்குமக்கதிர்களோக்கி
யுதையத்தினெற்றிசேர்ந்தவொண்சுடர்ப்பரிதிபோலச்
சுதையொளிமாடத்துச்சிவெண்குடைநீழற்றோன்றி
விதையத்தார்வென்றிவேந்தன்விழுப்படைகாணுமன்றே.

இ - ள். வேந்தன், செறிந்த இருள்கெடும்படி கதிர்களைப் புறப்படவிட்டுப் பொங்கி உதயகிரியைச்சேர்ந்த பரிதிபோல மாடத்துச்சியிலே குடைநிழலிலே தோன்றிப் படையைக்காணுநிற்குமென்க. (௫௨)

வேறு.

2154. க. அரும்பனைத் தடக்கைய பரகாத்திரம்வாய்வாலெயிறைந்திலுங்கொல்வ, கருங்கடற்சங்குங்கறந்தவான்பாலுங்கனற்றியகாலுகி

ருடைய, பெரும்புலிமுழக்கின் மாறெதிர்முழங்கிப்பெருவரைகீண்டி டுந்திறல, திருந்தியேழுறுப்புந்திண்ணிலந்தோய்வதீயுமிழ்சிறுகணிற் சிறந்த.

இதுமுதல், "சொம்பொனீண்முடி" (மண். ௬௬) அளவும் ஒருதொடர்.

2155. உ. கவிழ்மணிப்புடையகண்ணிழுறிற்கனன்றுதந்திழலொடும லைவ, வவிழ்புயன்மேகமனையமும்மதத்தவறுபதிற்றறுபதாநாகம்,புக ழ்பருந்தார்ப்பப் பூமதம் பொழிவானின்றன விராயிரங்க வுள்வண், டிகழ்மதஞ்செறித்தவிராயிரத்தைஞ்ஞூறிளையவுமத்துணைக்களிறே.

இவையிரண்டும் ஒருதொடர்.

அபராகாத்திரத்திற்கு, "கடாந்திறந்து" (காந்த. ௩௧௪) என்னுங்கவியிற் கூறினும்.

இ - ள். கை, பின்கால், முன்கால், தாலவட்டம், கொம்பென்கின்ற ஐந்தானுங்கொல்வன, சங்கையும் பாலையும் வெண்மையாற்கெடுத்த உகிரை யுடையன, புலிமுழக்கினால் எதிரேமுழங்கி அதனைக் காணாமையின், அது தங்குமலையைக்கிழிக்குந்திறல, எழுமுழமுந் திருந்தி நிலந்தோயுமுறுப்புமூன் றுநிலந்தோய்வன, சிறந்தன, புடையன, மலைவனவாய்ச் சொரிகின்றநீரை யுடையமேகமனைய மதத்தவாகியநாகம் மூவாயிரத்தறுநூறு; புகழும் பரு ந்துமார்ப்ப, மதம்பொழிதற்குநின்றன இரண்டாயிரம்; கவுளைவண்டிகழும் படி மதமடைத்தன இரண்டாயிரத்தைஞ்ஞூறு; களிற்றுக் கன்றுகள் இரண் டாயிரத்தைஞ்ஞூறென்க.

ஆக யானை பதினாயிரத்தறுநூறு. எழும் திருந்தியெனமுடிக்க. உறுப்பு மூன்றாவன: கையும், கோசமும், தாலவட்டமும். இவற்றோடு கால்நான் குங்கூட்டி ஏழுறுப்பு நிலந்தோயுமென்பாருமுளர். (௫௩ - ௪)

2156. குந்தமேயயில்வாள் குனிசிலைமூன்றுங்குறைவிலார்கூற்றொ டும்பொருவா, ரந்தரமாறுயானைகொண்டேறப்பறக்கெனிற்பறந்திடு ந்திறலார், முந்தமர்தம்முண்முழுமெயுமிரும்புமேய்ந்திட வெஞ்சமம் விளைத்தார், கொந்தழலஞ்சாக்குஞ்சரமிவர்ந்தார்கோடியேவிருத்தியா வுடையார்.

இ - ள். தீக்கு அஞ்சாத குஞ்சரங்களை யேறினவர்கள் எறிகோல், வாள், வில்லென்கின்ற மூன்றிலுந் தாழ்வற்றவராய்க் கூற்றோடும்பொருமவ ராய் அந்தரம்வழியாக ஏறும்படி யானையைக்கொண்டு பறக்கவென்னிற் பறக்குந்திறலாராய் முற்பட்டபோரிலே மெய்ம்முழுதும் இரும்புமேயும்படி சமரத்தைவிளைத்தவராய்க் கோடிபொன்னைச் சீவிதமாகவுடையாராயிருப்

2157. குங்கும நறுநீர்பந்தி நின்றாடுங்குதிரை யாறாயிரத் திரட்டி, பொங்குவெண்மயிர்சூழ்பொற்படைபொலிந்தவறுபதினாயிரம்புரவி,

வெங்கணைதவிர்ப்ப வெள்ளி வெண்படைய வாய்விடினில வரைநில் லாப், பைங்கதிர்க்கொட்டைக்கவரிசூழ்ந்தணிந்தபகரினத்தொகைய னபாய்மா.

இ - ள். புறப்படாமற் பந்தியிலேநின்று குங்குமங்கலந்த பனிநீரையா டும் *நம்பிரான் பன்னீராயிரம்; பொற்கலனையாற்பொலிந்த மயிர்சூழ்பு ரவி அறுபதினாயிரம்; தம்மேலிருந்து எய்த அம்பைப் பின்னிடுவன, வெள்ளி க்கல்லணையுடையன, குசையை நெகிழவிடிற் பறப்பனவாய்ச் சூழ்ந்து கவரி யணிந்த பாய்மாக் கூறின், அறுபதினாயிரமென்கின்ற எண்ணையுடையவா யிருக்குமென்க.

ஆகக்குதிரை நாறாயிரத்து முப்பத்திராயிரம். (கூக)

2158. வேய்நிறக்கரும்பின்வெண்ணிறப்பூப்போன்மிடைந்தொளிர் குந்தமும்வாளுந், தோநிலையரவின் றேற்றமேபோலுஞ்சிலைகளும்பி றகளுந்துறைபோ, யூனமொன்றில்லாருயர்குடிப்பிறந்தாராயிரமடிக ளங்கண்டார், பானிலாப்பூணார்படைத்தொழிற்கலிமாப்பண்ணுறுத் தேறினாரவரே.

இ - ள். மூங்கில்போலுங் கரும்பினது பூப்போலுங் குந்தமுதலியவற் றையும் ஒழிந்தவற்றையும் முற்றக்கற்றுப் பிறகுறைவற்றார், குடிப்பிறந்தார், களங்கண்டார், பூணாராகியவவர் அம்மாவைப் பண்ணி யேறினாரென்க.

தோம் - குற்றம். இனி யேறினாராகியவவர் இத்தன்மையரென்றுமாம்.

வேறு.

2159. க. தறுகணாண்மையதாமரைநிறத்தனதகைசான்
மறுவில்வான்குளம்புடையனமாளவத்தகத்த
பறையினொலிபடுகினைநாவலின்கனிபோற்
குறைவில்கோலத்தகுளிர்புனற்சிந்துவின்கரைய.

2160. உ. பாரசூரவம்பல்லவமெனும்பதிப்பிறந்த
வீரவாற்றலவிளைகடுந்தேறலினிறத்த
பாரிற்றேர்செலிற்பழிபெரிதுடைத்தெனநாணிச்
சோரும்வார்புயறுளங்கவிண்புகுவனதுரகம்.

இவையிரண்டும் ஒருதொடர்.

இ - ள். மாளவதேசத்திடத்தனவாகியதுரகம் ஆண்மைய, நிறத்தன, வெண்குளம்புடையனவாயிருக்கும்; சிந்துவின்கரையனவாகியதுரகம் பறை யொலிபோல முழங்குவ, நாவலின்கனிபோலுங் கோலத்தவாயிருக்கும்; பார

* உத்தம இலக்கணமமைந்த குதிரையை நம்பிரானென்றல் மரபு. இது வைஷ்ணவ ஸம்பிரதாயத்திலும் வழங்குகின்றது.

சூரவம் பல்லவமென்னும் பதியிற்பிறந்ததுரகம் ஆற்றல், நிறத்த, விண்புகு வனவாயிருக்குமென்க.
வீரத்தைநடத்துதலேயுடையன. (ருஅ - கூ)

2161. பீலிமாமயிலெருத்தெனப்பெருவனப்புடைய
மாலேமாரட்டத்தகத்தனவளரிளங்கிளியே
போலுமேனியபொருகடற்கலத்தின்வந்திழிந்த
கோலநீர்ப்பவளக்குளம்புடையனகுதிரை.

மாலே - ஒழுங்கு. மாரட்டமென முதலெழுத்தை நெடிலாகவோதுக; * மரட்டம்.
இ - ள். மாரட்டதேசத்திடத்தனவாகிய குதிரைகள் மயிற்கழுத்துப் போலும் நிறத்தனவாயிருக்கும்; கலத்தின்வந்திழிந்தன குதிரைகள் கிளிபோலுநிறத்தனவாய்ப் பவளக்குளம்புடையனவாயிருக்குமென்க. (கூo)

2162. இன்னபொங்குளைப்புரவிபண்ணுறுத்தனவியறேர்
பொன்னும்வெள்ளியுமணியினும்பொலிந்துவெண்மதியந்
தன்னேயூர்கொண்டதகையனதொகைசொலினறுநூ
றென்னுமீறுடையிருபதினுயிரமிறையே.

மதி - குறட்டிற்குவமம். † பரிவேடிப்பு - சூட்டிற்குவமம்.
இ - ள். தகையனவாய்ப் பொன்முதலியவற்ருற்புனேயப்பட்டு இத் தன்மையவாகிய புரவிபண்ணுறுத்தனவாகிய தேர்த்தொகைசொலின், அறுநூறென்னுமெண்ணினே யீற்றிலேயுடைய இருபதினுயிரமென்க.
இறையே, விளி. (கூக)

2163. நொச்சிமாமலர்நிறத்தனநொடிவருமுந்நீ
ருச்சிமாக்கதிர்போற்சுடுமொளிதிகழுயில்வா
ளெச்சத்தல்லவுமெறிபடைபயின்றுதம்மொன்ஞர்
நிச்சங்கூற்றினுக்கிடுபவர்தேர்மிசையவரே.

புகரால் நொச்சிமலர்போலு நிறத்தனவாய் முந்நீரைமாக்கதிர் உச்சியிற் சுடுமாறுபோலச் சுடும் ஒளிதிகழ்வாளென்க. எச்சத்துநொடிவருமென்க.
இ - ள். தேராட்கள், தமக்குரிய வில்லொழிந்தவிடத்துக் கற்றற்குரிய வென்று கூறுதல்வரும் வாளேயும் அல்லாதபடைகளேயும் உட்படப்பயின்று தம்பகைவரை நிச்சம் கூற்றிறுக்கு விருந்தாக இடுபவராயிருப்பாரென்க. ()

வே று.

2164. க. எயிற்றுப்படையாண்மையினினிடிக்கும்புலியொப்பார்
பயிற்றியவில்வாள்பணிக்கும்வேலொடிடன்வல்லார்

* மகாராஷ்ட்ரமென்பது மரட்டமெனப் பிராகிருதத்தில் வழங்குகின்றது.
† பரிவேடிப்பு-பரிவேஷத்திலிருந்துண்டாயது; சுற்றியதென்பது பொருள்.

துயிற்றியபல்கேள்வியினர்தூற்றிக்கொளப்பட்டா
ரயிற்றுப்படையார்கண்மதயானைகதனறுப்பார்.
2165. உ. காலனொடுசூழ்ந்தகடுநோய்களையுமொப்பா
ராலுங்கடறார்த்தன்மலையகழ்தலிவைவல்லார்
ஞாலமறியாண்டொழிலர்நான்கிலக்கமுள்ளார்
மேலுநுமராலுரிமையுட்சிறப்புப்பெற்றார்.

இவையிரண்டும் ஒருதொடர்.

இ - ள். தமதாண்மையால் எயிறுகிய படையையுடைய புலியையொப்பார், வில்லையும் வாளையும் பிறர் தம்பக்கலிலேகற்கும்படி வேலோடேகூட வல்லார், தம்மிடத்தே தங்கப்பண்ணிய பலநூற்கேள்வியினையுடையார், தெரிந்துகொள்ளப்பட்டார், வேலினதுவலியாலே பகைவரதுயானையைக் கதனறுப்பார், வருத்திக்கோறலிற் காலனையும் பற்றினநோயையுமொப்பார், செருக்கினாற் கடல்தூர்த்தல் மலையகழ்தலென்கின்ற இத்தொழிலைவல்லார், ஆண்டொழிலர், நுமராற் சிறப்புப்பெற்றாராகியவர் நான்குநூறாயிரமென்னும் எண்ணிடத்தாரென்க.

எயிலதுதுப்பை யடைகின்றவலியினாலென்றுமாம். (௬௩ - ௪)

2166. சிங்கத்துரிபோர்த்தசெழுங்கேடகமும்வாளும்
பொங்குமயில்வேலும்பொருவில்லுமுடன்பரப்பி
மங்குலிடைமின்னுமதியுஞ்சுடரும்போல
வெங்கட்டொழிற்கூற்றுமரண்சேரவிரிந்தன்றே.

கேடகத்திற்கு ஞாயிறும், வாளிற்கும் வேலிற்குமின்னும், வில்லிற்குப் பிறையுமுவமை.

இ - ள். இக்காலாட்படையும் கேடகமுதலியவற்றைப்பரப்பிக் கூற்றும் தனக்கு ஓரரணைச்சேரும்படி விரிந்ததென்க. (௬௫)

வேறு.

2167. செம்பொனீண்முடித்தேர்மன்னர்மன்னற்குப்
பைம்பொனாழிதொட்டான்படைகாட்டினா
னம்பொனொண்கழலானயிராவணம்
வெம்பவேறினன்வெல்கெனவாழ்த்தினார்.

ஆழிதொட்டான் - * ஏனாதிமோதிரஞ்செறித்த சேனாபதி.

இ - ள். அங்ஙனம் படையைக்காண்கின்ற மன்னர்மன்னற்கு ஆழிதொட்டான், இறையே! மதத்தவாகியநாகம் அறுபதிற்றறுபது, மதம்பொழி

* ஏனாதியென்பது அரசனாற் கொடுக்கப்படும் பட்டம்: வெண்பா. "போர்க்கட லாற்றும் புரவித்தேர்ப் பல்படைக்குக்-கார்க்கடல் பெற்ற கணாயன்றோ - போர்க்கெல்லாந் - தானாதி யாகிய தார்வேந்தன் மோதிரஞ்சே - ரேனாதிப் பட்டத்திவன்." என்பதனாலுணர்க.

வானின்றன ஈராயிரம், மதஞ்செறித்தன ஈராயிரத்தைஞ்ஞூறு, இளையகளிறும் ஈராயிரத்தைஞ்ஞூறு; இக்குஞ்சரங்களையேறினவர்கள் கோடியேவிருத்தியாவுடையராயிருப்பார்; குதிரை யாறுயிரத்திரட்டி, புரவி யறுபதிறுயிரம், பாய்மாவும் அறுபதிறுயிரமாயிருக்கும்; பூணுராகியவவர் அம்மாவைப் பண்ணியேறினுர்; மாளவத்தகத்தனவாகியதுரகம் ஆண்மைய, நிறத்தன, வெண்குளம்புடையனவாயிருக்கும்; சிந்துவின் கரையனவாகியதுரகம் ஆலுவ, கோலத்தனவாயிருக்கும்; பாரசூரவம் பல்லவமென்னும் பதியிற் பிறந்ததுரகம் ஆற்றல, நிறத்தன, விண்புகுவனவாயிருக்கும்; மாரட்ட தேசத்தகத்தனவாகிய குதிரை மயிற்கழுத்துப்போலு நிறத்தனவாயிருக்கும்; மரக்கலத்தின்வந்திழிந்தகுதிரைகள் கிளிபோலு நிறத்தவாய் பவளக்குளம்புடையனவாயிருக்கும். இப்புரவிபண்ணுறுத்த தேர் இருபதிறுயிரத்தறுநூறு. இத்தேராட்கள் கூற்றினுக்கு இடேவராயிருப்பவர்: சிறப்புப்பெற்றுராகியவவர் நான்குநூறுயிரமென்னுமெண்ணிடத்தார். இக்காலாட்படையும் கூற்றும் அரண்சேரும்படி பரந்ததென்றுசொல்லிப் படைகாட்டினுன்; அதுகண்டு அவனும் ஐராவணத்தைக் கடுகவேறினுன்; அப்பொழுது வெல்க வென்று வாழ்த்தினுரென்க.

இவ்வியானைக்கு இது பெயர். (௬௬)

2168. சிறுவெண்சங்குமுரன்றனதிண்முர
சறையுமாக்கடல்காரெனவார்த்தன
நெறியினல்கினபுள்ளுநிமித்தமு
மிறைவன்கண்வலனுடிற்றியைந்தரோ.

இ - ள். அப்பொழுது சங்குமுழங்கின; முரசு கடலும் காருமென ஆர்த்தன; நெறியிலே பறவைகளும், நிறைகுடமுதலியனவும் நன்மையேயறிவித்தன; இறைவன்வலக்கண் பலகாலும் துடித்ததென்க. (௬௭)

2169. மல்லல்யானைக்கறங்குமணியொலி
யல்லதைங்கதிமான்கொழுந்தாரொலி
கல்லெனுர்ப்பொலிமிக்கொளிர்வாண்மினிற்
செல்லுமாக்கடல்போன்றதுசேனையே.

இ - ள். சேனை, இவ்வொலிகளுமிக்கு வாளொளியோடேநடப்பதொரு கடலையொத்ததென்க.

"விக்கிதம் வற்கிதம் வெல்லு முபகண்ட, மத்திமஞ் சாரியோ டைந்து."

2170. மாலைமாமதிவெண்குடைமல்கிய
கோலக்குஞ்சிகிழற்குளிர்பிச்சமுஞ்
சோலையாய்ச்சொரிமும்மதத்தானிலம்
பாலைபோய்மருதம்பயந்திட்டதே.

இ - ள். பாலைநிலம்; குடையாலும் குஞ்சியாலும் பிச்சத்தாலும் குளிர் நிழற்சோலையாய், மதத்தாலே பாலைத்தன்மைபோய் மருதத்தன்மையை உண்டாக்கிற்றென்க. (சுக)

2171. மன்றன்மாமயிலார்த்தெழமானினங்
கன்றிணேடுகலங்கினகாற்பெய
வென்றிவேற்படையஞ்சிவனத்தொடு
குன்றெலாங்குடிபோவனபோன்றவே.

இ - ள். பெடையோடுகூடுகின்ற மயில்களெல்லாம் ஆர்த்தெழுதலாலும், மானினங்களெல்லாம் கன்றோடே கலங்கியோடுதலாலும், படைக்கு அஞ்சிக் காடும் மலையும் குடிபோவனபோலேயிருந்தனவென்க. (எ0)

வேறு.

2172. படுகண்முழவினிமிழருவிவரையுங்காடும்பலபோகி
யிடுமண்முழவினிசையோவாவேமாங்கதநாடெய்தியபி
னெடுவெண்ணிலவினெற்றித்தோய்நிழலார்செம்பொற்புரிசையே
கடிமண்காவல்கருதினன்கோயிலாகக்கருதினன்.

இ - ள். சீவகன்காத்தற்றொழிலையுடைய மண்ணை அவன்காக்குமாறு கருதிய கோவிந்தன், அருவியையுடைய பலவரையையும் காட்டையும்போய் ஏமாங்கதத்தைச்சேர்ந்தபின்பு புரிசையின்புறத்தையே தனக்குக் கோயிலாகக்கருதினனென்க.

மதிற்புறத்தே விட்டான். (எக)

2173. போகமகளிர்வலக்கண்கடுடித்தபொல்லாக்கனுக்கண்டா
ராகமன்னற்கொளிமழுங்கிற்றஞ்சத்தக்ககுரலினற்
கூகைகோயிற்பகற்குழறக்கொற்றமுரசம்பாடவிந்த
மாகநெய்த்தோர்சொரிந்தெங்குமண்ணும்விண்ணுமதிர்ந்தவே.

இ - ள் அவன்விட்டபொழுது கட்டியங்காரன் தேவிமார்வலக்கண் துடித்த; அவர் கனுக்கண்டார்; அவற்குமேனி ஒளிகெட்டது; அவையே யன்றிக் கூகைகோயிலிலே பகலேயிருந்து அஞ்சுதக்ககுரலாலேகுழற, முரசு ஒலியவிய, மாகத்தினின்றும் குருதிசொரிய, மண்ணும்விண்ணும் அதிர்ந்த

பூகம்பமும், வெள்ளிடியும். (எஉ)

2174. கூற்றம்வந்துபுறத்திறுத்ததறியான்கொழும்பொனுலகாள்வான்
வீற்றிங்கிருந்தேனெனமகிழ்ந்துவென்றிவேழமிருநூறுங்
காற்றிற்பரிக்குந்தேர்நூறுங்கடுங்காலிவுளியாயிரமும்
போற்றிவிடுத்தான்புனைசெம்பொற்படையேயணிந்துபுனைபூணன்.

இ - ள். பட்டுப்போய்ப் பொன்னுலகை ஆளுதற்குரியானாகியபூணான், சீவகன்வந்து தன்னைக்கோறற்குப் புறத்திருந்ததறியானாய் இனிக் கோவிந்தனையுங்கொன்று வீற்றிருந்தேனன்றோவென்றாகருதித் தன்னினைவுமுடிந்ததென்று தன்னைப்போற்றி மகிழ்ந்து வேழமுதலியவற்றைப் பொற்படைகளாலேயணிந்து கோவிந்தனுக்குப் போகவிட்டானென்க.

பொன்னுலகாளுதற்கென்றுமாம். (௭௩)

2175. மன்னனுங்கோர்மதவேழம்வாரிமனாளனென்பதூஉ
மின்னுங்கொடித்தேர்விசயமும்புரவிபவனவேகமும்
பொன்னிற்புனைந்துதான்போக்கநிகழ்வதோரான்மகிழ்வெய்தி
முன்யான்விட்டவினக்களிற்றினிரட்டிவிடுத்தானெனப்புகழ்
[ந்தான்.

இ - ள். அவற்றிற்குசிகராகக் கோவிந்தன்றான் வேழங்களில் வாரிமனாளனென்னும் வேழத்தையும், தேர்களிலே விசயமென்னுந்தேரையும், புரவிகளிற் பவனவேகமென்னும்புரவியையும் அணிந்து அவனிடத்தேபோகவிட, மகிழ்ந்து யான்முன்களிற்றோடே போகவிட்டனவற்றின் இரட்டித்த சிறப்புடையனவற்றை வரவிட்டானென்று கட்டியங்காரன் புகழ்ந்தானென்க.

நின்பெரும்படை என்சிறுபடைக்கு நிகர்க்குமென்பதுதோன்ற வரவிட்டானென்றுணராமையின், நிகழ்வதோரானென்றார். (௭௪)

வேறு.

2176. வீங்குநீர்விதையத்தார்கோன்கட்டியங்காரன்றன்னோ
டாங்கவனொருவனாகியன்பெனுமயில்கொள்வாளால்
வாங்கிக்கொண்டுயிரையுண்பான்வஞ்சத்தாற்சூழ்ந்தவண்ண
மோங்குநீரோதவேலிக்குணரயாமுரைத்துமன்றே.

இ - ள். கோவிந்தன் கட்டியங்காரன்றன்னோடு கூடியிருந்து அன்பென்னும் கூர்மைகொண்டவாளாலே அவனுயிரை அவ்விடத்தே வாங்கிக் கோடற்கு வஞ்சனையாலே சூழ்ந்தசெய்தியை யாம் உலகிற்கு அறிய உரைப்பேமென்றாரென்க.

அன்பென்றது சீவகனை ; ஆகுபெயர். (௭௫)

2177. பெருமகன்காதற்பாவைபித்திகைப்பிணையன்மாலை
யொருமகனோக்கினுயிரொடும்போகடாத
திருமகளவட்குப்பாலானருந்திரிபன்றியெய்த
வருமகனுகுமென்றுங்கணிமுரசறைவித்தானே.

இ - ள். கோவிந்தன் அன்புவைத்தபாவையாகிய ஒப்பில்லாதமகள், தன்னை நோக்கினானை உயிரைவாங்குந்திரு, அவட்குக்கணவனாவான் எய்தற்கரிய திரிபன்றியெய்த அரியமகனுமென்று முரசைச் சாற்றுவித்தானென்க.

2178. ஆய்மதக்களிறுதிண்டேரணிமணிப்புரவியம்பொற்
காய்கதிர்ச்சிவிகைசெற்றிக்கலந்தவைநுழைகளாகத்
தோய்மழையுலகவெள்ளந்தொன்னகர்த்தொக்கதேபோ
லாய்முடியரசவெள்ளமணிநகரீண்டிற்றன்றே.

உலகவெள்ளம் - உலகத்தைக்கொள்ளும்வெள்ளம்.

இ - ள். செறிந்த நீரையுடைய உகாந்தவெள்ளம் வரைகளோடு நகரிலே தொக்கதுபோலே அரசவெள்ளம் களிறுமுதலியனசெற்றிக் கலந்தவை நுழைகளாகக்கொண்டு அணிநகரிலே ஈண்டிற்றென்க. (௭௭)

2179. நல்லவள்வனப்புவாங்கநகைமணிமாலைமார்பர்
[illegible]
சொல்லுமினெமக்குமாங்கோர்சிலைதொடநாளென்பாரும்
பல்சரம்வழங்குவாரும்பரிவுகொள்பவருமானார்.

இ - ள். தம்மை இலக்கணையது அழகு மனத்தை வலிவித்தலின், அவ்வரசர் அன்றே வில்லையெய்யத்தொடங்குவாரும், திருத்துவாரும், எமக்கும் அவ்விடத்தே சிலைதொட நாட்சொல்லுமினென்பாரும், வழங்குவாரும், இவையுமறியாதே பரிவுகொள்வாருமாயினரென்க.

வாங்க - இழுக்கவென்றுமாம். (௭௮)

2180. பிறையெயிற்றெரிகட்பேழ்வாய்ப் பெருமயிர்ப்பைம்பொற்ப
யறையெனத்திரியுமாய்பொற்பூமியினிறைந்துமன்ன [ன்றி
ருறுகணையொன்றும்வில்லுமுடன்பிடித்துருவநேமிப்
பொறிதிரிவதனைநோக்கிப்பூமுடிதுளக்கினின்றார்.

அறை - * பத்திராலாபனம்.

இ - ள். எயிறுமுதலியவற்றையுடைய பொற்பன்றி, என்னை யாவராலும் எய்யவரிதென்று சாற்றுகின்றதென்னத்திரியுமந்நிலத்தே மன்னரெல்லாம்நிறைந்து கணையொன்றையும் வில்லையும் சேரப்பிடித்துச் சக்கரத்தினுள்ளே பன்றிதிரிவதனை நோக்கித் தலையசைத்துநின்றாரென்க. (௭௯)

2181. ஏந்தெழிலாகஞ்சாந்தினிடுகொடியெழுதிக்காதிற்
காய்ந்தெரிசெம்பொற்றோடுங்கனமணிக்குழையுமின்ன
வேந்தருள்விணிதைவேந்தன்வெஞ்சிலைதளரவாங்கி
யாய்ந்தபொற்பன்றிநெற்றியருந்துகளார்ப்பவெய்தான்.

இ - ள். அவ்வரசரில், விணிதையிலரசன் தனதாகத்தே எழுதுகொடியைச் சாந்தாலேயெழுதிக் காதிலே தோடுங்குழையுமின்ன வில்லைவளைய வாங்கிப் பன்றியினெற்றியிலே அம்புபட்டுத் துகளெழ எய்தானென்க. (௮௦)

* பத்திராலாபனம் - தான் துன்பமடையாதிருத்தலைச்சொல்லுதல்.

2182. குடர்தொடர் குருதிக்கோட்டுக்குஞ்சரநகரத்தார்கோன்
சுடர்நுதற்பட்டமின்னச்சுரும்பிமிர்கண்ணிசிந்த
வடர்கதிர்ப்பைம்பொற்பூணுமாரமுமகலத்தொல்கப்
படர்சிலைகுழையவாங்கிப்பன்றியைப்பதைப்பவெய்தான்.

குடர்தொடர்ந்த குருதிக்கோடு, குஞ்சரமென்றபெயர்க்கு அடை. குஞ்சரநகரம் - அத்தினபுரம். அடர் - நெருக்கம்.

இ - ள். கோன், மின்னச் சிந்த ஒல்க வில்லை வளையவாங்கிப் பன்றியைத் துளங்கவெய்தானென்க. (௮௧)

2183. வார்மதுத்துளிக்குமாலைமணிமுடித்தொடுத்துநாலக்
கார்மதங்கடந்தவண்கைக்காம்பிலிக்காவன்மன்ன
னேர்மதக்கேழலெய்வானேறலும்பொறியினேறுண்
டார்மதக்களிற்றுவேந்தர்க்கருநகையாகவீழ்ந்தான்.

இ - ள். காரினதுசெருக்கைவென்ற கையினையுடைய காம்பிலியின் மன்னன், கேழலை எய்யவேண்டி முடியிற்கட்டி மதுத்துளிக்குமாலைநாலும்படி விசையுடனே சக்கரத்தே ஏறினவளவிலே அதன்விசையினாலே ஏறுபட்டு வேந்தர்க்கு ஒருநகையாக வீழ்ந்தானென்க. (௮௨)

2184. முலைவட்டப்பூணுமுத்துமூழ்கலிற்கிழிந்துபொல்லா
விலைவட்டத்தாமமார்பிற்கோசலத்திறைவனெய்த
குலைவட்டக்குருதியம்புவானின்மேற்பூசலுய்ப்பான்
சிலைவட்டநீங்கிவிண்மேற்செவ்வனேயெழுந்ததன்றே.

முலையிடத்துவளைந்தபூணும் முத்தும்படுதலிற் பூக்கிழிந்து பொல்லாதாகியதாமம்; இனிப் பொல்லாமுத்தென்று கூட்டித் துளையிடாத நாயகமுத்தென்றுமாம். குலைவட்டம் - அம்பிற்குதை.

இ - ள். கோசலநாட்டின் இறையவனெய்தவம்பு, வானிடத்தே பூசலைச்செலுத்துதற்கு வில்லின்வட்டத்தினின்றுநீங்கி நேரே எழுந்ததென்க. ()

2185. ஊடியமடந்தைபோலவுறுசிலைவாங்கவாரா
தாடெழுவனையதிண்டோளவந்தியனதனைநோனா
னாடெழுந்தார்ப்பமற்றந்நன்சிலைமுரித்திட்டம்பை
வாடினன்பிடித்துநின்றான்மணமகன்போலநின்றான்.

ஆடு - வெற்றி.

இ - ள். அவந்தியின்வேந்தன், தன்சிலை ஊடியமடந்தையைப்போலே வளைக்க வளையாதாக அதனைப்பொறானாய் அச்சிலையை வலியுடனேவாங்கி நாடார்ப்ப முரித்து அம்பையேபிடித்து வாடினனாய்நின்றான்; நின்றவன் மணமகன்போல நின்றானென்க. (௮௪)

2186. பில்கித்தேனொழுகுங்கோதைப்பிறர்மனையாள்கட்சென்ற
வுள்ளத்தையுணர்வின்மிக்கானொழித்திடப்பெயர்ந்ததேபோன்
மல்லனீர்மகதராசன்றுரந்தகோன்மருளவோடிப்
புல்லியப்பொறியைமோந்துபுறங்கொடுத்திட்டதன்றே.

இ - ள். பிறர்மனையாளிடத்துச்சென்றநெஞ்சை அறிவான்மிக்கான் மீட்க, அது மீண்டாற்போலே மகததேயத்தரசன் எய்தகோல் கண்டார் இதுபடுமென்றுமருளும்படி ஓடி அப்பொறியைப்பொருந்தித் தீண்டி மீண்டு போயிற்றென்க. (௮௫)

2187. தென்வரைப்பொதியிலாரமகிலொடுதேய்த்ததேய்வை
மன்வரையகலத்தப்பிமணிவடந்திருவில்வீச
மின்னெனவிட்டகோலைவிழுங்கக்கண்டழுங்கிவேர்த்துக்
கன்மலிந்திலங்குதிண்டோட்கலிங்கர்கோன்மெலிந்துமீண்டான்.

இ - ள். கலிங்கத்தினரசன், ஆரம் அகிலொடுதேய்த்த குழம்பையப்பி வடம்மின்னெனவில்லைவீசாநிற்க எய்தகோலைப் பொறி விழுங்கக்கண்டு இரங்கி வேர்த்து மேனிமெலிந்து மீண்டானென்க. (௮௬)

2188. கன்மழைப்பொற்குன்றேந்திக்கணநிரையன்றுகாத்து
மன்னுயிரின்றுகாக்கும்வாரணவாசிமன்னன்
மின்னிழைசுடரவாங்கிவிட்டகோலுற்றுருதாய்

இ - ள். அன்று கன்மழைக்குக் குன்றையேந்தி நிரையைக்காத்து இன்று உயிரைக்காக்கும் வாரணவாசியின்மன்னனெய்தவம்பு, அதனிடத்தே அழுந்தநாணிச் சிறிதுற்று மிகவுருதாய் மக்கள் தம்மேலேவருமென்று நடுங்கும்படி போய் மண்புக்கு மறைந்ததென்க. (௮௭)

2189. எரிகதிர்ப்பைம்பொற்சுண்ணமிலங்கமெய்ம்முழுதுமப்பிப்
புரிகழலணிந்தகோன்றாட்போதனபுரத்துவேந்த
னரிதினிற்றிகிரியேறித்திரிந்துகண்சுழன்றுசோர்ந்து
விரிகதிர்க்கடவுள்போலவெறுநிலத்தொலிப்பவீழ்ந்தான்.

இ - ள். சுண்ணத்தையப்பிக் கழலையணிந்தகாலையுடைய போதனபுரத்தின் வேந்தன் சக்கரத்திலே அரிதாகவேறி அது கொள்ளிவட்டம்போல் திரிதலின், அதில் நிற்றலாற்றாதே கண்சுழன்று சோர்ந்து பலரும் ஆரவாரிக்கும்படி ஞாயிறு தன்வட்டத்தினின்றும் நிலத்தேவீழ்ந்தாற்போல வீழ்ந்தானென்க. (௮௮)

2190. மலையச்செஞ்சாந்துமுந்நீர்வலம்புரியீன்றமுத்து
மிலைவைத்தகோதைநல்லாரிளமுலைப்பொறியுமார்ந்து

சிலைவைத்தமார்பிற்றென்னன் றிருமணிப்பன்றிநோக்கித்
தலைவைத்ததம்புதானுந்தரணிமேற்பாதம்வைத்தான்.

இ - ள். சார்தும் முத்தும் முலைத்தழும்பும் நிறையப்பட்டு மலையை யொப்பாகவைத்த மார்பிற்றென்னனெய்தவம்பும் பன்றியைநோக்கிச் சென்று தலைவைத்தது; தானும் நிற்றலாற்றாது நிலத்திலே காலைவைத்தானென்க. (அகூ)

2191. விற்றிறல்விசயனென்பான்வெங்கணைசெவிட்டிநோக்கி
யொற்றுபுதிருத்திக்கைம்மேலுருட்டுபுநேமிசேர்ந்தாங்
குற்றதன்சிலையின்வாய்ப்பெய்துவெமைபகழிவாங்க
விற்றுவின்முறிந்துபோயிற்றிமைப்பினிலங்கித்திட்டான்.

இ - ள். விசயன், தன்கணையை ஒருக்கடித்துநோக்கி இடக்கைமேலே யமுக்கித் திருத்தி உருட்டாநின்று நேமியிலேகுதித்துத் தனக்குற்றவில்லிலே தொடுத்துச் சிறகமைந்த பகழியைவாங்கினாக, வில் இரண்டாய் முறிந்து போயிற்று; ஒருகணத்திற் குதித்தானென்க. (௬௦)

2192. குண்டலமிலங்கவாங்கிக்குனிசிலையுறையினீக்கிக்
கொண்டவன்கொழும்பொற்றாருமாரமுமிளிரவேறிக்
கண்டுகோணிறையவாங்கிக்காதுறமறிதலோடும்
விண்டுநாணற்றதாங்கேவிசயனும்வீக்கமற்றான்.

இ - ள். அவன் குண்டலமிலங்கும்படி சேமவில்லைவாங்கிக்கொண்டு உறையினின்றுநீக்கித் தாரும் ஆரமும் பிறழவேறிப் பன்றிமூன்றும் கூடுங் காலத்தைக்கண்டு கோலைநிறையவாங்குதலாலே, அது காதிலேசெல்லமறி கின்றவளவிலே நாண் அற்றது; அப்பொழுதே எய்கின்றகருத்தைக் கைவிட்டு விசயனும் தன்பெருமைகுறைந்தானென்க.

விண்டு, விகாரம். சீவகனிடத்தே கற்றலின், எய்தற்குரியனாகிய இவற்கு ஊழ் இங்ஙனஞ் செய்தது. (௬௧)

2193. உளைவனப்பிருந்தமான்றேரொளிமுடிமன்னரெல்லாம்
வளைவனப்பிருந்ததோளாள் வருமுலைப்போகம்வேண்டி
விளைதவப்பெருமையோரார்விற்றிறன்மயங்கியாருங்
களைகலார்பொறியையாங்கோராறுநாள்கழிந்தவன்றே.

இ - ள். மன்னர்யாவரும் விற்றிறல்விளைத்தற்குக் காரணமானதவத்தின்பெருமை நமக்கில்லையென்றோராராய்த் தோளாளுடைய முலைப்போகத்தைவிரும்பி அறிவுமுதலியனகலங்குதலிற் பொறியைக்களையாராக, இப்படியே ஆறுநாள் சென்றவென்க.

மயங்கி, மயங்க. (௬௨)

வேறு.

2194. பனைக்கையானைமன்னர்பணியப்பைம்பொன்முடியிற்
கனைக்குஞ்சுரும்பார்மாலைதவழ்ந்துமதுவுந்தேனு

நனைக்குங்கழலோன்சிறுவனாம்வெள்வேல்வலவ
னினைக்கலாகாவகையானோராருயிர்மேலெழுந்தான்.

இ - ள். மன்னர்வணங்குதலின், அவர்முடியிற் கனைக்குஞ்சுரும்பும் தேனுமார்ந்த மாலையின்மதுத்தவழ்ந்துநனைக்கும் அடியையுடைய சச்சந்தன் புதல்வனாகிய வேல்வெற்றியையுடையவன் அவர்நினைக்கவொண்ணாத வஞ்சனையாலே பகைவருயிரைக் கொள்ள எழுந்தானென்க.

உம்மை மாறுக. (௧௩)

2195. காரின்முழங்குங்களிறுங்கடலின்முழங்குந்தேரும்
போரின்முழங்கும்புரவிக்கடலும்புகைவாட்கடலுஞ்
சீரின்முழங்குமுரசுமலறுஞ்சிறுவெண்சங்கு
நீரின்முழங்கமுழங்குநீலயானையிவர்ந்தான்.

முன்னின்றஇரண்டின்னும், உவமப்பொரு. போரின், இன் - ஏது. சீரின் - சீரோடு.

இ - ள். களிறுமுதலியன நீர்மையோடே முழங்காநிற்கத் தான் கரிய யானையை மேற்கொண்டானென்க. (௧௪)

2196. கல்லார்மணிப்பூண்மார்பிற்காமனிவனேயென்ன
வில்லார்கடலந்தானைவேந்தர்குழாத்துட்டோன்றப்
புல்லான்கண்ணினோக்கிப்புலிகாண்கலையிற்புலம்பி
யொல்லானெல்லானாகியுயிர்போயிருந்தான்மாதோ.

இ - ள். அவ்வியானையின்மேல்வந்த வேலான், வேந்தர் இவனேகாமனென்னும்படி அவர்குழாத்திலே தோன்றினனாக, தானிற்குமுறைமையில் நிற்கமாட்டாத கட்டியங்காரன் பொருந்தானாய்த் தான் கண்ணானோக்கிப் புலிகாண்கலைபோல் அறிவுமுதலியனபோயிருந்தானென்க. (௧௫)

2197. புலியாப்புறுத்திக்கொண்டேன்போக்கிவிட்டபிழைப்பும்
வலியார்திரடோண்மதனன்னவனைப்பிழைத்தபிழைப்பு
நலியுமென்னைநலியுமென்னக்களிற்றினுச்சி
யிலையார்கடகத்தடக்கைபுடைத்துமெய்சோர்ந்திருந்தான்.

இ - ள். புலியை அகப்படுத்திக்கொண்டயான் அதனை வாளுருவி விட்டதப்பும் என்னைநலியாநிற்கும்; மதனாகிய அவனை இவன் தப்பினதப்பும் என்னைநலியாநிற்குமென்றுகூறிக் களிற்றினுச்சியிலே கையைப்புடைத்து அவசமாயிருந்தானென்க.

யாப்புறுத்திக்கொண்டேனென்றது, அநங்கமாலைகூடத்திற் சீவகன் தனியேவந்தமை கருதி. (௧௬)

2198. மைபூத்தலர்ந்தமழைக்கண்மாழைமானோர்நோக்கிற்
கொய்பூங்கோதைமடவார்கொற்றங்கொள்கென்றேத்தப்

பெய்பூங்கழலான்வேழத்திழிந்துபிறைபோற்குலாய
செய்பூண்சிலைநாணெறிந்தான்சேரார்நாளுக்கனவே

மாழை - இளமை. குலாயசிலை; செய்யப்பட்டசிலை; நாண்பூண்டசிலை.

இ - ள். மை அழகுபெற்றலர்ந்த கண்முதலியவற்றையுடைய மடவார் ஏத்தக்கழலான் இழிந்துநின்று சிலையின் நாணையெறிந்தான்; அப்பொழுதே பகைவர்நாள் உலந்தனவென்க.

பிள்ளைகளையும், அவனையும் சேரக்கோறலின், 'சேரார்' என்றார். ()

வேறு.

2199. கனிபடுமொழியினுடன்காரிகைகவற்றவந்து
குனிசிலைதோற்றமன்னர்கொங்குகொப்புளிக்குநீலப்
பனிமலர்க்காடுபோன்றார்படர்சிலைதொடாதவேந்த
ரினிதினின்மலர்ந்தவேரார்தாமரைக்காடுபோன்றார்.

இ - ள். கனிபோலுமொழியினுளது அழகு கேள்வியான்வருத்துதலின், வந்து சிலைதோற்றமன்னர் ஞாயிறுபோன்ற சீவகனைக்கண்டு நீலத்தின் நெருக்கத்தையொத்தார்; சிலைதொடாதவேந்தர் அவனைக்கண்டு கொங்குகொப்புளிக்கும் தாமரையின் நெருக்கத்தை யொத்தாரென்க. (௯௮)

2200. போர்த்தகல்விசும்பில்வந்துபொறித்திரிபன்றிமூன்று
நீர்த்தகப்புணர்ந்தபோதினெடுந்தகைமூன்றுமற்றுச்
சூர்த்துடன்வீழநோக்கிச்சுடுசரஞ்சிதறவல்லா
னோர்த்தொன்றேபுணர்ப்பநாடியொருபகல்காறுநின்றான்.

போருக்குத் தகுதலையுடைய பன்றி; என்றது ஒன்று இடந்திரிய ஒன்று வலந்திரிகின்ற மாறுபாட்டினை.

இ - ள். நெடுந்தகை, பொறியாலே விசும்பிற்றிரிகின்ற பன்றிமூன்றும் வந்து நீர்மைதகப்புணர்ந்தகாலத்து அவை சேர அற்றுச் சுழன்றுவிழும்படி ஓர்த்துப் பல சரத்தைச்சிதறவல்லவன் இப்பொழுது அவைமூன்றும் ஒன்றுந்தன்மையேகூடுதற்குநாடி ஒருமுகூர்த்தத்தளவும் நோக்கி நின்றானென்க.

இவன் குப்புற்று நேமியில் நிற்குங்காலத்து அவையும் ஒன்றுமாதலின், 'ஒன்றேபுணர்ப்ப' என்றார். (௯௯)

2201. பொறியின்மேலேறறேற்றுணிற்போதல்செய்யா
னெறியின்வில்லூன்றிநிற்பநிழன்மணிப்பன்றியற்று
மறியுமோவென்றுமுன்னேமணிமுடிசிதறிவீழ்ந்த
செறிகழன்மன்னர்நக்குத்தீயத்தீவிளைத்துக்கொண்டார்.

இ - ள். திகிரிமேலேறுதலுமறியானுய்ப் போகின் நகுவரென்னுநாணினாற் போதலைச்செய்யானுமாய் வில்லையூன்றிநிற்ப, பன்றி அற்றுவிழுமோ வென்றுகூறி, முன்பு வீழ்ந்தமன்னர் நக்குத் தீயும்படி கோபத்தை விளைத்துக்கொண்டாரென்க.

‘நெறியின்’ என்றார், அத்தொழிற்கேற்ப நின்றநிலைதோன்ற, சிதறி, சிதற. (௧௦௦)

2202. சிரற்றலைமணிகள்வேய்ந்ததிருந்துபொற்றிகிரிசெம்பொ
னுரற்றலையுருவப்பன்றியிடம்வலந்திரியநம்பன்
விரற்றலைப்புட்டில்வீக்கிவெஞ்சிலைகணையோடேந்திக்
குரற்றலைவண்டுபொங்கக்குப்புற்றுநேமிசேர்ந்தான்.

சிச்சிலியின்தலைபோன்ற நிறத்தையுடைய மணிகள்வேய்ந்த உருவப் பன்றி. புட்டில் - விரற்சரடு. குரல் - மயிர்.

இ - ள். திகிரியின்மேலுண்டாகிய உரலிடத்துப் பன்றிகள் இடத்திலும்வலத்திலும திரியாநிற்க, நம்பன் வீக்கி ஏந்தி வண்டுபொங்கும்படி குதித்து அத்திகிரியைச் சேர்ந்தானென்க. (௧௦௧)

2203. ஒள்ளழல்வைரப்பூணுமொளிர்மணிக்குழையுமின்ன
வொள்ளழற்கொள்ளிவட்டம்போற்சுலாய்ச்சுழலப்பொன்னா
ணொள்ளழனேமிநக்கமண்டலமாகநின்றா
னொள்ளழற்பரிதிமேலோர்பரிதிநின்றதனையொத்தான்.

வைரப்பூணும், அழல்போலுமணிக்குழையும், பொன்னாணும் மின்ன நின்றானென்க.

இ - ள். அழலைநக்க நேமி அவ்வழலையுடைய கொள்ளிவட்டம்போலே சுழலாநிற்க, அதன்மேலே மண்டலவிருப்பாகநின்றவன் தானிருத்தற்குரிய மண்டலத்தினுள்ளிராதே அதன்மேலே ஒருஞாயிறுநின்ற தன்மையையொத்தானென்க.

பரிதி - வட்டம்; “பரிதி போகிய புடைகிளை கட்டி” (பதிற். ௭௬.) என்றாற்போலக்கொள்க. (௧௦௨)

2204. அருந்தவக்கிழமைபோலவிறாதவில்லறாதநாண்வாய்த்
திருந்தினார்சிந்தைபோலுந்திண்சரஞ்சுருக்கிமாறா
யிருந்தவன்பொறியும்பன்றியிற்றரும்பொறியுமற்றாங்
கொருங்குடனுதிரவெய்தானூழித்தீயுருமோடொப்பான்.

தவக்கிழமை, இரண்டிற்குமுவமை. இவ்வுவமைகூறிற்று, விசயனுக்கு அவை இற்றும், அற்றும் போனமைகருதி. திருந்தினார் - இருடிகள்.

இ - ள். உருமேற்றையும் தீயையுமொப்பான், தவக்கிழமைபோல இறாதவில்லில் அறாதநாண்வாய்த் தொடுத்தசரத்தை வில்லினுள்ளேயாம்படி நிரம்பவலித்துக் கட்டியங்காரன்நல்வினையும் பன்றியாகியபொறியும் சேரவற்று அவ்விடத்தேவிழும்படி எய்தானென்க.

அதனையெய்தவன்றே அவனும்படுதலின், ‘உடன்’ என்றார். (௧௦௩)

2205. இலங்கெயிற்றேனமேவுண்டிருநிலத்திடித்துவீழக்
கலங்குதெண்டிரையுங்காருங்கலிவளிமுழக்குமொப்ப

வுலம்புபுமுரசங்கொட்டியொய்யெனச்சேனையார்ப்பக்
குலம்பகர்ந்தறைந்துகோமான்கோவிந்தன்கூறினனே.

இ - ள். அப்பன்றி அங்ஙனம் எவுண்டு இடித்து நிலத்தேவிழுதலிற் சேனை கடன்முதலியவற்றையொப்ப முழங்காநின்ற முரசைக்கொட்டி ஆரா நிற்ப, கோமானுகியகோவிந்தன் சீவகன்குலத்தைக் கட்டியங்காரனுக்கு முற் படக்கூறிப் பின்பு எல்லாருமறியச் சாற்றினனென்க.

இனி, குலத்தைப்பகர்ந்து நின்னைக் கொல்வேனென்று வஞ்சினங் கூறினனென்றுமாம். (கoச)

2206. வானிடையொருவன்றோன்றிமழையெனமுழங்கிச்சொல்லுந்
தேனுடையலங்கல்வெள்வேற்சீவகனென்னுஞ்சிங்கங்
கானுடையலங்கன்மார்பிற்கட்டியங்காரனென்னும்
வேன்மிடைசோலைவேழத்தின்னுயிர்விழுங்குமென்றான்.

இ - ள். வானிடத்தேதோன்றிச் சொல்லுமொருவன், சீவகனென் னுஞ்சிங்கம் வேலாகியசோலையில்நிற்கின்ற கட்டியங்காரனென்னும் வேழத்தி னுயிரை விழுங்குமென்று கூறினனென்க.

ஒருவன் - இயக்கன். (கo௫)

வே று.

2207. விஞ்சையர்வெம்படைகொண்டுவந்தாயென
வஞ்சுவலோவறியாயெனதாற்றலை
வெஞ்சமமாக்கிடின்வீக்கறுத்துன்னொடு
வஞ்சனைவஞ்சமறுத்திடுகென்றான்.

இ - ள். விஞ்சையர்படையைக் கொண்டுவந்தாயென்று யான்அஞ்சு வேனே? எனதாற்றலை நின்தந்தையறிவன்; நீயறியாய்; இனி யாம் போர் செய்திட்டால் உன்னையும் என்னைக் களவாற் கொலைசூழ்ந்த கோவிந்தனையும் அக்களவைத்தீர்த்து வீக்கமறுத்திடுவேனென்றானென்க.

வீக்கம் - பெருமை. (கo௬)

2208. சூரியற்காண்டலுஞ்சூரியகாந்தமஃ
தாரழலெங்ஙனங்கான்றிடுமங்ஙனம்
பேரிசையானிசைகேட்டலும்பெய்ம்முகிற்
காரிடிபோன்மதனன்கனன்றிட்டான்.

இ - ள். சூரியகாந்தமாகியவது சூரியனைக்கண்டவளவிலே அழலை எங் ஙனம் காலும்? அதுபோல மதனன் சீவகன்வெற்றியைக் கேட்டவளவிலே கார்காலத்தின் முகிலிடிபோலக் கோபித்தானென்க. (கo௭)

2209. காற்படையுங்களிறுங்கலியாவொடு
நூற்படுதேருநொடிப்பினிற்பண்ணி

நாற்படையுந்தொகுத்தான்மக்கணச்சிலை
வேற்படைவீரரோர்நூற்றுவர்தொக்கார்.

இ - ள். கட்டியங்காரன் காலாளாகியபடையும் களிறும் மாவும் நூல்வழிப்பட்டதேருமாகிய நால்வகைப்படையையும் ஒருகணத்திற்சமைத்துத் தொகுத்தான்; தொகுத்தவளவிலே வேற்படைவீரராகிய அவன்மக்கள் நூற்றுவரும் தொக்காரென்க.

நஞ்சுதோய்த்த அலகையுடைய வேல். (௧௦௮)

2210. விற்றிறலான்வெய்யதானையும்வீங்குபு
செற்றெழுந்தான்படையுஞ்சினமொய்ம்பொடு
மற்றவர்மண்டியவாளமர்ஞாட்பினு
ளுற்றவர்க்குற்றதெலாமுரைக்குற்றேன்.

இ - ள். சீவகன்றானையும், கட்டியங்காரன்படையும், அவர்தாங்களுமுற்று மொய்ம்பொடு மிக்குச்சென்ற வாட்போராகியபோரிலே, அவர்கட்குற்ற செய்திகளெல்லாம் உரைக்கலுற்றேனென்றாரென்க.

உற்றதெல்லாம், ஒருமைப்பன்மைமயக்கம். (௧௦௯)

வேறு.

2211. அத்தமாமணிவரையனையதோன்றல
மத்தகத்தருவியின்மணந்தவோடைய
முத்துடைமருப்பினமுனைக்கண்போழ்வன
பத்தியிற்பண்ணினபருமயானையே.

இ - ள். அத்தகிரியையொத்த தோன்றல; அதனருவிபோல் மத்தகத்தே மணந்த ஓடைய; மருப்பின; பகைப்புலத்தை அவரெதிர்ந்தவிடத்தே கொல்வனவாகிய பருமயானைகள் அணிகளிலே சமைந்தனவென்க. ()

2212. கோல்பொருகொடுஞ்சிலைகுருதிவெம்படை
மேலவரடக்குபுவேழமேறலின்
மாவிருவிசும்பிடைமணந்தவொண்கொடி
கால்பொருகதலிகைக்கானமொத்தவே.

இ - ள். மேலாட்கள் வில்லையும் ஒழிந்தபடைகளையும் வேழங்களின் மேலே அடக்கி அவற்றையேறலின், எடுத்தகொடி காற்றடித்து இலைகிழிந்த கதலிகைக் காட்டையொத்தனவென்க. (௧௧௧)

2213. க. குடையுடைநிழலினகோலமார்ந்தன

யடிதொடை[illegible]தாகை
வடிவுடைத்துகின்முடிவலவர்பண்ணினார்.

2214. உ. கொய்யுளைப்புரவிகள் கொளீஇய திண்ணுகம்
பெய்கயிறமைவரப்பிணித்துமுள்ளுறீஇச்
செய்கயிறாய்ந்தனசிலையுமல்லவுங்
கையமைத்திளைஞருங்கருவிவீசினார்.

இவையிரண்டும் ஒருதொடர்.

இ - ள். மேலேநாட்டின குடையினுடைய நிழலின; அம்புபடாதபடி நாற்றின இடுகுடைத்தாகிய * காப்பின; பொற்றட்டுக் கோலமார்ந்தன; எய்யுங்காலத்து அடிவைத்துநிற்றற்கும், எய்தற்றொழிற்கும் அமைந்தனவாகிய தேர்த்திரளிலே தலைக்கட்டினையுடையபாகர் புரவிகளைப்பூட்டின நுகத்திற்பெய்தகயிற்றைத் தேருடனேபிணித்துப் பண்ணினார்; பண்ணினபின்னர் அவை முள்ளுறுத்திய வாய்க்கயிறும் ஆய்ந்து பிடிக்கப்பட்டன; அப்பொழுது தேர்வீரரும் வில்லையும் ஒழிந்தபடைகளையும் கையிலேயமைத்துக் கவசத்தையணிந்தாரென்க. (கக௨ - ௩)

2215. க. பறந்தியறருக்கினபரவைஞாட்பினுட்
கறங்கெனத்திரிவனகவரிநெற்றிய
பிறந்துழியறிகெனப்பெரியநூலவர்
குறங்கெழுத்துடையனகுதிரையென்பவே.

2216. உ. கொன்னுனைக்குந்தமுஞ்சிலையுங்கூர்நுதி
மின்னிலைவாளொடுமிலேச்சரேறலிற்
பொன்னரிப்புட்டிலுந்தாரும்பொங்குபு
முன்னுருத்தார்த்தெழப்புரவிமொய்த்தவே.

இவையிரண்டும் ஒருதொடர்.

இ - ள். பறந்துசெல்லுஞ்செலவிலே தருக்கின; பரத்தலையுடைய போரிலேதிரிவன; நெற்றிய; நூலவர் பிறந்தவிடமறிகவென்று குறங்கிலே யெழுதின எழுத்தையுடையனவாகிய குதிரைகளை மேலாளாகிய மிலேச்சர் குந்தத்தோடும் வில்லோடும் வாளோடும் ஏறலின், அப்புரவிகள் கெச்சையும் தாருமார்ப்ப மொய்த்தனவென்க.

என்ப, அசை. (கக௪ - ௫)

2217. மாலையுங்கண்ணியுமணந்தசென்னிய
ராலுபுசெறிகழலார்க்குங்காலினர்
பாலிகையிடையறப்பிடித்தபாணியர்
சாலிகையுடம்பினர்தறுகணாளரே.

* இதனை, ரதகுப்தியென்றும், வரூதமென்றுங் கூறுவர் வடநூலார்.

இ - ள். தறுகணாளர், ஆலுபு, சென்னியர், காலினர், * வாண்முட்டியை இடையறும்படிபிடித்த கையினர், கவசமணிந்த உடம்பினராயிருந்தாரென்க.

இவர் காலாட்கள். (௧௧௬)

2218. போர்மயிர்க்கேடகம்புளகத்தோற்பரம்
வார்மயிர்க்கிடுகொடுவள்ளித்தண்டையு
நேர்மரப்பலகையுநிரைத்ததானையோர்
போர்முகப்புலிக்கடல்புகுந்ததொத்ததே.

இ - ள். மயிர்போர்த்த பரிசையையும், கண்ணாடிதைத்தகடகினையும், மயிர்க்கிடுகினையும், பிரப்பங்கொடியாற்பண்ணின பரிசையினையும், வலிய பலகையினையும் நிரைத்த அக்காலாளாகியபடை புலிக்கடல்புகுந்ததன்மையை யொத்ததென்க.

'பரந்தது' எனவும் பாடம். (௧௧௭)

வேறு.

2219. பார்நனைமதத்தபல்பேய்பருந்தொடுபரவச்செல்லும்
போர்மதக்களிறுபொற்றேர்நான்கனைக்கச்சமாகு
மேர்மணிப்புரவியேழாயிலக்கமேழ்தேவகோடி
கார்மலிகடலங்காலாள்கற்பகத்தாரினாற்கே.

இ - ள். சீவகற்குப் பேயும் பருந்தும் பரவச்செல்லும் மதத்தவாகிய களிறும் தேரும் ஒரோவொன்று நான்கனைக்கச்சமாகும்; புரவி ஏழுநூறாயிரமாம்; காலாள் ஏழுதேவகோடியாமென்க.

கச்சம், தேவகோடியென்பன சில எண்ணுப்பெயர்கள். கார் - கறுப்பு.

2220. கிழன்மணிப்புரவித்திண்டேர்கிழறுழாய்க்குனிந்துகுத்து
மழறிகழ்கதத்தயானையைந்தனைக்கச்சமாகு
[illegible]
கழன்மலிந்திலங்குங்காலாள்கட்டியங்காரற்கன்றே.

இ - ள். கட்டியங்காரற்குத் தேரும் யானையும் ஒரோவொன்று ஐந்தனைக்கச்சமாம்; புரவி எழுநூறாயிரமாம்; காலாள் ஏழுதேவகோடியாமென்க.

வேறு.

2221.

மலங்குளைப்புரவியுங்களிறுமாளவு
நிலமகணெஞ்சுகையெறிந்துநையவும்
புலமகன்சீறினன்புகைந்ததெல்கமே.

இ - ள். மகளிர் கோலத்தைக்கைவிடவும், புரவியும் களிறும் படவும் தன்கணவராகிய மன்னர்படுதலின், நிலமகள் நெஞ்சிலே கையாலே அடித்

* வாண்முட்டி - கத்திப்பிடி.

துக்கொண்டுவருந்தவும், சீவகன் சீறினான்; அவனெஃகமும் புகைந்த தென்க-

'புலமகன்' என்றார், ஓர்யாண்டுஞ்சென்றுசீறலின். "நிலமக ளழுத காஞ்சியும்" (புறநா. ௩௬௫) என்றார்புறத்திலும். (௧௨௦)

2222. குணில்பொரக்குளிறினமுரசம்வெள்வளை
பணைபரந்தார்த்தனபம்பைவெம்பின
விணையிலவெழுந்ததாழ்பீலியெங்கணு
முணையினாற்கடலகமுழக்கமொத்தவே.

இ - ள். பெருங்கடிப்பு எறிதலின் முரசம் முழங்கின; வளையும்பணையும் பரந்தார்த்தன; பம்பை ஒலித்தன; சிறுசின்னம் தமக்கொப்பின்றியே யெழுந்தன; இவ்வோசைகளின்மிகுதியாலே எவ்விடத்தொலியும் கடலிடத்து முழக்கையொத்தனவென்க.

பணை - முரசின்விசேடம். பம்பை - ஒருவாச்சியவிசேடம். (௧௨௧)

2223. முடிமனரெழுதருபரிதிமொய்களி
றுடைதிரைமாக்கலமொளிறுவாட்படை
யடுதிறலெறிசுறாவாகக்காய்ந்தன
கடலிரண்டெதிர்ந்ததோர்காலமொத்ததே.

இ - ள். மன்னர் பரிதியாகக் களிறு மரக்கலமாக குதிரை திரையாக வாட்படை சுறாவாகத் தம்மிற் காய்ந்தனவாகிய இரண்டுகடல் போர்செய்தற்கெதிர்ந்ததொரு காலமுண்டாயின் அதனை ஒத்தது, இக்காலமென்க. ()

2224. அருங்கணையடக்கியவாவநாழிகை
பெரும்புறத்தலமரப்பிணித்தகச்சினர்
கருங்கழலாடவர்கருவிவாய்க்கொளீஇச்
சொரிந்தனர்கணைமழைவிசும்புதூர்ந்ததே.

இ - ள். கொடிய கழலையுடையவீரர், கட்டின கச்சினராய் அம்பறாத்தூணி தம்முதுகிலேயசையும்படி வில்லிடத்தே அம்பைத்தொடுத்து அதனைச்சொரிந்தார்; அப்பொழுது விசும்பு தூர்ந்ததென்க.

தூணியைப்பிணித்த கச்சுமாம். (௧௨௩)

2225. திணம்பிறங்ககலமுந்தோளுநெற்றியு
மணங்கருஞ்சரங்களினழுத்தியையென
மணங்கமழ்வருபுனன்மறனுமாந்தரிற்
பிணங்கமர்மலைந்தனர்பெற்றியின்னதே.

இ - ள். சரங்களால் வருத்துதற்கரிய மார்புமுதலியவற்றிலே அச்சரங்களை அழுத்துதலிற் பெருகின குருதியிலேநின்று புதுப்புனலிற் போர்

செய்யுமாந்தரைப்போலே பிணங்குகின்ற அமரை மேற்கொண்டவர்தன்
மை யென்னென்ற

அது மேற்கூறுகின்றார். (௧௨௪)

2226. கழித்தனர்கனலவாள்புகைந்துகண்கடீ
விழித்தனதீந்தனவிமைகள்கூற்றெனத்
தெழித்தனர்திறந்தனரகலமின்னுயி

இ - ள். அவர், கூற்றுப்போலே கோபித்தார் ; கோபித்தலிற் கண்கள் தீப்போலவிழித்தன ; அதனால் இமைகள் தீந்தன ; அக்கோபத்தை முடித்தற்கு வாள் புகைந்து கனலும்படி உறைகழித்தார் ; கழித்து அகலத்தைத் திறந்தார் ; திறந்து உயிரைப்போக்கினார் ; அதன்பின்பு வேலாற்பொருகின்றவர் போரரவம் மிக்கதென்க. (௧௨௫)

2227. பொருங்களத்தாடவர்பொருவில்பைந்தலை
யரும்பெறற்கண்ணியோடற்றுவீழ்வன
கருங்கனிப்பெண்ணையங்கானங்கால்பொர
விருங்கனிசொரிவனபோன்றவென்பவே.

இ - ள். தும்பைமாலையோடும் பொருமாடவர் செவ்வித்தலைகளற்றுக் களத்தேவீழ்கின்றவை, கனியையுடைய பனங்காடு காற்றடித்தலின், அப்பழத்தைச்சொரிவனபோன்றனவென்க.

இது, முதற்கூறிய அம்பாலும் வாளாலும் தலைகளற்றதற்குவமை. (௧௨௬)

2228. பணைமுனிந்தாலுவபைம்பொற்றாரின
கணைவிசைதவிர்ப்பனகவரிநெற்றிய
துணையமையிளமையதோற்றமிக்கன
விணையுயிர்ப்புரவியோடிவுளியேற்றவே.

இ - ள். பந்தியினிற்றலை வெறுத்து ஆலுவன ; தாரின ; தவிர்ப்பன ; நெற்றியன ; போரிற்கு உதவியாயமைந்த இளமையன ; வடிவுமிக்கனவாகிய புரவியும் புரவியும் தம்மிற் போரைத்தொடங்கினவென்க. (௧௨௭)

2229. கூருளிமுகம்பொரக்குழிசிமாண்டன
வாரொளியமைந்தனவாய்பொற்சூட்டின
காரொளிமின்னுமிழ்தகையகாலியற்
றேரொடுதேர்தமுட்சிறந்துசேர்ந்தவே.

இ - ள். உளிவாயால் தொழிற்படுதலின், நடுவுநிற்குங்குறடு மாண்டன ; அதனிற்றைத்த ஆர் அமைந்தன ; சூட்டின ; காரின் மின்னொளியைக் காலும் தகைமையனவாகிய உருளையாற்செல்லுதலையுடைய தேருந்தேரும் தம்மின்மிக்குப் போரைத்தொடங்கினவென்க. (௧௨௮)

2230. அஞ்சனமெழுதினகவளமார்ந்தன
குஞ்சரங்கூற்றொடுகொம்மைகொட்டுவ
வஞ்சனவரைசிறகுடையபோல்வன
மஞ்சிவர்குன்றெனமலைந்தவேழமே.

இ - ள். எழுதப்பட்டன; ஆர்ந்தன; கூற்றை நன்குமதித்துக் கொம்மைகொட்டுவன; ஓடுகின்றவிசையாற் பறக்கின்ற மலையையொப்பனவாகிய குஞ்சரமும் வேழமும் குன்றுகள் மலைந்தவென்ன மலைந்தவென்க.
மஞ்சு, கொடிக்குவமை. (கஉ௯)

1231. மாக்கடற்பெருங்கலங்காவின்மாறுபட்
டாக்கியகயிறிரிந்தோடியெங்கணும்
போக்கறப்பொருவனபோன்றுதீப்படத்
தாக்கினவரசுவாத்தம்முளென்பவே.

இ - ள். பெருங்கலங்கள் நங்கூரத்திற்கட்டியகயிறு காற்றுலற்று எவ்விடத்தினும் போக்கறவோடி மாறுபட்டுப் பொருவனபோலே, அரசரேறிய யானைகள் கோடுங்கோடும் சந்தித்துத் தீப்பிறக்கும்படி தம்மிற் பொருதனவென்க. (கங0)

2232. விடுசரம்விசும்பிடைமிடைந்துவெய்யவன்
படுகதிர்மறைந்திருள்பரந்ததாயிடை
யடுகதிரயிலொளியரசர்மாமுடி
விடுகதிர்மணியொளிவெயிலிற்காய்ந்தவே

இ - ள். சரம் விசும்பிடத்தே நெருங்குதலின் வெய்யவன்கதிர்கள் மறைந்து இருள்பரந்தது; அப்பொழுது, அவ்விருளை, படைக்கலங்களினொளியும் மணியொளியும் வெயில் கெடுக்குமாறுபோலக் கெடுத்தனவென்க. ()

2233. பூண்குலாம்வனமுலைப்பூமிதேவிதான்
காண்கலேன்கடியனகண்ணினாலெனச்
சேண்குலாங்கம்பலஞ்செய்யதொன்றினான்
மாண்குலாங்குணத்தினான்மறைந்திட்டாளரோ.

இ - ள். மண்மகடான், தனது நற்குணத்தாலே, இங்ஙனம் கடியமறங்களை என்கண்ணாற் காணமாட்டேனென்றுகருதிப் பெரிய நிலமெல்லாம் பரந்த உதிரமென்கின்ற செய்யதொரு படத்தாலே மறைந்தாளென்க.
குணத்தினாலும் பாடம். (கஙஉ)

வேறு.

2234. கலைக்கோட்டவகலல்குற்கணங்குழையார்கதிர்மணிப்பூண்
முலைக்கோட்டாலுழப்பட்டமொய்ம்மலர்த்தாரகன்மார்பர்

மலைக்கோட்டவெழில்வேழந்தவநூறிமதயானைக்
கொலைக்கோட்டாலுழப்பட்டுக்குருதியுட்குளித்தனரே.

கலையையுடைய வல்குல்; கோடு - பக்கம்.

இ - ள். கோட்டவாகிய அல்குலையுடைய மகளிர் முலைக்கோட்டாலுழப்பட்டமார்பர், இப்பொழுது மலைக்குவட்டின்றன்மையையுடையவாகிய வேழத்தைநூறி அவற்றின் கோட்டாலுழப்பட்டுக் குருதியுள்ளே குளித்தாரென்க. (௬௩௩)

2235. மணமாலைமடந்தையர்தமெல்விரலாற்றொடுத்தணிந்த
விணர்மாலையிருங்குஞ்சியீர்ங்குருதிப்புனலலைப்ப
நிணமாலைக்குடர்சூடிநெருப்பிமையாநெய்த்தோரிற்
பிணமாலைப்பேய்மகட்குப்பெருவிருந்தயர்ந்தனரே.

ஈர்க்கும் குருதி, விகாரம்.

இ - ள். மணஞ்செய்த இயல்பையுடைய மகளிரணிந்த மாலையையுடைய குஞ்சியை இழுக்கோடுங் குருதிநீர் அலைப்ப, அந்நெய்த்தோரிலே நெருப்புப்போலே விழித்துக்கிடந்து நிணவொழுங்கையுடைய குடலைச்சூடிப் பிணத்தைத்தின்னும் இயல்பையுடைய பேய்க்குத் தம்மை விருந்துசெய்தாரென்க. (௬௩௪)

2236. தோலாப்போர்மறமன்னர்தொடித்தோள்களெடுத்தோச்சி
மேலாண்மேனெருப்புமிழ்ந்துமின்னிலங்குமில்வாளாற்
காலாசோடறவெறிந்தகனைகழற்காலலைகடலு
ணீலநீர்ச்சுறவினம்போனெய்த்தோருட்பிறழ்ந்தனவே.

இ - ள். மன்னர் தோளையுயர்த்து வாளாலே ஓச்சி மேலாண்மேல் வெட்டுகின்றகாலத்து, * சந்நாகத்தோடேயறும்படி வெட்டப்பட்டகழற்கால்கள், கடலினீரிலே நீலச்சுறவினம் பிறழ்ந்தாற்போலே குருதியிலே பிறழ்ந்தனவென்க. (௬௩௫)

2237. கருவியூடுளங்கழிந்துகணைமொய்ப்பக்கதஞ்சிறந்து
குருவிசேர்வரைபோன்றகுஞ்சரங்கொடியணிந்த
வுருவத்தேரிறமுருக்கியுருணேமிசுமந்தெழுந்து
பருதிசேர்வரைபோலப்பகட்டினம்பரந்தனவே.

இ - ள். பலகாரத்தினூடேபோய்க் கணைகள்மொய்த்தலிற் சிலகுஞ்சரங்கள் நினைவுபோய்க் குருவிசேர்ந்த வரைபோன்றன; சிலபகட்டினம் பரிதியெழுந்துசேர்ந்த வரைபோலக் கதஞ்சிறந்து முருக்கித் தேருருளையைச் சுமந்து பரந்தனவென்க.

இற முருக்கி - பொடியாகமுறித்து. (௬௩௬)

* சந்நாகம்=ஸந்நாஹம் - கவசம்.

2238. மாலைவாய்நெடுங்குடைமேன்மதயானைக்கைதுணிந்து
கோலநீள்கொழுங்குருதிகொளவீழ்ந்துகிடந்தன
மேலைநீள்விசும்புறையும்வெண்மதியம்விசும்பிழுக்கி
நீலமாசுணத்தோடுநிலத்திழிந்ததொத்தனவே.

இ - ள். யானையின்கோலம் குருதியைக்கொள்ளும்படி கைகள் அற்றுக் குடைமேலே வீழ்ந்துகிடந்தவை, முன்பு விசும்பிலேயுறையுமதியம் அதனைத்தப்பிக் கரும்பாம்போடே நிலத்தே வீழ்ந்ததன்மையை யொத்தன வென்க.

மேலை, ஐ - அசை. (௧௩௭)

2239. அஞ்சனநிறநீக்கியரத்தம்போர்த்தமருழக்கி
யிங்குலிகவிறுவரைபோன்றினக்களிறிடைமிடைந்து
குஞ்சரங்கள்பாய்ந்திடவிற்குமிழ்விட்டுமிழ்குருதி
யிங்குலிகவருவிபோன்றெவ்வாயுந்தோன்றினவே.

இ - ள். முற்படவே அஞ்சனநிறத்தைப்போக்கி அரத்தத்தைப்பூசுதலின், சாதிலிங்கத்தையுடைய பெரியவரையையொத்து மிடைந்த இனக்களிறுகள், அமரையுழக்கிச்சென்று பகைவர்யானைகளைப்பாய்தலின், உமிழ்குருதி சாதிலிங்கவருவிபோலே எங்குந்தோன்றினவென்க. (௧௩௮)

2240. குஞ்சரந்தலையடுத்துக்கூந்தன்மாக்காலணையாச்
செஞ்சோற்றுக்கடனீங்கிச்சினவுவாள்பிடித்துடுத்த
பஞ்சிமேற்கிடந்துடைஞாண்பதைத்திலங்கக்கிடந்தானை
யஞ்சிப்போந்தினநரியோடோரிநின்றலறுமே.

நீங்கி, நீங்க. பஞ்சி, ஆகுபெயர்.

இ - ள். குஞ்சரத்தைத் தலையணையாகவடுத்து மாவைக் காலணையாக அடுத்து வாளைப்பிடித்து உடுத்ததுகிலின்மேலே வல்லிக்கயிறுகிடந்து துளங்கியிலங்கச் செஞ்சோற்றுக்கடன் நீங்கும்படி பட்டுக்கிடந்தவனை அஞ்சிக் குதித்துப்போய்நின்று இனநரியும் ஓரியும் அலறுமென்க. (௧௩௯)

2241. காதலார்க்கமிர்தீந்தகடற்பவளங்கடிகைவா
யேதிலாப்புள்ளுண்ணக்கொடேமென்றுவாய்மடித்துக்
காதணிந்தபொற்றோடுங்குண்டலமுநகநகா
வீதைந்தவரைமார்பர்விஞ்சையர்போற்கிடந்தனரே.

இ - ள். வரைமார்பர், தம்மனைவியர்க்கு அமிர்தீந்தவாயை அவ்வமிர்தையுண்டற்குக் காரணமில்லாத பறவைகளுண்ணக் கொடேமென்றாற்போல வாயைமடித்து, தோடும் குண்டலமும் நகத் தாமும் நக்குவிஞ்சையர்போற் கிடந்தாரென்க.

ஏது - காரணம். உயிர் போகாதாரைப்போற் கிடத்தலின், 'விஞ்சையர்போல்' என்றார். (௧௪௦)

